## தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.

**அகில விராஜ் காரியவசம்**
**கல்வி அமைச்சர்**

## முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீன மயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## வழிகாட்டல்

**டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**
ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## இணைப்பாக்கம்

**யூ. எல். உவைஸ்**
உதவி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## பதிப்பாசிரியர் குழு

**பேராசிரியர் பீ. அத்துக்கொரல**
ஸ்ரீ ஜயவர்த்தனபுர பல்கலைக்கழகம்

**கலாநிதி டீ. பி. எப். சந்துரு குமார**
சிரேஷ்ட விரிவுரையாளர், ஸ்ரீ ஜயவர்த்தனபுர பல்கலைக்கழகம்

**தம்ம திஸாநாயக**
சிரேஷ்ட விரிவுரையாளர், கொழும்பு பல்கலைக்கழகம்

**ஏ. எல். எஸ். அபேவிக்கிரம**
சிரேஷ்ட விரிவுரையாளர், தேசிய கல்வி நிறுவகம், மஹரகம

**எஸ். கருணாகரன்**
விரிவுரையாளர், தேசிய கல்வி நிறுவகம், மஹரகம

**யூ. எல். உவைஸ்**
உதவி ஆணையாளர், கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## எழுத்தாளர் குழு

**யூ. எல். சிபார்தீன் மரிக்கார்**

ஆசிரிய ஆலோசகர், வலயக்கல்வி பணிமனை, வத்தேகம

**எம். எம். எம். அஸ்மி**

ஆசிரியர், சேர் ராசிக் பரீட் வித்தியாலயம், பலபிட்டிய

**எம். எஸ். இங்கர்சால்**

ஆசிரியர், சென்ஜோன்ஸ் பொஸ்கோஸ் வித்தியாலயம், ஹட்டன்

**கலாநிதி டபிள்யூ. எம். சாந்த வனசிங்ஹ**

விரிவுரையாளர், இலங்கை திறந்த பல்கலைக்கழகம்

**எம். கே. கிங்ஸ்லி பிரியந்த**

விரிவுரையாளர், றுகுணு கல்வியற் கல்லூரி வலஹந்துவ

**எச். எச். அருண இந்திரசேன**

ஆசிரிய ஆலோசகர், வலயக்கல்வி பணிமனை, பலாங்கொடை

**சீ. எஸ். ஜயசிங்ஹ**

ஆசிரிய மத்திய நிலைய முகாமையாளர் (ஓய்வு), ஹொறண

**கே . ஏ. நிலந்த புஸ்ப குமார**

ஆசிரியர், பொல்கொட மகாவித்தியாலயம்

## மொழிப் பதிப்பாசிரியர்

**நாராயணன் மல்லிகாதேவி**

விரிவுரையாளர், பௌத்த பாளி பல்கலைக்கழகம், ஹோமாகம

## சரவை நோக்கு

**எம். எச். எம். புஹாரி**

ஆசிரிய ஆலோசகர் (ஓய்வு), வலயக்கல்வி காரியாலயம், கேகாலை

## இறுதி மதிப்பீடு

**கலாநிதி ஏ. எஸ். சந்திரபோஸ்**

சிரேஷ்ட விரிவுரையாளர், இலங்கை திறந்த பல்கலைக்கழகம்

## கணினி வடிவமைப்பு

**எம். எஸ். எப். றுஸ்மினா**

கணினி உதவியாளர், கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**எஸ். ஐஸ்வரியா**

கணினி உதவியாளர், கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

# பொருளடக்கம்



# சட்டமும் நீதியும்

**அறிமுகம்**

*சமூகத்தில் வாழுகின்றபோது சட்டதிட்டங்களை மதித்து அவற்றுக்கு கீழ்ப்படிந்து நடப்பதென்பது பிரசைகளான நம் அனைவரினதும் கடமையாகும். சட்டம் தொடர்பாக அறியாமல் இருத்தல் அதிலிருந்து தப்பிச் செல்வதற்கான வழியன்று எனும் கோட்பாடு, அனைவரும் சட்டத்தைப் பற்றிய விளக்கமுடையவர்களாக இருத்தல் வேண்டும் என்பதைத் தெளிவுறுத்துகிறது. இந்த அத்தியாயத்தின் நோக்கம் சட்டத்தைப் பற்றிய அடிப்படை அறிவை உங்களுக்கு வழங்குவதாகும். அவ்வகையில், இவ்வத்தியாயத்தைக் கற்பதன் மூலம் சட்டம் என்றால் என்ன? சட்டத்தின் இயல்புகள், சட்டத்தின் மூலாதாரம், சட்டத்தின் வகைகள் சட்டத்தின் நடைமுறை என்ற வகையில் இலங்கையிலுள்ள சட்டங்கள், நீதிமன்ற முறைமை மற்றும் வேறு நீதி வழங்கும் முறைகள் போன்றன பற்றி நீங்கள் அறிந்து கொள்ள முடியும்.*

### சட்டத்திற்கான வரைவிலக்கணம்

''சட்டம் என்பது, ஒரு நாட்டின் அல்லது சமூகத்தின் முறைப்படுத்தப்பட்ட மனித நடத்தைகள், செயற்பாடுகள் என்பவற்றைக் கட்டுப்படுத்துவது மற்றும் சமூக நன்மை கருதி விதிக்கப்படும் ஒழுங்குகளாகும்.'' என எளிய முறையில் வரைவிலக் கணப்படுத்தப்படுகிறது. சட்டம் என்பதற்குப் பல்வேறு அறிஞர்கள் பல்வேறுபட்ட வரைவிலக்கணங்களை முன்வைத்துள்ளனர்.

அந்த வகையில் கிரீன் மற்றும் ஜோன் ஒஸ்டின் என்போரது வரைவிலக்கணங்களை நோக்குவோம்.

***சட்டம் என்பது, அரசினால் செயற்படுத்தப்படும் உரிமைகள் மற்றும் கடமைகள் தொடர்பான ஒரு தொகுதியாகும்.*** (ரீ. எச். கிரீன் - T.H. Green)

***சட்டம் என்பது, இறைமையுடைய அரசியல் அதிகாரத்தால் விடுக்கப்படும் கட்டளையாகும். அதனை மீறுவது தண்டனைக்குரிய குற்றமாகும்.*** (ஜோன் ஒஸ்டின் - John Austin)

ஒவ்வொரு சமூகமும் சட்டத்தின் அடிப்படையிலேயே நிருவகிக்கப்பட வேண்டும். சட்டத்தை மதித்தலும் சட்டத்திற்குக் கீழ்ப்படிதலும் ஒவ்வொரு பிரசையினதும் கடமை யாகும். சட்டம் செயற்படும் சமூகமொன்றில் நீதி, சமாதானம், பாதுகாப்பு முதலிய

இலட்சணங்களை அவதானிக்கலாம். சட்டத்தின் பிரதான நோக்கம் பொதுமக்களின் வாழ்க்கை, உரிமைகள் மற்றும் சொத்துகள் ஆகியன பாதுகாக்கப்படும் வகையில் மனித நடவடிக்கைகளை நிருவகிப்பதன் ஊடாக நீதியை நிலைநாட்டுவதாகும். சட்டத்துடன் இணைந்த மற்றுமொரு எண்ணக்கரு நீதியாகும். நீதி என்பதைச் சட்டத்தை அடிப்படையாகக் கொண்ட பொதுவான நடத்தை அல்லது கவனிப்பு என சுருக்கமாகக் குறிப்பிடலாம். பக்கச்சார்பின்றி சகல தரப்பினரதும் கருத்துகளைச் செவிமடுத்து சட்டத்தை நடைமுறைப்படுத்துவதன் மூலம் நீதி நிலைநாட்டப்படும்.

சட்டமானது நீதியான முறையிலும் நடுநிலையான வகையிலும் அமைய வேண்டும். ஒரு நாட்டில் சட்டம் சிறப்பாகச் செயற்படும்போது மக்கள் சட்டத்தை மதிப்பதுடன் சட்டத்தின் மீது நம்பிக்கை கொண்டும் செயற்படுவர். அதன் மூலம் நீதியான சமூகமொன்று உருவாகும்.

**நீதியை நிலைநாட்டுவதில் பின்வரும் விடயங்கள் மிக முக்கியமாகின்றன.**

- தனக்கு எதிராக முன்வைக்கப்பட்டுள்ள குற்றச்சாட்டினை அறிந்துகொள்வதற்கான உரிமை.
- தனக்காகத் தான் நீதிமன்றில் ஆஜராவதற்கு அல்லது சட்டத்தரணி ஒருவர் மூலம் கருத்துகளை முன்வைப்பதற்கான உரிமை.
- நீதியானதும் பக்கச்சார்பற்றதுமான தீர்ப்பினைப் பெற்றுக்கொள்வதற்கான உரிமை.

## சட்டத்தின் இயல்புகள்

சட்டத்தின் முன் சகலரும் சமமாகவே மதிக்கப்படுவர். சட்டத்தின் பாதுகாப்பு சகலருக்கும் பொதுவானது. சிறந்த சட்டத் தொகுதிகளையுடைய நாகரிகமடைந்த சமூகத்தில் நிலவும் அடிப்படைப் பண்புகள் சில கீழே தரப்பட்டுள்ளன.

- அதிகாரத்தை அடிப்படையாகக் கொண்ட அரசு ஒன்றின் மூலம் விதிக்கப்படுதல்
- மனித நடத்தைகள் மற்றும் செயற்பாடுகள் என்பவற்றைக் கட்டுப்படுத்தும் நோக்கில் விதிக்கப்படுதல்
- நீதியானதும் நேர்மையானதுமான தன்மை காணப்படல்
- மாற்றமடைகின்ற சமூக தேவைகளுக்கேற்ப மாறும் தன்மை உடையதாயிருத்தல்
- சமூக நன்மையை நோக்காகக் கொண்டு விதிக்கப்படுதல்
- விளக்கமாகவும் தெளிவாகவும் இனங்காணக்கூடியதாக இருத்தல்
- சட்டத்தை மீறுவோருக்கு தண்டனை வழங்கக் கூடியதாக இருத்தல்

## சட்டத்தின் மூலாதாரம்

சட்டம் உருவாவதில் தாக்கம் செலுத்தும் காரணிகள் அல்லது சட்டம் தொடர்பான தகவல்கள் வழங்கப்படும் முறைகள் சட்டத்தின் மூலாதாரங்களாகக் கருதப்படுகின்றன. அவ்வாறான மூலாதாரங்கள் சில பின்வருமாறு,

| | | |
|---|---|---|
| 1. **அரசியல் யாப்பு** | - | அரசு ஒன்றின் உயர் சட்டமாக அமைவது அரசியல் யாப்பாகும். |
| 2. **பல்வேறு கட்டளைச் சட்டங்கள்** | - | பாராளுமன்றத்தால் காலத்துக்கு காலம் நிறைவேற்றப்படும் கட்டளைச் சட்டங்களும் சட்ட மூலாதாரங்களாகக் கருதப்படும். |
| 3. **நீதிமன்றத் தீர்ப்புகள்** | - | நீதிமன்றங்களால் வழங்கப்படும் தீர்ப்புகள் பிற்காலத்தில் வழக்குத் தீர்ப்புகளை வழங்குவதற்காகப் பயன்படுத்தப்படும். |
| 4. **சட்ட வல்லுநர்களின் கருத்துகளும் சிந்தனைகளும்** | - | நடைமுறையிலுள்ள சட்டங்கள் ஆய்வு செய்யப்பட்டு வெளியிடப்ப டும் அறிஞர்களின் கருத்துகளும் சட்ட மூலதாரங்களாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. |
| 5. **பழக்க வழக்கங்கள்** | - | சமூகம் ஏற்றுக்கொண்ட சிறந்த நிலையான பழக்க வழக்கங்களும் மரபுகளும் சட்ட மூலாதாரங்களாகக் கொள்ளப்படும். |
| 6. **சமயம்** | - | பல்வேறு சமயங்களையும் அடிப் படையாகக் கொண்ட சட்டங்களும் சட்டத்தின் மூலாதாரமாகக் கொள்ளப்படுகின்றன. உதாரணம்: முஸ்லிம் சட்டம், தேவாலயச் சட்டம். |

## சட்டத்தின் வகைகள்

சட்டம் செயற்படும் முறையைக் கொண்டு அதனைத் தேசிய சட்டம், சர்வதேசச் சட்டம் என இரு வகைப்படுத்தலாம்.

### தேசிய சட்டம்

ஒரு நாடு தனது எல்லைக்குள் செயற்படுத்தும் வகையில் விதிக்கும் சட்டங்கள் தேசிய சட்டமாகும். நாட்டின் தேவைக்கேற்ப சட்டம் பிறப்பிக்கப்படுவதனால் தேசிய சட்டமானது, நாட்டுக்கு நாடு வேறுபடும். இந்த உள்நாட்டுச் சட்டத்தை அரசியல் யாப்புச் சட்டம், குற்றவியல் சட்டம், குடியியல் (சிவில் சட்டம்) என மூன்று வகைக்குள் அடக்கலாம். இதனைப் பின்வரும் வரிப்படத்தின் மூலம் விளக்கலாம்.



உரு 1.1 தேசியச் சட்டத்தின் வகைகள்

**குற்றவியல் சட்டம் மற்றும் குடியியல் சட்டம் ஆகியவற்றுக்கிடையிலான பிரதான வேறுபாடுகள் சில பின்வருமாறு,**

| **குற்றவியல் சட்டம்** (Criminal Law) | **குடியியல் சட்டம்** (Civil Law) |
|---|---|
| • தனிநபர் ஒருவர் மற்றொரு நபரின் வாழ்க்கைக்கு அல்லது சொத்துகளுக்குத் தீங்கிழைக்கும் போது குற்றவியல் சட்டம் செயற்படும்.<br>• குற்றவியல் சட்டத்தில் பல்வேறு பிரிவுகளைக் காண முடியாது. ஆயினும், சிறு குற்றங்கள், பாரிய குற்றங்கள் என அவற்றை வகைப்படுத்தலாம்.<br>• குற்றங்களுக்குரிய தண்டனைகள் வழங்கப்படும்<br>உ-ம் - சொத்துகளை அரசுடைமையாக்குதல், மரண தண்டனை, சிறைத் தண்டனை.<br>• குற்றவியல் சட்டத்தில் 1979 குற்றவியல் சட்டக் கோவை மற்றும் 1833 தண்டனை சட்டக் கோவை என்பன பிரதானமானவை.<br>• குற்றவியல் சட்டத்தில் தண்டனை வழங்கல் மற்றும் புனர்வாழ்வளித்தல் என்பவற்றுக்கு முக்கியத்துவம் வழங்கப்படும்.<br>• குற்றவியல் சட்டத்தின் கீழ் பொலிஸ் அல்லது சட்டமா அதிபர் திணைக்களம் குற்றச்சாட்டை முன்வைக்கும். | • தனி நபர்களிடையே ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான சட்டம் குடியியல் சட்டம் அல்லது சிவில் சட்டமாகும்.<br>• சிவில் சட்டத்தில் பல்வேறு உப பிரிவுகளை அவதானிக்கலாம்.<br>உ-ம் - ஒப்பந்தச் சட்டம், வியாபாரச் சட்டம், குடும்பச் சட்டம்<br>• சிவில் குற்றங்களுக்கு நஷ்டஈடு வழங்கல், தண்டப் பணம் செலுத்தல் முதலிய தண்டனைகள் வழங்கப்படும்<br>• சிவில் சட்டம் தொடர்பாக சிவில் சட்டக்கோவை பிரதானமானது.<br>• சிவில் சட்டத்தில் தீங்கு நிவர்த்தி செய்யப்படுதல் மற்றும் இயல்பு நிலையை ஏற்படுத்தல் என்பவற்றுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.<br>• சிவில் வழக்கின்போது பிரச்சினையோடு தொடர்புடைய தனி நபர் தரப்புக் குற்றச்சாட்டை முன்வைக்கும். |

குற்றவியல் சட்டத்தில் அரசுக்கெதிரான செயற்பாடுகள், சமூக சமாதானத்திற்கு ஊறு விளைவிக்கும் செயற்பாடுகள், கொலை, மரணத்தை ஏற்படுத்தும் வகையில் சரீரத் தாக்குதல்கள் மேற்கொள்ளல், காயமேற்படுத்தல், பாலியல் வன்முறை, கற்பழிப்பு, பொதுச் சொத்துகளுக்கு தீங்கிழைத்தல், சொத்துகளைத் திருடுதல், கொள்ளையடித்தல், திருட்டுப் பொருள்களைத் தன்வசம் வைத்திருத்தல், போதைப்பொருள் வைத்திருத்தலும் விற்பனை செய்தலும் முதலியன தண்டனைக்குரிய பாரிய குற்றச் செயல்களாகக் கருதப்படும்.

### சர்வதேச சட்டம்

''அரசுகள் மற்றும் அரசுகளுக்கு இடையிலான தொடர்புகளையும் சர்வதேச அமைப்புகளைப் போன்று அரச சார்பற்ற நிறுவனங்களையும் தனிநபர்களையும் கட்டுப்படுத்தும் சட்டமே சர்வதேசச் சட்டம்'' என ஸ்டார்க் குறிப்பிடுகின்றார். ஒரு நாடு ஏனைய நாடுகளுடன் மேற்கொள்ளும் தொடர்புகள் சர்வதேசச் சட்டத்தின் மூலம் கட்டுப்படுத்தப்படும். தற்காலத்தில் சர்வதேச சட்டத்துடன் இணைந்த சட்டப் பிரிவுகள் பலவும் காணப்படுகின்றன. உதாரணமாக சர்வதேச மனித உரிமைகள் சட்டம், சுற்றாடல் சட்டம், முதலீட்டுச் சட்டம், சமுத்திரச் சட்டம் முதலியவற்றைக் கூறலாம். சர்வதேச குற்றவியல் நீதிமன்றம், சர்வதேச நீதிமன்றம் என்பன இத்தகைய சர்வதேசச் சட்டங்களை மீறும்போது சட்டத்தைப் பாதுகாப்பதற்காக முக்கிய பங்காற்றுகின்றன.

## இலங்கையில் செயற்படும் சட்டத்தொகுதி

இலங்கையில் நடைமுறையிலுள்ள பொதுச் சட்டமாக உரோமன் டச்சு சட்டம் (Roman Dutch Law) விளங்குகிறது. அவை வருமாறு,

1. ***கண்டியச் சட்டம்*** (Kandyan Law)

முற்காலத்தில் கண்டி இராச்சியத்தில் செயற்பட்ட சட்டம், கண்டியச் சட்டம் என அழைக்கப்படுகிறது. ஆங்கிலேயர் ஆட்சியின்போது இச்சட்டம் கண்டி இராச்சிய எல்லைக்குள் வாழ்ந்த சிங்களவர்களுக்கு மட்டுமே உரித்தாயிருந்தது. தற்காலத்திலும் கண்டிச் சிங்களவர்களின் விவாகம், விவாகரத்து, சொத்துரிமை முதலிய விடயங்கள் கண்டிச் சட்டத்தின் பிரகாரம் செயற்படுத்தப்படுகின்றன. தேவை ஏற்படின், கண்டிச் சிங்களவர்கள் நாட்டில் நடைமுறையிலுள்ள பொதுச் சட்டத்தின் கீழும் தம்மை உட்படுத்திக் கொள்ளலாம்.

2. ***தேசவழமைச் சட்டம்*** (Thesawalamai Law)

வடக்கு மாகாணத்தில் தமிழர்களின் சம்பிரதாயங்களின் அடிப்படையில் இச்சட்டம் உருவாக்கப்பட்டுள்ளது. 1706 ஆம் ஆண்டு இங்கு நடைமுறையிலிருந்த மரபுகளும் வழக்காறுகளும் சட்டமாகத் தொகுக்கப்பட்டன. தற்போதும் இலங்கையில் வடமாகாணத் தமிழ் மக்களுக்குரிய சட்டமாக இது திகழ்கின்றது. இச் சட்டத்தின் மூலம் அவர்களின் மரபுகள், உரிமைகள், சொத்துரிமை போன்ற விடயங்கள் நிருவகிக்கப்படுகின்றன.

3. ***முஸ்லிம் தனியார் சட்டம்*** (Muslim Law)

இஸ்லாம் சமயத்தைப் பின்பற்றுகின்ற மக்களுக்குரிய சட்டமே முஸ்லிம் தனியார் சட்டமாகும். இச்சட்டத்தின் மூலாதாரங்களாக அல் குர்ஆன், அல் ஹதீஸ், இஜ்மாஉ, கியாஸ் என்பன அமைகின்றன. 1806 ஆம் ஆண்டு தயாரிக்கப்பட்ட முஹம்மதியர் சட்டத்தொகுப்பே இன்று இலங்கையில் செயற்படுத்தப்படுகிறது. இதில் முஸ்லிம்களின் விவாகம், விவாகரத்து, மரபுகள், உரிமைகள், வளர்ப்புப் பிள்ளைகள்,

சொத்துரிமை முதலிய அம்சங்கள் உள்ளடங்குகின்றன. 1929 ஆம் ஆண்டு தொடக்கம் முஸ்லிம்களின் விவாகரத்து தொடர்பாக 'காதி' நீதிமன்றங்கள் ஆரம்பிக்கப்பட்டன.

*அல் குர்ஆன்:-* இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்களுள் முதன்மையானது ''அல்குர்ஆன்'' ஆகும். இது இறைவனால் முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட வேதமாகும்.

*அல் ஹதீஸ்:-* அல்குர்ஆனை அடுத்து இரண்டாவது மூலாதாரமாக ''அல் ஹதீஸ்'' விளங்குகின்றன. முஹம்மது நபி (ஸல்) அவர்களின் சொல், செயல், அங்கீகாரம் என்பனவாகும்.

*இஜ்மாஉ:-* இஸ்லாமிய வழக்கில் ''இஜ்மாஉ'' என்ற அரபுப் பதத்தை, ஏகோபித்த முடிவு எனக் குறிப்பிடலாம். முஹம்மது நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னர் தோன்றுகின்ற ஏதேனும் பிரச்சினைக்கான தீர்வு அல்குர்ஆனிலோ ஹதீஸிலோ காணப்படாத விடத்து, இக்காலத்தில் வாழ்ந்த முஜ்தஹிதுகள் (அறிஞர்கள்) அப்பிரச்சினைகளுக்கான தீர்வில் ஒருமித்த கருத்து கொள்வதையே குறிக்கும்.

*கியாஸ்:-* இஸ்லாமிய வழக்கில் ''கியாஸ்'' என்பது, அல்குர்ஆனிலோ ஹதீஸி லோ தீர்வு சொல்லப்படாத ஒரு புதிய பிரச்சினை தோன்றினால் அதனைக் குர்ஆன், ஹதீஸில் தீர்வு சொல்லப்படாத பிரச்சினையோடு ஒப்புநோக்கி அதன் தீர்வை புதிய பிரச்சினைக்கும் பயன்படுத்துவதைக் குறிக்கும்.

*நாட்டில் சட்டத்தையும் சமாதானத்தையும் நிலைநாட்டி சிறந்த சமூகம் ஒன்றைக் கட்டியெழுப்புவதே அரசின் கடமையாகும். அதற்காக நாட்டில் ஏற்படும் பிரச்சினைகள், சட்ட மீறல்கள் என்பவற்றின் போது தேசிய சட்டத்திற்கேற்ப செயற்படுவது அவசியமாகும். அதேபோன்று ஏனைய நாடுகளுடன் தொடர்புகளை மேற்கொள்ளும்போது சர்வதேசச் சட்டத்திற்கமைவாகச் செயற்பட்டு தனது நாட்டின் கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்வதும் முக்கியமாகும்.*

**செயற்பாடு 1-1**

- சட்டம் என்பதன் மூலம் நீர் விளங்கிக் கொள்வது என்ன?
- ஒரு நாட்டிற்கு சட்டம் ஏன் தேவைப்படுகிறது என்பதை விளக்குக.
- இலங்கையில் நிலவும் விசேட சட்டங்களைச் சுருக்கமாக விளக்குக.

## இலங்கையின் நீதிமன்றமுறைமை

***நீதிமன்ற முறைமையின் வரலாற்று ரீதியான வளர்ச்சி***

இலங்கை நீதிமன்ற முறைமையின் வரலாற்று ரீதியான வளர்ச்சி, மன்னர் ஆட்சிக் காலம் வரை விரிவடைந்து செல்கின்றது. அங்கு அரசனே நீதிமன்றத்தின் உயர் அதிகாரியாக விளங்கியதுடன், எழுதப்பட்ட சட்டங்கள் மூலமே நீதிமன்றம் செயற்பட்டது. அரச நீதிமன்றத் தொகுதியின் இறுதி மேன் முறையீட்டு நீதிபதியாக அரசரே செயற்பட்டார்.



உரு 1.2 கண்டி மன்னர் நீதி விசாரணை செய்த இடம்

போர்த்துக்கேயர் பண்டைய சிங்கள நீதிமன்ற முறையைப் பின்பற்றினர். கோரளைமார், விதானைமார், திசாவைமார் என்போரால் நீதிமன்ற அதிகாரம் செயற்படுத்தப்பட்டதுடன், கிராம சபை முறையும் தொடர்ந்து முன்னெடுக்கப்பட்டது. ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் கொழும்பு, யாழ்ப்பாணம், காலி எனும் மூன்று பிரதான நீதிமன்ற மாவட்டங்கள் செயற்படுத்தப்பட்டன. ஒல்லாந்தரால் முறைமைப்படுத்தப்பட்ட நீதிமன்ற முறைமையொன்றும் செயற்படுத்தப்பட்டுள்ளமை தொடர்பாகவும் அறிய முடிகிறது.

பிரித்தானியர் ஆட்சிக்காலத்தில் சிறப்பான முறையில் ஒழுங்கமைக்கப்பட்ட நீதிமன்ற முறைக்கான செயற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. அவ்வகையில், ஒல்லாந்தரால் இலங்கைக்கு அறிமுகம் செய்யப்பட்ட உரோமன் டச்சுச் சட்டம் பிரித்தானியரின் நீதிமன்ற முறையிலும் செயற்படுத்தப்பட்டது. ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில், இலங்கையின் உயர் நீதிமன்றம் ஒன்றினால் வழங்கப்பட்ட தீர்ப்பை எதிர்த்து பிரித்தானிய உயர் நீதிமன்றமான கோமறைக்கழகத்தில் மேன்முறையீடு செய்யும் முறையும் அக்காலத்தில் காணப்பட்டது. 1972 ஆம் ஆண்டு முதலாம் குடியரசு யாப்பிற்கமைவாக அவ்வதிகாரம் பின்பு நீக்கப்பட்டது. 1973 ஆம் ஆண்டின் யாப்பில் நீதியை அனுபவிப்பதற்கான சட்டத்திற்கு உயர் நீதிமன்றம் இலங்கையின் உச்ச நீதிமன்றமாக ஏற்றுக்கொள்ளப்பட்டதுடன், மேன்முறையீட்டு நீதிமன்றம், மேல்நீதிமன்றம், மாவட்ட நீதிமன்றங்கள், நீதிவான் நீதிமன்றங்கள் என்பனவும் உருவாக்கப்பட்டன.

**செயற்பாடு 1 - 2**

- சுதந்திரத்தின் பின்னர் இலங்கையின் நீதிமன்றத் தொகுதியில் ஏற்படுத் தப்பட்ட விசேட மாற்றங்கள் தொடர்பாக ஆராய்க.

## இன்றைய இலங்கையின் நீதிமன்ற முறைமை

1978 ஆம் ஆண்டு இரண்டாம் குடியரசு யாப்பின் நீதிமன்ற அமைப்பின்படி இலங்கையில் செயற்படும் நீதிமன்றத் தொகுதியின் கட்டமைப்பைப் பின்வரும் உரு சுட்டிக்காட்டுகிறது.




உரு 1.3 இலங்கையின் நீதிமன்றங்கள்

மேலே காட்டப்பட்ட நீதிமன்றத் தொகுதியைத் தவிர, இலங்கையில் விசேட பாராளு மன்றக் கட்டளைச் சட்டத்தினால் நீதிமன்ற அதிகாரங்களுடன் கூடிய தீர்ப்புக் கூறும் அதிகாரம் கொண்ட நியாய சபைகளும் நிறுவனங்களும் உருவாக்கப்பட்டுள்ளன. தொழில் பிரச்சினைகள் தொடர்பாக தொழிலாளர் தீர்வு சபை, முஸ்லிம் விவாகப் பிரச்சினை தீர்வு தொடர்பாக காதி நீதிமன்றம், வாடகை வீட்டுப் பிரச்சினை தொடர்பாக வீட்டு வாடகை சபை முதலிய நிறுவனங்கள் இதற்கு எடுத்துக்காட்டுகளாகும். தற்காலத்தில் நீதிமன்றங்களுக்குச் செல்லாமலேயே பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் வகையில் இணக்க சபைகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இலங்கையின் பிரதான நீதிமன்றங்கள் தொடர்பாகச் சுருக்கமாகப் பார்ப்போம்.

## உயர் நீதிமன்றம்

இலங்கையின் இறுதியானதும் அதி உயர் மேன்முறையீட்டு நீதிமன்ற அதிகாரமுடைய துமான உச்ச நீதிமன்றமே உயர் நீதிமன்றமாகும். உயர் நீதிமன்றத்தின் தலைவர் பிரதம நீதியரசராவார். இந்நீதிமன்றமானது பிரதம நீதியரசருடன் *06* இற்கு குறையாததும் *10* இற்கு மேற்படாததுமான வேறு நீதியரசர்களையும் கொண்டுள்ளது. இவர்கள் அனைவரும் அரசியல் யாப்புப் பேரவையின் அங்கீகாரத்துக்கு அமைய சனாதிபதி

யினால் நியமிக்கப்படுகின்றனர். உயர் நீதிமன்றத்தின் நீதி அதிகாரங்களை உரு 1.4 விளக்குகிறது.




உரு 1.4 உயர் நீதிமன்ற அதிகாரங்கள்



உரு 1.5 உயர் நீதிமன்றம்

## மேன்முறையீட்டு நீதிமன்றம்

உயர் நீதிமன்றத்தை அடுத்து சிரேஷ்ட நீதிமன்றமாக மேன்முறையீட்டு நீதிமன்றம் செயற்படுகின்றது. மேன்முறையீட்டு நீதிமன்றத்தின் பிரதானியாகச் செயற்படுபவர் மேன்முறையீட்டு நீதிமன்றத்தின் தலைவராவார். இதில் தலைவருடன் 06 இற்குக் குறையாமல் 11 இற்கு மேற்படாததுமான நீதிபதிகள் காணப்படுகின்றனர். அரசியலமைப்பு பேரவையின் அங்கீகாரத்துடன் மேன்முறையீட்டு நீதிமன்றத்திற்கான நீதிபதிகளின் நியமனம். சனாதிபதியால் மேற்கொள்ளப்படும். மேன்முறையீட்டு நீதிமன்றம் பின்வரும் அதிகாரங்களைக் கொண்டுள்ளது.




உரு 1.6 மேன் முறையீட்டு நீதிமன்றத்தின் அதிகாரங்கள்

## மாகாண மேல் நீதிமன்றம்

1978 ஆம் ஆண்டு குடியரசு யாப்பின் மீது 1987 இல் மேற்கொள்ளப்பட்ட 13 ஆவது சீர்திருத்தத்திற்கு அமைவாக மாகாண மேல் நீதி மன்றங்கள் உருவாக்கப்பட்டன. இந்நீதிமன்றங்களுக்கான நீதிபதிகள் பிரதம நீதியரசரால் நியமிக்கப்படுவார்கள். மேன்முறையீட்டு நீதிமன்றத்தின் அதிகாரங்களை மாகாண மட்டத்திற்கு விஸ்தரிப்பதே இதன் நோக்கமாகும். குறிப்பிட்ட மாகாணத்தைச் சேர்ந்த பொதுமக்களுக்கு தமது மேன்முறையீடுகளுக்கான தீர்வை தமது மாகாணத்திலேயே பெற்றுக்கொள்வதற்கான வாய்ப்பு இதன் மூலம் கிட்டுகின்றது. மாகாண மேல் நீதிமன்றத்தின் நீதி அதிகாரங்களைப் பின்வரும் உருவில் அவதானிக்கலாம்.




உரு 1.7 மாகாண மேல் நீதிமன்றத்தின் நீதி அதிகாரங்கள்

## மேல் நீதிமன்றம்

பாரிய குற்றச் செயல்கள் தொடர்பான வழக்குகளை விசாரணை செய்யும் அதிகாரம் மற்றும் கடற்பரப்பு நீதி அதிகாரம், வர்த்தக நீதி அதிகாரம் என்பன மேல் நீதிமன்றத்திற்குரியனவாகும். விசாரணை மேற்கொள்ளத்தக்க குற்றச் செயல்களைப் பின்வரும் உரு காட்டுகிறது.




உரு 1.8 மேல் நீதிமன்றத்தின் நீதி அதிகாரங்கள்

## மாவட்ட நீதிமன்றம்

நீதி நிருவாக மாவட்டங்களில் 54 மாவட்ட நீதிமன்றங்கள் தாபிக்கப்பட்டுள்ளன. குறிப்பிட்ட மாவட்டங்களுக்குரிய அனைத்துக் குடியியல்சார் வழக்குகளுக்கான நீதி அதிகாரங்கள் இந்த நீதிமன்றங்களுக்குரியனவாகும். மாவட்ட நீதிமன்றங்களுக்கான நீதிபதிகளை நியமனம் செய்வதும் விலக்குவதும் நீதிச்சேவை ஆணைக்குழுவினால் மேற்கொள்ளப்படும். மாவட்ட நீதிமன்றங்களால் தீர்க்கக்கூடிய பிரச்சினைகள் வருமாறு,

- விவாகம் தொடர்பான வழக்குகள். (விவாகரத்து, நஷ்டஈடு கோரல், விவாகரத்துக் கொடுப்பனவு)
- தெஸ்தமென்து (விருப்பாவண வழக்கு) (உயில் எழுதி அல்லது எழுதாது இறந்துபோன ஒருவரின் சொத்துகளுக்கான வழக்கு)
- உளரீதியான குறைபாடுகளுடைய நபர்களுக்கான பாதுகாவலர்களை நியமித்தல்
- பால்ய வயதினரின் பாதுகாவலர் மற்றும் பிறப்பு தொடர்பான வழக்குகள்
- பிள்ளைகளைத் தத்தெடுப்பதற்கான விண்ணப்பம்
- பிறப்புச் சான்றிதழில் பெயர் மாற்றங்களுக்கான விண்ணப்பம்
- கற்பழிப்பு தொடர்பான வழக்குகள்
- வருமானம் தொடர்பான வழக்குகள்

- பொறுப்புகளும் சொத்துகளின் வங்குரோத்து நிலை பற்றியதுமான வழக்குகள்
- கொடுப்பனவு , கடன், நட்ட ஈடுகோரல், நிதி வழக்குகள்
- பிரிவினை வழக்குகள்
- காணி வழக்குகள்
- வீட்டு வாடகை வழக்குகள்
- விபத்து நட்டஈடு மற்றும் காப்புறுதி வழக்குகள்
- கம்பனி கட்டளைச் சட்டங்கள் தொடர்பான வழக்குகள்

**நீதவான் நீதிமன்றங்கள்**

இலங்கையில் 74 நீதிமன்ற கோட்டங்களில் நீதவான் நீதிமன்றங்கள் தாபிக்கப்பட்டுள்ளன. ஆரம்பநிலை நீதிமன்றங்களுக்குரிய அதிகாரம் இந்நீதிமன்றங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. நீதவான் நீதிமன்றம் பொதுவாக 2 வருடங்களுக்கு மேற்படாத சிறைத் தண்டனை மற்றும் 1500 ரூபாவுக்கு மேற்படாத தண்டப் பணத்தால் தண்டிக்கப்படும் குற்றங்களை விசாரிக்கும் தத்துவமுடையது. ஆயினும், குறித்த சட்டத்தால் அதிகாரமளிக்கப்படின், அத்தகைய எக்குற்றத்தையும் விளக்கித் தீர்ப்பளிக்க முடியும். இந்நீதிமன்றத் தீர்ப்பில் திருப்தியடையாதவர் அம்மாகாணத்தில் உள்ள மாகாண மேல் நீதி மன்றத்திற்கு மேன்முறையீடு செய்ய முடியும்.

**நீதவான் நீதிமன்றத்துக்குப் பின்வரும் வழக்குகளை விசாரணை செய்யும் அதிகாரம் உண்டு.**

- பொதுமக்களின் பாதுகாப்பு தொடர்பான குற்றச் செயல்கள்.
- போர், விமானப்படை, கடற்படை, இராணுவம் தொடர்பான குற்றங்கள்.
- அரச ஊழியர் தொடர்பான குற்றங்கள்.
- தேர்தல் தொடர்பான குற்றங்கள்.
- பொய்ச் சாட்சியமளித்தல், பொதுமக்களின் நீதிக்கு எதிரான குற்றங்கள்.

இவை தவிர, பாராளுமன்றக் கட்டளைச் சட்டங்கள் மூலம் இனங்காட்டப்பட்டுள்ள குற்றச் செயல்கள் தொடர்பாகச் செயற்படுவதற்கு நீதவான் நீதிமன்றங்களுக்கு அதிகாரம் உண்டு.

உதாரணமாக, வனப்பாதுகாப்புக் கட்டளைச் சட்டம், மதுவரிக் கட்டளைச் சட்டம், நறுமணப் பொருள்கள் மற்றும் ஔடதங்கள் கட்டளைச் சட்டம், வீதி அபிவிருத்தி அதிகார சபைக் கட்டளைச் சட்டம், மோட்டார் வாகனப் போக்குவரத்துக் கட்டளைச் சட்டம்.

**செயற்பாடு 1- 3**

- உமது பிரதேசத்தில் செயற்படும் நீதிமன்றமொன்றை அவதானித்து அதன் செயற்பாடுகள் தொடர்பாக அறிக்கை ஒன்றைத் தயாரிக்குக.

### சட்டத்தைச் செயற்படுத்தும் பிரதானிகளின் கடமைகள்

இலங்கையின் நீதிமன்ற நடவடிக்கைகளின் சட்டம் தொடர்பிலான உயர்மட்ட அதிகாரப் பதவிகள் வகிக்கும் மூன்று நபர்கள் காணப்படுகின்றனர். அவர்கள் நீதி அமைச்சர், பிரதம நீதியரசர், சட்டமா அதிபர் என்போராவர். அவர்களுக்குரிய கடமைகளையும் பொறுப்புகளையும் ஆராய்வோம்.

### நீதி அமைச்சர்

நீதித்துறைக்குரிய சட்ட வரைவுகளைப் (மசோதா) பாராளுமன்றத்துக்குச் சமர்ப்பித்து தேவையான சட்டங்களை இயற்றுவதுடன், நீதித்துறை தொடர்பாகப் பாராளுமன்றத்தில் எழுப்பப்படும் கேள்விகளுக்குப் பதிலளிப்பதும் நீதி அமைச்சரின் கடமையாகும். அரசியல் யாப்பு மூலமும் பாராளுமன்றக் கட்டளைச் சட்டங்கள் மூலமும் வழங்கப்பட்டுள்ள கடமைகளைச் செய்வதுடன் சமாதான நீதவான்களை நியமனம் செய்யும் அதிகாரமும் நீதியமைச்சருக்கே உரியதாகும்.

### பிரதம நீதியரசர்

இலங்கையின் சிரேஷ்ட நீதிமன்றமான உயர் நீதிமன்றத்தின் தலைவர் பிரதம நீதியரசராவார். உயர்நீதிமன்றப் பதிவாளர் நாயகம் மற்றும் அவரின் அலுவலக மேற்பார்வை என்பவற்றுடன் நீதிமன்ற நிர்வாக ஒழுங்கமைப்பு என்பன பிரதம நீதியரசருக்கு உரியனவாகும். நீதிச்சேவைகள் ஆணைக்குழுவின் தலைவராகவும் பிரதம நீதியரசரே செயற்படுவார். நீதிமன்றம் தொடர்பான சட்ட விதிகளை வகுப்பவரும் இவராவார். சட்ட விதிகளை வகுக்கும்போது உயர்நீதிமன்ற நீதிபதிகள் மூவர் அச்செயற்பாட்டிற்கு உதவியாகச் செயற்படுவர். சட்ட விதிகளை வகுப்பதற்கான நீதித்துறையின் செயற்பாடுகள் சில வருமாறு.

- மேன்முறையீடுகளை ஏற்றுக்கொள்ளல், விசாரணை செய்தல், நிராகரித்தல்
- பிணை வழங்கல், வழக்கு விசாரணைகளை நிறுத்துதல்
- சட்டத்தரணிகளின் தொழில் தொடர்பான நடவடிக்கைகள் (உ+ம்:- சேவையில் இணைத்துக் கொள்ளல், பதவி விலக்கல்)
- ஜுரி சபை தொடர்பான நடவடிக்கைகள்
- பிஸ்கால் அதிகாரிகள் மற்றும் அது தொடர்பான நடவடிக்கைகள்
- நீதிமன்ற விதிகளை மறுசீரமைத்தல், மாற்றியமைத்தல், புதிய விதிகளை ஏற்படுத்துதல்

### சட்டமா அதிபர்

1883 ஆம் ஆண்டின் முதலாம் இலக்கக் கட்டளைச் சட்டத்தின் பிரகாரம் தற்போதைய சட்டமா அதிபர் பதவி உருவாக்கப்பட்டுள்ளது. இலங்கையின் பிரதான சட்ட அலுவலரான சட்டமா அதிபர் சனாதிபதியால் நியமிக்கப்படுவார். நீதி அமைச்சரின் கீழ் செயற்படும் சட்டமா அதிபர் திணைக்களத்தின் பிரதானியும் இவரேயாவார். சட்டமா அதிபரின் அதிகாரங்கள், பணிகள் சில கீழே தரப்பட்டுள்ளன.

- மேல் நீதிமன்றத்தினால் மாத்திரம் விசாரணை செய்யப்படும் வழக்குகளில் முன்வைக்கப்படும் சாட்சி அல்லது வேறு காரணங்களின் அடிப்படையில் மன்னிப்பளித்தல்
- சில வழக்குகளைக் குற்றவியல் நீதிமன்றத்தில் விசாரணை செய்வதற்கு அனுமதியளித்தல்
- அரச திணைக்கள அதிகாரிகளைத் தேவையான சந்தர்ப்பத்தில் தனது அலுவலகத்திற்கு அழைத்து அவர்களுக்கு ஆலோசனை வழங்குதல்
- பொதுமக்களுக்கு அநீதி இழைக்கும் மற்றும் நீதியை நிலைநாட்டுவதில் தயக்கம் காட்டும் அல்லது கடமை தவறும் அரச ஊழியர்களுக்கு எதிரான சட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ளல்
- அமைச்சர் ஒருவருக்கோ அமைச்சின் செயலாளர் ஒருவருக்கோ அரச அதிகாரி ஒருவருக்கோ வழக்கொன்றைத் தொடுப்பதற்கு முன்னர் சட்டமா அதிபருக்கு அறிவித்தல்
- சட்டமா அதிபருக்குள்ள அதிகாரங்களைத் தனது பிரதிநிதிகளிடம் ஒப்படைக்கும் அதிகாரம்
- போதியளவு சாட்சிகள் இல்லாத வழக்கில் குற்றவாளிகளை விடுதலை செய்யும் அதிகாரம்
- பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படும் மனுக்கள் அரசியல் யாப்புக்கு முரணாகாத தன்மையைப் பாதுகாக்கும் அதிகாரம்

இவைதவிர, சட்டமா அதிபருக்குரிய பணிகள் பலவுள்ளன. அவற்றுள் சிலவற்றைக் கீழ்வரும் உருவில் காணலாம்.



உரு 1.9 சட்டமா அதிபரின் பணிகள்

சட்டமா அதிபரின் அதிகாரங்களையும் பணிகளையும் நிறைவேற்றும் பொருட்டு அவருக்கு உதவியாகச் செயற்படும் அதிகாரிகள் பின்வரும் உருவில் காட்டப் பட்டுள்ளனர்.



உரு 1.10 சட்டமா அதிபரின் கீழ் செயற்படும் அதிகாரிகள்

**செயற்பாடு 1- 4**

- நீதியமைச்சர், பிரதம நீதியரசர், சட்டமா அதிபர் என்போரின் சேவைகளை மதிப்பீடு செய்க.

### வழக்கு விசாரணைக்கான மாற்று வழிமுறைகள்

குறிப்பிட்ட ஒரு பிரச்சினை தொடர்பில் நீதிமன்றங்களில் வழக்குத் தொடுப்பதற்கு முன்னர், சம்பந்தப்பட்ட நபர்கள் தமது பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்வதற்கான பல வழிகள் இன்று இலங்கையில் உருவாக்கப்பட்டுள்ளன. இதன் மூலம் அவர்களின் காலம், சிரமம், பணம் என்பன மீதப்படுத்தப்படுவதுடன், இரு தரப்பினரும் விரைவான தீர்வொன்றைக் காண்பதற்கும் இது வழிவகுக்கும். அவ்வாறான மாற்று வழிகள் சிலவற்றை அடுத்து அவதானிக்கலாம்.

### பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காணல்

தொழிலாளருக்கும் தொழில் வழங்குனருக்கும் இடையே ஏற்படும் தொழிற் பிரச்சினைகள் குறிப்பிட்ட நிறுவனத்திற்கும் நாட்டின் பொருளாதாரத்துக்கும் தீங்கிழைக்கும். எனவே, அவ்வாறான பிரச்சினைகளைச் சட்டத்திற்குட்பட்டவகையில் தீர்த்துக் கொள்வதற்காக மேற்கொள்ளப்படும் நடவடிக்கையே பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காணல் எனப்படும். இதற்காக 1950 ஆம் ஆண்டின் தொழில் பிரச்சினைக் கட்டளைச் சட்டத்தைப் பயன்படுத்தலாம். பேச்சுவார்த்தை நடைபெறும் விதத்தைக் கொண்டு அதனை இரு வகைப்படுத்தலாம்.




உரு 1.11 பேச்சுவார்த்தை முறைகள்

இங்கு நடுவர் எனப்படுபவர், பிரச்சினையுடன் தொடர்புடைய இரு தரப்பினருடனும் கலந்துரையாடி பிரச்சினையைத் தீர்த்து வைப்பதற்காக நடவடிக்கை மேற்கொள்ளும் தனிநபராக அல்லது குழுவாக அமையலாம்.

பேச்சு வார்த்தை முறையில் பிரச்சினை தொடர்பான அறிக்கையொன்று தொழில் ஆணையாளரால் நடுவருக்கு வழங்கப்படும். நடுவரால் பிரச்சினை தொடர்பாக விசாரணை மேற்கொள்ளப்படுவதுடன், அதனை குறுகிய காலத்திற்குள் முடிவுக்கு கொண்டு வருதல் வேண்டும். பிரச்சினையுடன் தொடர்பான வேறு தரப்பினர் இருப்பின், அவர்களையும் விசாரணையில் பங்குபெறச் செய்யலாம். இருதரப்பினரதும் கருத்துகளைக் கேட்டறிந்த பின்னர் தீர்வு வழங்கப்படும். அத்தீர்வு, தொழில் ஆணையாளரால் வர்த்தமானியில் பிரசுரிக்கப்பட்டு சட்ட ரீதியாக்கப்படும். இத்தீர்ப்பை ஏற்றுக் கொள்ளாது நிராகரிப்பதற்கு இரு தரப்பினருக்கும் உரிமை உண்டு.

## நிர்வாகத்திற்கான பாராளுமன்ற ஆணையாளர் (ஒம்புட்ஸ்மன்)

நிறைவேற்று மற்றும் நிர்வாக நடவடிக்கைகளின்போது பொதுமக்களின் அடிப்படை மனித உரிமைகள் மீறப்படுகையில் அவற்றைப் பாதுகாப்பதற்காக அரசாங்கம் ஏற்படுத்தியுள்ள ஒரு செயற்பாடாக ஒம்புட்ஸ்மன் அல்லது நிர்வாகத்திற்கான பாராளுமன்ற ஆணையாளர் (The Parliamentray Commissioner for Administration) பதவியைக் குறிப்பிடலாம். இவர் குறைகேள் அதிகாரி என்றும் அழைக்கப்படுகின்றார்.

1978 ஆம் ஆண்டின் அரசியல் யாப்பின் பிரகாரம் ஒம்புட்ஸ்மன் பதவி அறிமுகப் படுத்தப்பட்டது. இவரது பிரதான செயற்பாடுகள் இரண்டு வகைப்படுகின்றன.

I. அனைத்துப் பிரசைகளினதும் அடிப்படை உரிமைகள் மீறப்படுவதைத் தடுத்தல்
II. சகல நிர்வாக அநீதிகளிலிருந்தும் பிரசைகளைப் பாதுகாத்தல்

ஒம்புட்ஸ்மன் அல்லது நிர்வாகத்துக்கான பாராளுமன்ற ஆணையாளர் நாயகம் அரசியலமைப்புப் பேரவையின் அங்கிகாரத்துக்கு அமைய சனாதிபதியால் நியமிக்கப்படுவார். அவர் உடல், உள ரீதியில் நல்ல நிலையில் இருக்கும் வரை இப்பதவியில் தொடர்ந்திருக்கலாம் என்பது இப்பதவியின் சுயாதீனத் தன்மையைக் காட்டுகின்றது. ஒம்புட்ஸ்மனின் சம்பளம் திரட்டப்பட்ட நிதியிலிருந்து வழங்கப்படுவதுடன் அது குறைக்கப்படக் கூடாது. அவரைப் பதவி நீக்குவதாயின் பாராளுமன்றத்தில் ஒரு பிரேரணை நிறைவேற்றப்பட்டதன் பின்னர் சனாதிபதியால் பதவி நீக்கம் செய்ய முடியும். 1994 ஆம் ஆண்டின் பின்னர் இலங்கைப் பிரசைகள் தமது முறைப்பாடுகளை நேரடியாக ஒம்புட்ஸ்மனிடம் சமர்ப்பிக்க முடியும் என்பது சிறப்பம்சமாகும்.

**செயற்பாடு 1- 5**

- உங்கள் பிரதேசத்தில் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காகச் செயற்படும் இணக்கசபையின் செயற்பாடுகள் பற்றிய தரவுகளைத் தொகுத்து அறிக்கை ஒன்றைத் தயாரிக்கவும். இணக்க சபையின் நன்மை, தீமைகளை அட்டவணைப்படுத்துக.

### மனித உரிமைகள் ஆணைக்குழு

ஒவ்வொரு மனிதனுக்கும் தனது மனித உரிமைகளைப் பாதுகாத்து கொள்வதற்கு உரிமையுண்டு. அது தொடர்பாக **''மனித உரிமைகளும் கடமைகளும்''** எனும் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது. ஒருவரின் மனித உரிமை மீறப்படும்போது அவர் மனித உரிமைகள் ஆணைக்குழுவிடம் முறைப்பாடு செய்து நஷ்ட ஈடு பெறலாம். 1996 ஆம் ஆண்டின் 21 ஆம் இலக்க கட்டளைச் சட்டத்திற்கு அமைவாக மனித உரிமைகள் ஆணைக்குழு ஏற்படுத்தப்பட்டுள்ளது. இதன் உறுப்பினர்கள் அரசியலமைப்புப் பேரவையின் சிபாரிசுடன் சனாதிபதியால் நியமிக்கப்படுவதுடன், அவ்வுறுப்பினர்களின் எண்ணிக்கை இருபதாகும்.

மனித உரிமைகள் ஆணைக்குழுவின் பிரதான செயற்பாடுகள் சில பின்வருமாறு,

- மனித உரிமைகள் தொடர்பாகப் பொதுமக்களை அறிவூட்டுதல்
- அடிப்படை உரிமை தொடர்பாக அரசாங்கத்துக்கு ஆலோசனை வழங்கல்
- மனித உரிமைகள் மீறல் தொடர்பான வழக்குகளை விசாரணை செய்தலும் தீர்ப்புகளை வழங்குதலும்
- மனித உரிமைகளைப் பாதுகாக்கும் பொருட்டு நிறைவேற்றுத் துறையினது நடவடிக்கைகளைக் கண்காணித்தல்
- சர்வதேச மனித உரிமைகளுக்கு ஏற்ப உள்நாட்டுச் சட்டதிட்டங்களை அமைப்பதற்கு அரசாங்கத்திற்கு ஆலோசனை வழங்கல்

- மனித உரிமைகள் தொடர்பிலான சர்வதேச ஒப்பந்தங்களுக்கு உடன்படுவது தொடர்பில் அரசாங்கத்திற்கு ஆலோசனை வழங்குதல்

**மனித உரிமைகள் ஆணைக் குழுவிற்குரிய அதிகாரங்கள் சிலவற்றை நோக்குவோம்**

- மனித உரிமை மீறல்களை விசாரணை செய்தலும் அது தொடர்பான நீதிமன்ற நடவடிக்கைகளில் தலையிடுதலும்
- மனித உரிமைகள் தொடர்பான உப குழுக்களை பிரதேச மட்டத்தில் ஏற்படுத்துதல்
- நீதிமன்றத்தின் மூலமோ வேறு வகையிலோ கைது செய்யப்பட்டுள்ள கைதிகளை விசாரணை செய்தலும் சிபாரிசுகளை முன்வைத்தலும்
- மனித உரிமைகளின் செயற்பாட்டை மேம்படுத்துவதற்கான வேலைத்திட்டங்களை முன்வைத்தல்
- மனித உரிமைகள் மீறப்பட்ட நபருக்கு அது தொடர்பில் நீதியைப் பெற்றுக் கொடுத்தல்

ஆலோசனை வழங்கல் மற்றும் இணக்கப்படுத்தல் என்பன பிரச்சினைக்குத் தீர்வுகாணும் மேலும் இரண்டு வழிமுறைகளாகும். இதுதொடர்பாகப் 10 ஆம் தர குடியியற் கல்விப் பாடநூலில் விளக்கப்பட்டுள்ளது.

**செயற்பாடு 1 - 6**



- பிரச்சினைத் தீர்விற்கான மாற்று வழிகள் மூலம் தனிநபர், நிறுவனங்கள் மற்றும் சமூகம் அடைந்து கொள்ளும் நன்மைகளைத் தனித்தனியாகப் பட்டியற்படுத்துக.

## சட்டத்தின் மேன்மை அல்லது உயர்தன்மை/ சட்டத்தின் ஆட்சி (Rule of Law)

சட்டத்தின் ஆட்சி என்பது, ஒரு நாட்டின் ஆட்சியானது, சட்டதிட்டங்களுக்கு அமைய மேற்கொள்ளப்படுவதாகும். இக்காரணத்தால், சமூகத்தின் எல்லா நபர்களும் நிறுவனங்களும் சட்டத்திற்கு அடிபணிந்து செயற்படுவர் என எதிர்பார்க்கப்படுகின்றது. சட்டத்தின் முன் சகலரும் சமமானவர்கள் என்பதுடன், சட்டம் சகலரையும் பாதுகாக்கும் பொறுப்பையும் ஏற்றுள்ளது. இலங்கையின் உயரிய சட்டம் அரசியல் யாப்பின் சட்டமாகும். அதற்கேற்ப செயற்படுவதற்கு நாமனைவரும் கட்டுப்பட்டுள்ளோம்.

சட்டத்தின் ஆட்சி தொடர்பாக டைசியின் வரைவிலக்கணம் முக்கியம் பெறுகின்றது. மேலும், ஜீ. மார்ஷல் என்பவர் சட்டவாட்சியில் செல்வாக்குச் செலுத்தும் மூன்று பண்புகளைக் குறிப்பிட்டுள்ளார்.

**சட்டத்தின் ஆட்சியில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகள்**

- அனைவரும் நாட்டின் சட்டத்திற்கு அடி பணிதல்.
- சுயாதீன நீதிமன்றங்கள் மூலம் அனைவருக்கும் சமமான நீதியைப் பெற்றுக் கொடுப்பதற்குச் செயற்படுதல்.
- பக்கச்சார்பற்ற, உறுதியான, நீதியான பொதுவான சட்டத்தொகுதி ஒன்று காணப்படல்.

மேற்படி பண்புகளுக்கு ஏற்ப சட்டவாட்சி உறுதிப்படுத்தப்பட்ட சமூகத்தில் காணக்கூடிய பண்புகள் சில கீழே தரப்பட்டுள்ளன.

- நீதித்துறை சுதந்திரமாகச் செயற்படல்
- சகல பிரசைகளும் சட்டத்தைப் பற்றிய தெளிவினைப் பெற்றிருத்தல்
- சட்டம் பற்றிய அறிவின்மையைத் தகுந்த காரணமாக ஏற்றுக்கொள்ளாமை
- நேர்மையாகவும் தாமதமின்றியும் நீதியைப் பெற்றுக்கொள்ளுதல்
- தனிநபர்களின் அந்தஸ்து, பதவி, செல்வம் போன்ற காரணங்களின் அடிப்படையில் சட்டம் செயற்படாதிருத்தல்
- சட்டத்தின் முன் சகலரும் சமமாக மதிக்கப்படல்
- நீதிபதிகளின் தீர்ப்புகளில் புறச் செல்வாக்குகள், தலையீடுகள் இல்லாமலிருத்தல்

சட்டத்தின் ஆட்சியை உறுதிப்படுத்துவதன் மூலம் பிரசைகளுக்கு இழைக்கப்படும் அநீதியைக் குறைத்து நாட்டில் நீதியான சமூகமொன்றை உருவாக்கலாம்.

## நீதித்துறை சுதந்திரம்

இன்றைய சமூகத்தில் நீதிமன்றம் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது. இதற்குக் காரணம், சனநாயக வரம்பிற்குள் பிரசைகளின் சுதந்திரமும் உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதும் நீதி நிலைநாட்டடப்பட வேண்டும் என்பதுமாகும்.



உரு 1.12 நீதி தேவதை

நீதிமன்றமானது சுதந்திரமானதும் பக்கச்சார்பற்றது மாக அமையும்போது தனிநபர்கள் நீதிமன்றத்தின் மீது நம்பிக்கை கொள்வர். அதன் மூலம் சட்டத்தை மதித்து அதற்கேற்ப வாழ்வதற்கு பிரசைகள் தூண்டப்படுவர். இலங்கையில் நீதித்துறை சுதந்திரத்தைப் பேணும் வகையில் 1978 ஆம் ஆண்டு குடியரசு யாப்பு மூலம் கொள்கை வகுக்கப்பட்டுள்ளது.

அதீனா தேவதையை (நீதி தேவதை) நீதிமன்ற இலச்சினையாகக் கொண்டதன் மூலம் சகலருக்கும் சமமானதும் பக்கச்சார்பற்றதுமான நீதி பெற்றுத்தரப்படும் என்பது வெளிப்படுத்தப்படுகின்றது. நீதித்துறை சுதந்திரத்தைப் பேணும் வகையில் அரசியல் யாப்பில் சேர்க்கப்பட்டுள்ள கொள்கைகள் பின்வருமாறு,

- **நீதிபதிகளை நியமனம் செய்தல்**

அரசியலமைப்புப் பேரவையின் அனுமதியுடன் சனாதிபதியால் நீதிபதிகள் நியமிக்கப்படுவர். ஒவ்வொரு நீதி மன்றத்துக்குமான நீதிபதிகளின் ஓய்வு பெறும் வயது குறிப்பிடப்பட்டுள்ளதுடன், அவர்களது உடல், உள நிலை சிறப்பாக இருக்கும் காலம் வரை அவர்கள் பணியாற்றலாம். அவர்களின் பதவிக் காலம் நிறைவடையும் முன்னர் அவர்களைப் பதவி நீக்கம் செய்ய முடியாது. இதன் மூலம் நீதிமன்ற சுதந்திரம் பாதுகாக்கப்படுகின்றது.

- **நீதிபதிகளைப் பதவி நீக்கம் செய்தல்**

நீதிமன்ற நீதிபதிகளைப் பதவி நீக்கம் செய்வது தொடர்பில் விசேட செயற்பாடு முன்வைக் கப்பட்டுள்ளது. அதன் மூலம் நீதிபதிகளின் தொழிற் சுதந்திரம் பேணப்படுகின்றது. அவ்வாறான நிலமையிலேயே அவர்களால் சுதந்திரமாகவும் பக்கச்சார்பின்றியும் தீர்ப்புகளை வழங்கக்கூடியதாக இருக்கும்.

- **நீதிபதிகளின் வேதனம்**

நீதிபதிகளின் வேதனம் திரட்டப்பட்ட பொது நிதியிலிருந்து செலுத்தப்படுவது நீதிமன்ற சுதந்திரம் தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட மற்றுமொரு செயற்பாடாகும். எனவே வருடாந்த வரவு செலவுத் திட்டத்தின்போது நீதிமன்றம் தொடர்பிலான விவாதங்களுக்கான சந்தர்ப்பங்கள் தவிர்க்கப்பட்டுள்ளன. உயர்நீதிமன்றம் மற்றும் மேன்முறையீட்டு நீதிமன்ற நீதிபதிகளின் வேதனம் பாராளுமன்றத்தின் மூலம் தீர்மா னிக்கப்படும். ஆயினும், நீதிபதிகளின் சம்பளம், ஓய்வூதியம் என்பவற்றில் எவ்விதக் குறைப்பும் செய்ய முடியாது.

- **வேறு பதவிகள் ஏற்றல்**

உயர்நீதிமன்ற மற்றும் மேன்முறையீட்டு நீதிமன்ற நீதிபதிகளுக்கு சனாதிபதியின் அனு மதியின்றி வேதனத்துடன் கூடிய அல்லது வேதனமற்ற எந்தவொரு பதவிகளையும் ஏற்க முடியாது என்பது தொடர்பாக அரசியல் யாப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதே போன்று, அவர்கள் ஓய்வு பெற்ற பின்னரும் வேறு எந்தத் தொழிலிலும் ஈடுபடுதல் கூடாது எனவும் யாப்பில் கூறப்பட்டுள்ளது. இவற்றின் மூலம் நீதிபதிகளின் சுதந்திரம் பாதுகாக்கப்படல் மற்றும் நீதிச் சுதந்திரம் பாதுகாக்கப்படல் ஆகியன எதிர்பார்க்கப்படுகின்றது.

- **தேவையற்ற தலையீடுகள், கட்டுப்பாடுகள் என்பவற்றைக் குறைத்தல்**

நீதிமன்ற சுதந்திரத்தைப் பேணுவதற்காக நீதிமன்ற நடவடிக்கைகளில் தலையீடு செய்தல் தண்டனைக்குரிய குற்றமாகக் கருதப்படுகின்றது. எவ்விதத் தலையீடுகளும் கட்டுப்பாடுகளுமின்றி நீதிபதிகள் செயற்படுவதற்கான சந்தர்ப்பம் வழங்கப்பட் டுள்ளது.

- **நீதிச் சேவை ஆணைக்குழுவை அமைத்தல்**

நீதிச்சேவை ஆணைக்குழுவும் நீதித் துறையின் சுதந்திரத்திற்காகவே ஏற்படுத்தப் பட்டுள்ளது. இவ்வாணைக்குழுவின் தலைவர் பிரதம நீதியரசர் ஆவார். உயர் நீதி மன்ற நீதிபதிகள் இருவர் இவ்வாணைக்குழுவின் உறுப்பினர்களாகச் செயற்படுவர்.

சனாதிபதியால் அம்மூவரும் ஐந்து வருட காலப்பதவிக்காக அரசியலமைப்புப் பேரவையின் சிபாரிசுக்கமைய நியமிக்கப்படுவர். நீதிச்சேவை ஆணைக்குழுவின் ஒருவரைப் பதவி நீக்கம் செய்வதற்கு தகுந்த காரணங்கள் முன்வைக்கப்பட வேண்டும் என்றும் யாப்பில் கூறப்பட்டுள்ளது. எனவே சனாதிபதியால் கூட அவ்வாணைக் குழுவின் செயற்பாட்டில் செல்வாக்குச் செலுத்துவதற்கான சந்தர்ப்பம் இல்லை.

**செயற்பாடு 1- 7**

- நீதிமன்றம் சுதந்திரமானதாக இருக்க வேண்டுமா? அதற்கான காரணங்கள் ஐந்தைக் குறிப்பிடுக.

**தாமதமின்றியும் பக்கச்சார்பின்றியும் நீதியை நிலைநாட்டுவதன் முக்கியத்துவம்**

இலங்கை நீதிமன்றங்களில் விசாரிக்கப்படும் வழக்குகள் நிறைவடைவதற்கு நீண்ட காலம் செல்கின்றது எனும் குற்றச்சாட்டை அடிக்கடி கேட்கின்றோம். இதனால் நீதி, நீதிமன்ற நடவடிக்கைகள் தொடர்பில் பிரசைகளின் நம்பிக்கை குறையலாம். சட்டத்தின் குறைபாடுகள், நீதியைப் பெறுவதில் ஏற்படும் தாமதங்கள் காரணமாக பாதிக்கப்பட்ட மக்களுக்கு அநீதி இழைக்கப்படலாம்.
தாமதமின்றியும் பக்கச்சார்பற்ற முறையிலும் நீதி நிலைநாட்டப்படாத போது ஏற்படக்கூடிய பாதகமான நிலைமைகள் பின்வருமாறு,

- தனிநபர்களுக்கிடையே நீதித்துறை மற்றும் சட்டம் பற்றிய நம்பிக்கையற்றுப் போதல்
- நீதிக்குப் பதிலாக அநீதி முன்னிலை வகித்தல்
- நாட்டினுள் குற்றங்களும் ஊழல்களும் பெருகுதல்
- நாட்டில் சட்டத்தின் சமநிலையும் நீதியும் சீர்குலைதல்
- நீதியைப் பெற்றுக் கொள்வதற்கு வேறு வழிகளை நாடும் சூழ்நிலைகளுக்கு ஆளாதல்
- நீதியைப் பெற்றுக்கொள்வது தொடர்பில் நீண்ட காலமும் சிரமமும் பாரிய செலவும் ஏற்படுதல்
- மனிதர்கள் மத்தியில் சட்டமும் நீதியும் மதிப்பிழந்து போதல்

மேற்படி நிலைமைகளைக் குறைத்து நாட்டில் நேர்மையானதும் பக்கச்சார்பற்றதுமான நடவடிக்கைகள் மூலம் நல்லாட்சியை ஏற்படுத்துவதற்கு நீதித்துறை சுதந்திரமும் தாமதமற்ற வகையில் நீதி நிலைநாட்டப்படுதலும் இன்றியமையாதன. அதே போன்று நாட்டுப் பிரசைகளின் கடமையாவது, நாட்டில் நிலவும் சட்டம் மற்றும் நீதித்துறைக்கு மதிப்பளித்து சமாதானத்துடனும் நீதியுடனும் செயற்படுவதாகும். சட்டம் என்பது சமாதான மற்றும் நீதியான சமூகத்தைப் பாதுகாப்பதற்கான ஒரு கருவி என்பதால் எல்லாப் பிரசைகளும் சட்டத்திற்கு அடிபணிதல் அவசியமாகும்.

**செயற்பாடு 1- 8**

- நீங்கள் சட்டத்தை மதிக்கும் பிரசையாக வாழ்வதன் முக்கியத்துவம் பற்றிக் கலந்துரையாடுக.

# 2 அரசின் பல்வேறு படிநிலைகள்

**அறிமுகம்**

*பிரசைகளின் தேவைகளை உச்ச அளவில் நிறைவேற்றுவது சனநாயக அரசாங்கமொன்றினது பிரதான கடமையாகும். இக் கடமையானது எவ்வளவு தூரம் நிறைவேற்றப்படுகின்றது என்பது தொடர்பாக அறிந்து கொள்வதற்கு அரசின் பல்வேறு படிநிலைகளையும் அவற்றின் மூலம் ஆற்றப்படும் பணிகளையும் அறிந்து கொள்வது அவசியமாகின்றது. நவீன சமூகத்தில் மனிதத் தேவைகள் பல்கிப் பெருகியுள்ளன. அதேபோன்று அரசாங்கத்தின் பணிகளும் அதிகரித்துள்ளன. இவ்வதிகரித்த பணிகளை அரசாங்கம் தனது பல்வேறு படிநிலைகளினூடாக நிறைவேற்றுகின்றது. இந்த அத்தியாயத்தில் இலங்கை அரசாங்கத்தின் பல்வேறு படிநிலைகளான மத்திய அரசாங்கம், மாகாண சபைகள், உள்ளூராட்சி மன்றங்கள் தொடர்பாகக் கலந்துரையாடப்படும்.*

- *மேற்படி நிறுவனங்களில் முன்னர் காணப்பட்ட கட்டமைப்பு மற்றும் இன்றைய கட்டமைப்பை அறிந்து கொள்ளுதல்*
- *பல்வேறு படிநிலைகளினதும் பணிகள் மற்றும் அவை செயற்படும் போது ஏற்படும் பிரச்சினைகளை இனங்காணல்*
- *அரசாங்கத்தின் பல்வேறு படிநிலைகள் மூலம் பிரசைகளுக்கு சேவையாற்றுகையில் குறிப்பிட்ட நிறுவனங்களின் பொறுப்புக் கூறல் மற்றும் பொறுப்பேற்றல் மற்றும் அதனால் பயனடையும் பிரசைகள் நிறைவேற்ற வேண்டிய கடமைகள், பொறுப்புகள் தொடர்பாகவும் கவனம் செலுத்தப்படும்*

*அரசாங்கத்தின் பல்வேறு படிநிலைகளின் தன்மைகள், செயற்பாடுகள், வினைத் திறன்கள் போலவே பிரசைகளின் செயற்பாடுகள், வினைத் திறன்கள் தொடர்பான ஆற்றல்களை மாணவர் மத்தியில் ஏற்படுத்துதல் இந்த அத்தியாயத்தின் மூலம் எதிர்பார்க்கப்படுகின்றது.*

## அரசாங்கத்தின் பல்வேறு படிநிலைகள்

இன்று இலங்கையில் செயற்படுவது ஒற்றை ஆட்சி முறையாகும். ஒற்றையாட்சி என்பது ஒரு மத்திய அரசின் கீழ் அதிகாரங்கள் குவிக்கப்பட்டிருத்தலாகும். அதாவது ஒரு மத்திய அரசினால் சட்டத்துறை, நிருவாகத்துறை, நீதித்துறை நடவடிக்கைகள் செயற்படுத்தப்படும் ஆட்சி முறையெனவும் இதனைக் கொள்ளலாம்.

- ஒரு மத்திய அதிகார நிறுவனம் மாத்திரம் சட்டமியற்றுதல் தொடர்பில் உயர் அதிகாரத்தைப் பெற்றிருப்பது ஒற்றை ஆட்சி முறையின் அடிப்படைப் பண்பாகும்.

A.V. **டைசி**

- ஒற்றையாட்சி முறையின் அடிப்படைப் பண்புகள் இரண்டாகும். அவை
  1. மத்திய அரசின் உயர்தன்மை
  2. மேலதிக சுயாதீன நிறுவனங்கள் ஆட்சி முறையில் காணப்படாமை.

C.F. **ஸ்ட்ரோன்க்**

ஐக்கிய இராச்சியம், ஜப்பான், பிரான்ஸ் போன்ற அபிவிருத்தியடைந்த நாடுகளும் பாகிஸ்தான், பங்களாதேஷ், நேபாளம் போன்ற அபிவிருத்தியடைந்து வரும் நாடுகளும் ஒற்றையாட்சி நிலவும் நாடுகளுக்கான உதாரணங்களாகும்.

ஒற்றையாட்சி முறை நிலவும் இலங்கையில் மத்திய அரசு, பிராந்திய மற்றும் பிரதேச நிர்வாகம் என்பன தொடர்பாக நீண்ட வரலாறு உண்டு. பண்டைய காலத்தில் அரசின் மத்திய ஆட்சி தவிர அரசாட்சிக்கு உதவும் வகையில் பிரதேச நிர்வாக அலகுகள் சில காணப்பட்டன. அவை,

- உத்தர தேசம் (வடக்கு)
- பிராச்சீன தேசம் (கிழக்கு)
- தக்கிண தேசம் (தெற்கு)
- பஸ்ஸிம தேசம் (மேற்கு)

அநுராதபுர காலத்தின் இறுதிப்பகுதியில் இராசரட்டை, ருகுணுரட்டை, மலைய ரட்டை, தக்கிண தேசம் எனும் நிர்வாக அலகுகள் செயற்பட்டதுடன் பொலனறுவைக் காலத்தில் இராசரட்டை, தக்கிணதேசம், தொலஸ்தஹஸ்ரட்டை, அட்டதஹஸ்ரட்டை எனும் நான்கு நிர்வாகப் பிரிவுகளையும் காண முடிந்தது. பிரித்தானியர் ஆட்சிக் காலத்திலும் திசாவை, கோரளை, பற்று முதலிய நிர்வாக அலகுகள் செயற்பட்டு வந்துள்ளன.

## இலங்கையில் பிரித்தானியர் ஆட்சிக்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட பிரதான மாற்றங்கள்

### 1833 கோல்புறூக் கமறன் யாப்புச் சீர்திருத்தம்



**1910 குறூ மக்கலம் யாப்புச் சீர்திருத்தம்**




**1921 மானிங் யாப்புச் சீர்திருத்தம்**




- கண்டிச் சிங்களவர் 2
- முஸ்லிம் 1
- இந்தியத் தமிழர் 1
- சிறப்பு 3

- ஐரோப்பியர் 2
- பறங்கியர் 1
- வர்த்தக சங்கம் 1
- கீழ்நாட்டு உற்பத்தியாளர் சங்கம் 1

- கொழும்பு 1
- மேல்மாகாணம் 2
- ஏனைய மாகாணங்கள் 8

**1931 டொனமூர் யாப்புச் சீர்திருத்தம்**




ஆங்கிலேயரால் அறிமுகப்படுத்தப்பட்ட 1833, 1910, 1921, 1924 அரசியல் யாப்புச் சீர்த்திருத்தங்களில் இலங்கையருக்கு உள்ளக ஆட்சி நிர்வாகத்தில் பங்குபற்றும் வாய்ப்புக் கிட்டவில்லை. 1931 ஆம் ஆண்டு அறிமுகப்படுத்தப்பட்ட டொனமூர் யாப்பில் இலங்கையருக்கு நிர்வாகத்தில் கூடுதலாகப் பங்குகொள்ளும் வாய்ப்பு வழங்கப்பட்டது. சர்வசன வாக்குரிமை, பிரதேசவாரிப் பிரதிநிதித்துவம், நிர்வாகக்குழு முறை, அரசுக் கழகம் போன்ற அம்சங்கள் டொனமூர் யாப்பின் மூலம் ஏற்படுத்தப்பட்ட முக்கிய அம்சங்களாக விளங்குகின்றன.

**1947 சோல்பரி யாப்புச் சீர்திருத்தம்**




**சோல்பரி யாப்பின் மூலம்,**

- 1948 பெப்பரவரி 4ஆம் திகதி இலங்கை சுதந்திரம் அடைந்தது.
- மந்திரி சபை (கெபினட்) ஆட்சி முறை அறிமுகப்படுத்தப்பட்டது.
- இரு சபைகளைக் கொண்ட பாராளுமன்றம் அறிமுகப்படுத்தப்பட்டது.
- பிரித்தானிய முடியின் பிரதிநிதியாக ஆளுநர் நாயகம் பதவி ஏற்படுத்தப்பட்டது.
- இலங்கையின் இறுதி மேன்முறையீட்டு நீதிமன்றமாகப் பிரித்தானியாவின் பிரிவிக் கவுன்சில் (கோமறைக் கழகம்) ஏற்றுக்கொள்ளப்பட்டது.
- அரசாங்கசேவை ஆணைக்குழு, நீதிச்சேவை ஆணைக்குழு என்பன ஏற்படுத்தப்பட்டன.

- *சிறுபான்மையினரின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக யாப்பின் 29 ஆம் சரத்து சேர்க்கப்பட்டது.*

**1972 முதலாம் குடியரசு யாப்பின் மூலம்**

- *இலங்கை சுதந்திரமும் தன்னாதிக்கமும் இறைமையுமுள்ள குடியரசானது.*
- *ஒரு சபைப் பாராளுமன்றம் தேசிய அரச பேரவை எனப் பெயர் மாற்றப்பட்டது.*
- *ஆளுநர் நாயகம் பதவி நீக்கப்பட்டு சனாதிபதிப் பதவி ஏற்படுத்தப்பட்டது. (சனாதிபதியின் அதிகாரம் பெயரளவானது)*
- *இலங்கையின் இறுதி மேன் முறையிட்டு நீதிமன்றமாக உயர் நீதிமன்றம் அமைக் கப்பட்டது.*
- *அரசியலமைப்பு நீதிமன்றம் உருவாக்கப்பட்டது.*
- *அரசாங்க சேவை ஆலோசனைச் சபை, அரசாங்கச் சேவை ஒழுக்காற்றுச் சபை மற்றும் நீதிச் சேவை ஆலோசனைச் சபை, நீதிச் சேவை ஒழுக்காற்றுச் சபை என்பன ஏற்படுத்தப்பட்டன.*
- *அடிப்படை உரிமைகள் அத்தியாயம் முதன் முதலாக யாப்பில் சேர்க்கப்பட்டது.*

**1978 இரண்டாம் குடியரசு யாப்பின் மூலம்**

- *நிறைவேற்றதிகாரம் கொண்ட சனாதிபதி பதவி அறிமுகப்படுத்தப்பட்டது.*
- *சனாதிபதி தலைமையிலான அமைச்சரவை (கெபினட்) அறிமுகப்படுத்தப்பட்டது.*
- *எளிய பெரும்பான்மை பிரதிநிதித்துவ முறை நீக்கப்பட்டு விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறை ஏற்படுத்தப்பட்டது.*
- *தேர்தல் மூலம் தெரிவு செய்யப்படும் 196 மக்கள் பிரதிநிதிகளையும் தேசியப் பட்டியல் மூலம் நியமிக்கப்படும் 29 பிரதிநிதிகளையும் உள்ளடக்கி 225 பேரைக் கொண்ட பாராளுமன்றம் அறிமுகப்படுத்தப்பட்டது.*
- *அரசாங்க சேவை ஆணைக்குழு, நீதிச்சேவை ஆணைக்குழு என்பன மீண்டும் அறிமுகப்படுத்தப்பட்டன.*
- *அடிப்படை உரிமைகளை யாப்பில் இணைத்து மனித உரிமைகளைப் பாதுகாப் பதற்கான ஏற்பாடுகள் யாப்பின் மூலம் உறுதி செய்யப்பட்டது.*
- *நிருவாகத்துக்கான பாராளுமன்ற ஆணையாளர் நாயகம் (ஓம்புட்ஸ்மன்) பதவி அறிமுகப்படுத்தப்பட்டது.*

*இன்றைய இலங்கை ஒன்பது மாகாணங்களாகவும் இருபத்தைந்து நிருவாக மாவட்டங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. அவை வருமாறு,*

**மேல் மாகாணம்**

1. கொழும்பு மாவட்டம்
2. கம்பஹா மாவட்டம்
3. களுத்துறை மாவட்டம்

**மத்திய மாகாணம்**

4. கண்டி மாவட்டம்
5. மாத்தளை மாவட்டம்
6. நுவரெலியா மாவட்டம்

**தென் மாகாணம்**

7. காலி மாவட்டம்
8. மாத்தறை மாவட்டம்
9. அம்பாந்தோட்டை மாவட்டம்

**வட மாகாணம்**

10. யாழ்ப்பாண மாவட்டம்
11. கிளிநொச்சி மாவட்டம்
12. மன்னார் மாவட்டம்
13. வவுனியா மாவட்டம்
14. முல்லைத்தீவு மாவட்டம்

**கிழக்கு மாகாணம்**

15. மட்டக்களப்பு மாவட்டம்
16. அம்பாறை மாவட்டம்
17. திருகோணமலை மாவட்டம்

**வடமத்திய மாகாணம்**

18. பொலனறுவை மாவட்டம்
19. அநுராதபுர மாவட்டம்

**வடமேல் மாகாணம்**

20. குருணாகல் மாவட்டம்
21. புத்தளம் மாவட்டம்

**ஊவா மாகாணம்**

22. பதுளை மாவட்டம்
23. மொனராகலை மாவட்டம்

**சப்பிரகமுவ மாகாணம்**

24. இரத்தினபுரி மாவட்டம்
25. கேகாலை மாவட்டம்

## இலங்கையின் மாவட்டங்கள்




*உரு 2.1*

## இலங்கையின் மாகாணங்கள்




உரு 2.2

## இலங்கையில் மாகாண சபை முறை

இலங்கையில் அதிகாரப் பிரிவினை தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் சிலவற்றை வரலாற்றில் அவதானிக்கலாம். அதாவது,

1928 - டொனமூர் ஆணைக்குழு அறிக்கை
1945 - சோல்பரி ஆணைக்குழு அறிக்கை
1957 - பண்டாரநாயக்க - செல்வநாயகம் ஒப்பந்தம் (ரட்ட சபைகள்)
1965 - டட்லி சேனாநாயக்க - செல்வநாயகம் ஒப்பந்தம் (மாவட்ட சபைகள்)
1980 - மாவட்ட அபிவிருத்தி சபைகள் அமைத்தல்

இலங்கைக் குடியரசு யாப்பின் மீது மேற்கொள்ளப்பட்ட 13ஆம் சீர்த்திருத்தம், 1987 ஆம் ஆண்டின் 42ஆம் இலக்க மாகாண சபைக் கட்டளைச் சட்டம் என்பன மூலம் மாகாண சபைகளை உருவாக்குவதற்காக சட்ட ரீதியான அடிப்படை இடப்பட்டது. இதன் பிரகாரம் ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒவ்வொரு மாகாண சபை உருவாக்குவதற்குத் திட்டமிடப்பட்டது. 1978 அரசியல் யாப்பின் எட்டாவது உபதலைப்பின் படி இலங்கை ஒன்பது மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டது.

மத்திய அரசுக்குரிய சட்டத்துறை, நிறைவேற்றுத்துறை, நீதித்துறை அதிகாரங்களை சில வரையறைகளுக்கு உட்பட்ட வகையில் குறிப்பிட்ட மாகாணங்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட மாகாண சபைகளிடம் பகிர்ந்தளிக் கப்படும் செயன்முறையே மாகாண சபைகள் மூலம் இடம்பெறுகின்றது.

## இலங்கையில் உள்ளூராட்சி மன்ற முறை

உள்ளூராட்சி மன்ற ஆட்சி முறை தொடர்பில் இலங்கைக்கு நீண்ட வரலாறு உண்டு. இதனை வரலாற்றுத் தகவல்கள் மூலம் அறியலாம். அதற்கான உதாரணங்கள் சிலவற்றைப் பார்ப்போம்.

- கமிக, பருகம, காம்போஜக முதலிய தலைவர்களால் கிராமங்களின் நிர்வாகமும் நகர குத்திகர் எனும் பதவி வகிப்போரால் நகர நிர்வாகமும் மேற்கொள்ளப்பட்டமை
- வேவல்கெட்டிய கல்வெட்டின்படி 10 கிராமங்களை ஒரு நிர்வாக அலகாகக் கொண்டு 'தசகம்' எனும் உள்ளூராட்சிமன்ற முறை காணப்பட்டமை
- கண்டி இராசதானிக் காலத்திலும் பத்துக் கிராம நிர்வாகம் பற்றிக் குறிப்பிட்டுள்ளமை
- கண்டி இராச்சியம் நிர்வாகத்தை இலகுபடுத்தும் பொருட்டு 4 மகா திசாவைகள், 8 திசாவைகள் 9 ரட்டைகள் எனப் பிரிக்கப்பட்டிருந்தமை
- கிராம சபைகள் மூலம் கிராம நிர்வாகம் மேற்கொள்ளப்பட்டமை பற்றி 1681 ஆம் ஆண்டு எழுதப்பட்ட ரொபட் நொக்சின் குறிப்புகள் உறுதிப்படுத்துகின்றன

ஆட்சி நிர்வாக நடவடிக்கைளில் மக்களின் பங்களிப்பைப் பெற்றுக்கொள்வதும் குறிப்பிட்ட பிரதேச மக்களின் கருத்துகளுக்கேற்ப மத்திய அரசாங்கத்தின் நட வடிக்கைகளைத் திட்டமிட்டு செயற்படுத்துவதும் உள்ளூராட்சி முறை மூலம் எதிர்பார்க்கப்படுகின்றது. உள்ளூராட்சி மன்றங்கள் பிரதேச ரீதியாகவும் நகர ரீதியாகவும் மத்திய அரசாங்கத்தால் அமைக்கப்பட்டுள்ளதுடன், குறிப்பிட்ட பிரதேசத் தில் மக்கள் பிரதிநிதிகளைக் கொண்டதாக உள்ளூராட்சி மன்றங்கள் அமைந்திருக்கும். இந்நிறுவனங்கள் மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தைப் பிரதேச மட்டத்தில் செயற்படுத்துவதையே பிரதான பணியாக மேற்கொள்கின்றன. விசேடமாக சமூக சேவைகளைச் செயற்றிறனுடன் மேற்கொள்வதன் மூலம் சமூக அபிவிருத்தியை முறைமைப்படுத்தும் நோக்கில் இலங்கையில் பல்வேறு வகையான உள்ளூராட்சி மன்றங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

- 1865 மாநகர சபைக் கட்டளைச் சட்டத்தின் மூலம் மாநகர சபைகள் (கொழும்பு, காலி, கண்டி) உருவாக்கப் பட்டன.
- 1934 கட்டளைச் சட்டத்தின் மூலம் கிராம சபைகள் உருவாக்கப்பட்டன.
- 1939 கட்டளைச் சட்டத்தின் மூலம் நகர சபைகள் உருவாக்கப்பட்டன.
- 1939 கட்டளைச் சட்டத்தின் மூலம் பட்டின சபைகள் உருவாக்கப்பட்டன.
- 1980 பட்டின சபைகள், கிராம சபைகள் நீக்கப்பட்டு மாவட்ட அபிவிருத்தி சபைகள் உருவாக்கப்பட்டன.
- 1987 பிரதேச சபைகள் உருவாக்கப்பட்டன.

மத்திய அரசாங்கத்தின் பணிகளை இலகுவாகவும் பிரசைகளின் தேவைகளை துரிதமாக நிறைவேற்றிக் கொடுப்பதற்காகவும் உள்ளூராட்சி மன்றங்கள் இலங்கையில் செயற்பட்டு வருகின்றன. இலங்கையில் மத்திய அரசாங்கம், மாகாண சபைகள், உள்ளூராட்சி மன்றங்கள் மூலம் அரசாங்கத்தின் பல்வேறு படிநிலைகளில் ஆட்சி நிர்வாக நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

### பிரதேச நிர்வாக அலகுகளுக்கு அதிகாரத்தைப் பரவலாக்கம் செய்வதில் செல் வாக்குச் செலுத்தும் காரணிகள்

இலங்கையில் அதிகாரப் பரவலாக்கம் தொடர்பாக இன்றைய காலகட்டத்தில் மாகாண சபைகளும் உள்ளூராட்சி மன்றங்களும் நடைமுறையில் உள்ளன. அவற்றின் மூலம்:-

- ஒற்றையாட்சி முறையின் கீழ் மாகாண மட்டத்தில் மக்களுக்கு அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டுள்ளன.
- மாகாண மட்டத்தில் பல்வேறு இனக் குழுக்கள் மூலம் மொழி மற்றும் கலாசாரத்தின் தனித்துவம் உறுதிப்படுத்தப்படுகிறது
- குறிப்பிட்ட மாகாணங்களின் அபிவிருத்தி மற்றும் நிர்வாக நடவடிக்கைகளைத் துரிதப்படுத்துவதும் அதன் மூலம் அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சி னைகளை இலகுபடுத்திக் கொள்வதும் எதிர்பார்க்கப்படுகின்றது
- பிரதேச அபிவிருத்தியைத் துரிதப்படுத்தல்

- பிரதேசத்தின் வளங்களை இனங்காணலும் அதனை அபிவிருத்திக்காகப் பயன்படுத்தலும்
- நிர்வாக நடவடிக்கைகளுக்காக விரிவான வகையில் மக்கள் பங்கேற்பை ஏற்படுத்தல்
- மக்களின் அடிப்படைத் தேவைகளை இலகுவாக நிறைவேற்றுதல்
- மக்களுக்கு சமீபமான வகையில் நிர்வாக அலகுகளை உருவாக்குதல்
- பிரதேசத் தலைமைத்துவத்தை வளர்ப்பதன் ஊடாக தேசியத் தலைமைத்துவத்திற்கும் இளைஞர் தலைமைத்துவத்திற்கும் வாய்ப்பளித்தல்
- மத்திய அரசாங்கத்தின் பணிகளை இலகுபடுத்தல்

**அதிகாரப் பரவலாக்கத்தின் போது ஏற்படும் பிரச்சினைகள்**

- வளப் பகிர்வின் குறைபாடு காரணமாக சில பிரதேச நிர்வாக அலகுகளுக்கு அதிக வளங்களும் சில பிரதேச அலகுகளுக்கு குறைந்தளவு வளங்களும் பகிர்ந்தளிக்கப்படல்
- பிரதேச நிர்வாக அலகுகளின் செயற்பாடுகள் மற்றும் பொதுமக்களின் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கு அணுக வேண்டிய முறை பற்றிய போதிய விளக்கமின்மை
- அதிகாரங்களைச் செயற்படுத்துவது தொடர்பாக மத்திய அரசாங்கத்திற்கும் பிரதேச நிர்வாக அலகுகளுக்கும் இடையில் முரண்பாடுகள் தோன்றுதல்
- அபிவிருத்தி நடவடிக்கைளை மேற்கொள்வதற்கு மாகாண சபைகளுக்கும் உள்ளூராட்சி மன்றங்களுக்கும் போதியளவு அதிகாரங்கள் வழங்கப்படாமை
- அபிவிருத்தித் திட்டங்களை செயற்படுத்துவதற்கான நிதியைத் தேடிக் கொள்வதில் உள்ள சிரமம்
- பல நிறுவனங்கள் ஒரே பணியில் ஈடுபடும்போது அந்நிறுவனங்களில் பொறுப்புக் கூறலில் ஏற்படும் பிரச்சினைகள்

**செயற்பாடு 2-1**

- வகுப்பு மாணவர்களைக் குழுக்களாகப் பிரிக்க.
- 1833 முதல் 1947 வரையிலான இலங்கை அரசியல் யாப்பு சீர்திருத்தங்கள் மூலம் அறிமுகப்படுத்தப்பட்ட அடிப்படை இயல்புகளைக் அட்டவணைப்படுத்துக.
- குழுக்களிலிருந்து எழுமாற்றாகத் தெரிவு செய்யப்படும் மாணவர்களைக் கொண்டு யாப்புகளுக்கு உரிய குறிப்பு அட்டவணையின் அம்சங்களை முன்வைக்குக.

### செயற்பாடு 2-2

- 1833 முதல் 1947 வரையிலான அரசியல் யாப்பு சீர்த்திருத்தங்களின் அடிப்படையில் சட்டசபை உறுப்பினர்களின் எண்ணிக்கையில் ஏற்பட்ட மாற்றங்களை இலகுவாக இனங்காணும் வகையில் அட்டவணை ஒன்றைத் தயாரிக்கவும்.
- சிறந்த அட்டவணையை வகுப்பறையில் காட்சிப்படுத்தவும்.

### செயற்பாடு 2-3

- இலங்கைக்கு மிகவும் பொருத்தமான ஆட்சிமுறை அமைச்சரவை ஆட்சி முறையா அல்லது ஜனாதிபதி ஆட்சி முறையா எனும் தலைப்பில் விவாதம் ஒன்றை ஏற்பாடு செய்க. விவாதக் குழுக்கள் இரண்டையும் நடுவர்களையும் மாணவர்களிலிருந்து தெரிவு செய்க. எஞ்சிய மாணவர்களைப் பார்வையாளர்களாக இணைத்துக் கொள்க.

## இலங்கையில் மத்திய அரசாங்கம், மாகாண சபைகள், உள்ளூராட்சி மன்றங்கள் எனும் நிறுவனங்களின் அதிகாரங்களும் பணிகளும்

மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களும் பணிகளும் பற்றிய கட்டமைப்பு



| | | |
|---|---|---|
| • ஆணைகளையும் கட்டளைகளையும் பிறப்பித்தல்<br>• சட்டத் துறைசார் பணிகள் | • அரசாங்கத்தின் செயற்பாடுகளை விமர்சித்தல்<br>• சட்டமியற்றுதல் | • உயர் நீதிமன்றத்துக் குரிய விசேட பணிகளைச் செயற்படுத்தல் |

## நிறைவேற்றுத் துறை

1978 இரண்டாம் குடியரசு யாப்பிற்கமைவாக சனாதிபதி என்பவர் அரசின் தலைவரும் நிறைவேற்றுத்துறையின் தலைவரும் அரசாங்கத்தின் தலைவரும் முப்படைகளின் தளபதியும் ஆவார்.

1978 இலங்கை சனநாயக சோசலிச குடியரசு யாப்பின் 30 (1) பிரிவு நிறைவேற்று சனாதிபதி பதவி தொடர்பாகப் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

''இலங்கைக் குடியரசின் ஜனாதிபதி என்பவர் அரசின் தலைவரும் ஆட்சித் துறையின் தலைவரும் அரசாங்கத்தின் தலைவரும் ஆயுதப் படைகளின் படைத் தலைவருமாவார்.''

## 1978 சனாதிபதிக்குரிய சட்டத்துறை அதிகாரங்கள்

- பாராளுமன்றத்தைக் கூட்டுதல், கலைத்தல், ஒத்திவைத்தல்
- பாராளுமன்றத்தின் முதல் கூட்டத்தில் அரசாங்கத்தின் கொள்கைப் பிரகடனத்தை முன்வைத்தல்
- விசேட சட்டங்களுக்கான மசோதாக்களை மக்கள் தீர்ப்பு வாக்கெடுப்புக்கு விடல்

**உதாரணமாக,**

1. அரசியல் யாப்பின் 1, 2, 3, 6, 7, 8, 9, 10, 11, 30 (2) மற்றும் 62 (2) எனும் பிரிவில் கொண்டு வரப்படும் மாற்றங்கள்.
2. அமைச்சரவையில், மக்கள் தீர்ப்பு வாக்கெடுப்பிற்கு விடுவதாக தீர்மானிக்கப்பட்ட விடயங்கள்
3. உயர்நீதிமன்றம், மக்கள் தீர்ப்பு வாக்கெடுப்பின் மூலம் தீர்த்துக் கொள்ளுமாறு தீர்ப்பு வழங்கிய மாசோதாக்கள்

    - மக்கள் தீர்ப்பு வாக்கெடுப்பின் மூலம் வெற்றி பெற்ற மசோதாவை சட்டமாகப் பிறப்பித்தல்
    - பாராளுமன்றத்தில் உரையாற்றலும் பாராளுமன்றத்துக்கு செய்திகளை அனுப்பி வைத்தலும்

### 1978 சட்டத்துறை (பாராளுமன்றம்)

இரண்டாம் குடியரசு யாப்பின் சட்டத்துறை 'பாராளுமன்றம்' எனப் பெயரிடப் பட்டுள்ளது. பாராளுமன்றத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தும் 225 உறுப்பினர்களும் சட்டத்துறையின் அங்கத்தவர்களாவர்.

அரசியல் யாப்பின் ஏற்பாடுகளுக்கேற்ப 22 தேர்தல் மாவட்டங்களினதும் வாக்காளர் களால் பொதுத் தேர்தலின்போது தெரிவு செய்யப்படும் 196 உறுப்பினர்களுடன் தேசியப்பட்டியல் மூலம் நியமிக்கப்படும் 29 உறுப்பினர்களும் பாராளுமன்றத்தில் இடம்பெறுவர்.

| | | |
|---|---|---|
| • | தேர்தலில் போட்டியிட்டு நியமிக்கப்படு உறுப்பினர் தொகை - | 196 |
| • | தேசியப் பட்டியல் மூலம் நியமிக்கப்படு உறுப்பினர் தொகை | 29 |
| • | மொத்தப் பாராளுமன்ற உறுப்பினர் தொகை | 225 |

யாப்பின் பிரகாரம் பாராளுமன்றத்தின் பதவிக் காலம் ஐந்து வருடங்களாகும். எனவே, ஐந்து வருடங்களுக்கொருமுறை நடைபெறும் பாராளுமன்றப் பொதுத் தேர்தலின் மூலம் சட்டத் துறைக்கான அங்கத்தவர்கள் தெரிவு செய்யப்படுவர்.

### சட்டத்துறையின் அதிகாரங்களும் பணிகளும்

பொதுத் தேர்தலின் போது தெரிவு செய்யப்படும் புதிய பாராளுமன்றத்தின் முதல் பணியாக அமைவது, பாராளுமன்ற நடவடிக்கைகளை முன்னெடுத்துச் செல்வதற்காக சபாநாயகர், பிரதி சபாநாயகர், குழுக்களின் பிரதித் தலைவர் எனும் பதவிகளுக்குரிய நபர்களை, பாராளுமன்ற உறுப்பினர்கள் தமது வாக்களிப்பின் மூலம் தெரிவு செய்தலாகும். பாராளுமன்றத்தின் ஏனைய பிரதான பணிகளாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

1. சட்டமியற்றுதல்
2. நிறைவேற்றத்துறையைக் கட்டுப்படுத்தலும் பதவி நீக்கலும்
3. வரவு செலவுத் திட்ட நிர்வாகம், நிதி நிர்வாகம்
4. வினாக்களைத் தொடுத்தல்
5. நிறைவேற்றுத்துறைக்குத் தேவையான பெரும்பான்மையை வழங்குதல்
6. பொதுமக்களின் குறைபாடுகளை முன்வைத்தல்
7. அரசாங்கத்தின் செயற்பாடுகளை நேர்மையாக விமர்சித்தல்
8. அரசியல் யாப்பு சீர்திருத்தற்களை மேற்கொள்ளல்
9. குற்றப் பிரேரணைகளை முன்வைத்தல்
10. நம்பிக்கையில்லாப் பிரேரணைகளை நிறைவேற்றுதல்
11. எதிர்காலத்திற்கான தலைவர்களைப் பயிற்றுவித்தல்
12. சட்டங்களுக்கு அங்கீகாரம் அளித்தல்

## நீதிமன்றங்களின் அதிகாரங்களும் பணிகளும்

இலங்கையில் பல நீதிமன்றங்கள் செயற்படுகின்றன. அதுதொடர்பாக நீங்கள் சட்டமும் நீதியும் எனும் அத்தியாயத்தில் விளங்கியிருப்பீர்கள். நீதிமன்றங்களால் ஆற்றப்படும் பிரதான பணிகள் பின்வருமாறு.

- சட்டத்திற்கு விளக்கமளித்தல்
- வழக்குகளை விசாரணை செய்தல், நீதியை நிலைநாட்டுதல்
- மனித உரிமைகளைப் பாதுகாத்தல்
- அரசியல் யாப்பைப் பாதுகாத்தல்
- மாகாண சபைகள், உள்ளூராட்சி மன்றங்கள், மத்திய அரசாங்கம் என்பவற்றுக்கிடையே ஏற்படும் முரண்பாடுகளைத் தீர்த்தல்
- சட்ட உருவாக்கத்திற்கான ஆலோசனைகளை வழங்குதல்

''தரம் 10 குடியியற் கல்விப் பாட நூலில் அதிகாரத்தைப் பன்முகப்படுத்தலும் பகிர்ந்தளித்தலும்'' எனும் அத்தியாயத்தில் மாகாண சபை அதிகாரங்களும் பணிகளும் எனும் பகுதியை வாசிக்கவும்

## உள்ளூராட்சி மன்றங்களின் கட்டமைப்பும் அதிகாரங்களும் பணிகளும்

இன்று இலங்கையில் மூன்று வகையான மன்றங்கள் செயற்படுகின்றன.

- மாநகர சபைகள்
- நகர சபைகள்
- பிரதேச சபைகள்

மத்திய அரசாங்கத்தின் பிரதேச ரீதியாக நிறைவேற்ற வேண்டிய அபிவிருத்தி நடவடிக்கைகள் மற்றும் நலன்புரி நடவடிக்கைகளை இலகுபடுத்திக் கொள்வதையும் செயற்திறன்மிக்க பொதுமக்கள் சேவையை வழங்குவதையும் நோக்காகக் கொண்டு உள்ளூராட்சி மன்றங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பிரதேசத்தின் தேவைகளை இனங்கண்டு பொதுமக்களுக்கு துரிதமாக சேவைகளை வழங்கும் வகையில் அந்நிறுவனங்கள் செயற்படுகின்றன.

- மாநகர சபையின் தலைவர் - மேயர்
- நகர சபையின் தலைவர் - தலைவர் (தவிசாளர்)
- பிரதேச சபையின் தலைவர் - தலைவர் (தவிசாளர்)

உள்ளூராட்சி மன்றங்களுக்கான உறுப்பினர்கள் நான்காண்டுகளுக்கு ஒருமுறை நடாத்தப்படும் உள்ளூராட்சி மன்றத் தேர்தல் மூலம் தெரிவு செய்யப்படுவர். நகரங்களிலும் கிராமங்களிலும் தலைமைத்துவத்தை உருவாக்குவதில் உள்ளூராட்சி மன்றத் தேர்தல் பெரிதும் உதவுகின்றது.

**செயற்பாடு 2 - 4**



- உங்கள் பிரதேசத்தில் மாநகர சபை, நகர சபை, பிரதேச சபைகளுக்கு போட்டியிட்டுத் தெரிவான உறுப்பினர்கள் தேசிய அரசியலில் இணைந்துள்ளனரா என்பது தொடர்பாக ஆசிரியருடன் கலந்துரையாடுங்கள்.

### மாநகர சபைகள்

1947ம் ஆண்டு 16ஆம் இலக்க மாநகர கட்டளைச் சட்டத்திற்கமைவாக மாநகர சபைகள் உருவாக்கப்பட்டுள்ளன. ஒரு குறிப்பிட்ட பிரதேசத்திற்கான மாநகர சபையைப் பிரகடனப்படுத்துவது, அதன் எல்லைகளை நிர்ணயிப்பது, அதனைப் பெயரிடுவது எனும் அதிகாரங்கள் உள்ளூராட்சி அமைச்சருக்கே வழங்கப்பட்டுள்ளன. மாநகர சபை என்பது உயரிய மட்டத்தில் நகரத் தன்மை பொருந்திய பிரதேசங்களிலேயே ஏற்படுத்தப்படும். தற்சமயம் இலங்கையில் 23 மாநகர சபைகள் செயற்படுகின்றன. மாநகர சபை ஒன்றில் மேயர், பிரதி மேயர், மாநகர சபை உறுப்பினர்கள் என்போர் உள்ளடங்குவர்.

### மாநகர சபைகளுக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள்

- நகர எல்லைக்குள் நீர் விநியோகத்தை மேற்கொள்ளல்
- வீதி விளக்குகளை அமைத்துப் பராமரித்தல்
- குப்பை கூளங்களை அகற்றுதல்
- புதிய வீதிகளை அமைத்தல்
- வீடமைப்புத் திட்டங்களைச் செயற்படுத்தல்
- நூல் நிலைய வசதிகளை ஏற்படுத்துதல்
- சனசமூக நிலையங்களை அமைத்தல்
- விளையாட்டு மைதானம், விளையாட்டரங்கம் என்பவற்றை அமைத்தல்
- பொது மலசலகூட வசதிகளை செய்து கொடுத்தல்
- பொழுது போக்கிற்கான இடங்களை நிர்வகித்தல்
- அளவை, நிறுவை நடவடிக்கைகளை நிர்வகித்தல்
- சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை நடைமுறைப்படுத்தல், பொதுக் கிணறு மற்றும் குளியல் இடங்களை நடைமுறைப்படுத்தல்

### நகர சபைகள்

1939 ஆம் ஆண்டு 61 ஆம் இலக்க நகர சபைக் கட்டளைச் சட்டத்தின் பிரகாரம் நகர சபைகள் உருவாக்கப்பட்டுள்ளன. மாநகர சபையைப் போன்றே நகர சபை ஒன்றைப் பிரகடனப்படுத்துவது, அதன் எல்லைகளை நிர்ணயிப்பது, அதற்குப் பெயரிடுவது எனும் அதிகாரங்கள் உள்ளூராட்சி அமைச்சரையே சாரும். தற்சமயம் இலங்கையில் 41 நகர சபைகள் செயற்படுகின்றன. நகர சபையில் தவிசாளர் (தலைவர்) பிரதித் தவிசாளர் (பிரதித் தலைவர்), நகர சபை உறுப்பினர்கள் என்போர் உள்ளடங்குவர். மாநகர சபைகளுக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள், நகர சபைகளுக்கும் வழங்கப்பட்டுள்ளன.

## பிரதேச சபைகள்

1987 ஆம் ஆண்டு 15 ஆம் இலக்கக் கட்டளைச் சட்டம் மூலம் பிரதேச சபைகள் உருவாக்கப்பட்டுள்ளன. தற்போது இலங்கையில் 271 பிரதேச சபைகள் இயங்கு கின்றன. மாநகர சபையிலும் நகர சபையைப் போன்று பிரதேச சபை ஒன்றைப் பிரகடனப்படுத்துவது, எல்லைகளை நிர்ணயம் செய்வது, பெயரிடுவது எனும் அதிகாரங்கள் உள்ளூராட்சி அமைச்சரையே சாரும்.

பிரதேச சபையொன்றின் எல்லை, பெரும்பாலும் குறிப்பிட்ட பிரதேச செயலகத்தின் எல்லையாகவே அமையும். எல்லாப் பிரதேச சபைகளிலும் தவிசாளர் (தலைவர்), பிரதித் தவிசாளர் (பிரதித் தலைவர்) பிரதேச சபை உறுப்பினர்கள் என்போர் உள்ளடங்குவர். இலங்கைச் சனத்தொகையின் பெரும் பகுதியினர் பிரதேச சபை எல்லைகளிலே வாழ்கின்றனர். மாநகர சபைகளுக்குரிய அதிகாரங்கள், பணிகள் என்பன பெரும்பாலும் பிரதேச சபைகளுக்கும் பொருந்தும்.

**இலங்கை உள்ளூராட்சி மன்றங்கள் 2015**

| மாகாணங்கள் | மாநகர சபைகள் | நகர சபைகள் | பிரதேச சபைகள் | மொத்தம் |
|---|---|---|---|---|
| மேல் மாகாணம் | 07 | 14 | 27 | 48 |
| மத்திய மாகாணம் | 04 | 06 | 33 | 43 |
| தென் மாகாணம் | 03 | 04 | 42 | 49 |
| வட மாகாணம் | 01 | 05 | 28 | 34 |
| கிழக்கு மாகாணம் | 03 | 05 | 37 | 45 |
| வடமேல் மாகாணம் | 01 | 03 | 29 | 33 |
| வடமத்திய மாகாணம் | 01 | 00 | 25 | 26 |
| ஊவா மாகாணம் | 02 | 01 | 25 | 28 |
| சப்ரகமுவ மாகாணம் | 01 | 03 | 25 | 29 |
| மொத்தம் | 23 | 41 | 271 | 335 |

இலங்கை உள்ளூராட்சி மன்றங்களுக்கு வழங்கப்பட்டுள்ள செயற்பாடுகளை மூன்று தலைப்புகளுக்குள் உள்ளடக்கலாம்.

1. **பொது வீதிகள்**

வீதிகளைப் பாதுகாத்தல்
வீதிகளைப் பரிபாலித்தல்
வீதிகளை அமைத்தல்
வீதிகளுக்குரிய நில அளவீடுகள் மேற்கொள்ளப்பட்டு தடைகளை அகற்றுதல்
வீதிகளில் நீர்க்குழாய் மற்றும் வடிகால்களுக்கான குழாய்களைப் பொருத்துதல்,
உள் வீதிகளை அமைத்தல்

2. **பொதுச் சுகாதாரம்**

வடிகால்களை அமைத்தலும் திருத்தலும்
பொது மலசலகூடங்களை அமைத்தலும் பரிபாலித்தலும்
கழிவு அகற்றுவதில் முறையான வழியொன்றை நடைமுறைப்படுத்தல்
முறையற்ற கட்டடங்களை அகற்றல்
பொதுச் சுகாதார வசதிகளை மேம்படுத்தல்

3. **பொதுப் பயன்பாட்டு சேவைகள்**

பொது இடங்களுக்கு மின்னொளி வசதி செய்தல்
பொதுச் சந்தைகளைப் பரிபாலித்தல்
பூங்காக்கள், விளையாட்டு மைதானங்களைப் பரிபாலித்தல்
நீர்விநியோக நடவடிக்கைகள்
பொதுக் குளியல் இடங்களைப் பரிபாலித்தல்
பொது நூலகம், வாசிகசாலை என்பவற்றை ஏற்படுத்தி பராமரித்தல்

**மாகாண சபைகள் மற்றும் உள்ளூராட்சி மன்றங்களின் பயன்கள்**

- பொதுமக்களுக்கான சேவைகளை இலகுவாகப் பெற்றுக் கொள்ள முடிதல்
- பிரதேச ரீதியாகவும் தேசிய ரீதியாகவும் தலைவர்களை உருவாக்கக் கூடியதாயிருத்தல்
- பிரதேச அபிவிருத்தி நடவடிக்கைளைப் பயனுள்ள வகையிலும் துரிதமாகவும் மேற்கொள்ள முடிதல்
- சுகாதார நடவடிக்கைளை முறையாக மேற்கொள்ளல்
- முன்பள்ளி, தாய் சேய் மருத்துவ நிலையங்கள் மூலம் மக்களின் கல்வி மற்றும் சுகாதார வசதிகளை மேம்படுத்தல்
- நகர மக்களின் ஓய்வு நேரத்தைப் பயனுள்ள முறையில் கழிப்பதற்கும் அறிவைப் பெற்றுக் கொள்ளவும் வசதிகளைச் செய்து கொடுத்தல்.

**செயற்பாடு 2 - 5**

- உங்கள் பாடசாலை அமைந்துள்ள உள்ளூராட்சி மன்றத்தின் மூலம் ஆற்றப்படும் சேவைகளை அவதானிக்குக.
- உள்ளூராட்சி மன்றங்களைப் பற்றி அறிந்து கொள்ளும் வகையில் களப் பயணம் ஒன்றை மேற்கொள்க.
- உள்ளூராட்சி மன்றமொன்றின் பொறுப்பு வாய்ந்த அதிகாரி ஒருவரை பாடசாலைக்கு அழைத்து அந்நிறுவனம் ஆற்றும் பணிகள் தொடர்பாக கலந்துரையாடுக.
- உங்கள் களப்பயணம் அல்லது கலந்துரையாடலின் மூலம் பெற்றுக் கொண்ட அனுபவங்களைக் கொண்டு ''உள்ளூராட்சி மன்றங்களும் பிரதேச அபிவிருத்தியும்'' எனும் தலைப்பில் நூல் ஒன்றைத் தயாரிக்குக.

### பிரசைகள் தொடர்பில் அரசாங்கத்தின் பொறுப்புகள்

அரசாங்கத்தின் பல்வேறு படிநிலைகளான மத்திய அரசாங்கம், மாகாண சபைகள், உள்ளூராட்சி மன்றங்கள் என்பவற்றின் முக்கிய பொறுப்பு என்னவெனில், அரச சட்டத்தையும் சமாதானத்தையும் நிலைநாட்டி மக்களின் தேவைகளை உச்ச அளவில் நிறைவேற்றுவதாகும். உள்ளூராட்சி மன்றங்களின் பங்களிப்பைப் போன்றே மக்களின் பங்களிப்பும் இங்கு மிக முக்கியமானது.

### பிரசைகள் தொடர்பில் மேற்படி நிறுவனங்களின் பொறுப்புகள் பின்வருமாறு

- பிரதேசத்தின் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதன் மூலம் தேசியப் பாதுகாப்பை உறுதிப்படுத்தல்
- பிரதேசத்தின் பொருளாதாரத்தை மேம்படுத்துவதன் மூலம் தேசிய அபிவிருத்தியை ஏற்படுத்தல்
- சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டல்
- தேசிய அபிமானத்தை மேம்படுத்தல்
- சுற்றாடல் முகாமைத்துவம் மற்றும் சுற்றாடல் பாதுகாப்பு நடவடிக்கைளைச் செயற்படுத்தல்
- கலாசார பாரம்பரியங்களைப் பாதுகாத்தல்
- சமூகத்தில் நல்லிணக்கத்தை ஏற்படுத்தல்
- மக்களுக்கான சேவைகளைத் திட்டமிட்ட வகையில் செயற்படுத்தல்
- பிரதேச ரீதியாகவும் தேசிய ரீதியாகவும் அபிவிருத்தி நடவடிக்கைகளை திட்டமிட்டுச் செயற்படுத்தல்
- பொதுச் சொத்துகளைப் பரிபாலித்தல், பாதுகாத்தல், அபிவிருத்தி செய்தல்
- மனித உரிமைகளைப் பாதுகாத்தலும் தலைவர்களை உருவாக்குதலும்

''பொறுப்பேற்றல்'' என்பது தனக்கு வழங்கப்பட்ட செயற்பாடுகளைச் சிறப்பாகச் செய்தல் ஆகும்.
''பொறுப்புக் கூறல்'' என்பது பொறுப்புகளை நிறைவேற்றுவது தொடர்பிலான கடமையாகும்.

### தேசியப் பாதுகாப்பை நடைமுறைப்படுத்துவதில் ஒத்துழைப்புடன் செயற்படுதல்

- பயனுள்ள தொழில் ஒன்றில் ஈடுபடுதல்
- இலஞ்சம், ஊழல், வீண்விரயம் போன்ற குற்றச் செயல்களைத் தடுத்தல்
- சுதந்திரம், நீதி, உரிமைகளைப் பாதுகாத்தல்
- தேசிய அபிமானம் மற்றும் தேசிய மரபுகளைப் பாதுகாப்பதில் பங்களிப்புச் செய்தல்.
- சிறுவர்கள், முதியவர்கள், அங்கவீனர்கள் நோயாளர்களைப் பாதுகாத்தலும் அன்பு காட்டி போசித்தலும்

- அரசின் சமூக நலன்புரி சேவைகளை முறையற்ற விதத்தில் பயன்படுத்துவதைத் தவிர்த்து அதனைப் பாதுகாத்தல்

**சமூக அபிவிருத்திக்கும் நல்லாட்சிக்கும் பங்களிப்புச் செய்தல்**

- முரண்பாடுகள் ஏற்படாமல் தவிர்த்துக் கொள்வதும் முரண்பாடுகளை தவிர்ப் பதற்குப் பங்களிப்புச் செய்தலும்
- இனங்களது தனித்துவத்தைப் பாதுகாத்தலும் அவற்றை மதித்தலும் ஏனையோரின் கருத்துகள் மீதான சகிப்புத் தன்மையும் நேர்மையான நடத்தையும்
- கலந்துரையாடல் மூலம் முரண்பாடுகளைத் தீர்த்தலும் வன்முறையால் ஏற்படும் தீங்குகள் பற்றிய புரிந்துணர்வும்.
- பிரதேச அபிவிருத்தி நடவடிக்கைகளில் செயற்பாட்டு ரீதியாகப் பங்கேற்றலும் வழிகாட்டலும்
- பல்வேறு இடர் உதவிச் சேவைகளின் போது நேர்மையாகவும் நீதியாகவும் செயற்படுதல்
- சுற்றாடல் முகாமைத்துவம் தொடர்பாக பங்களிப்புச் செய்தல்
- இயற்கைச் சூழலைப் பாதுகாத்தலும் அதன் முக்கியத்துவம் பற்றிய புரிந்துணர்வை ஏற்படுத்தலும்.
- இயற்கைச் சூழலின் அழிவு மற்றும் நாச நடவடிக்கைகளிலிருந்து விலகலும் அவ்வாறு அழிவு நாச வேலைகளில் ஈடுபடுவோரைத் தவிர்த்தலும்
- குப்பைகூளங்களை அகற்றும் நடவடிக்கைகளைப் பொறுப்புடனும் முறை யாகவும் மேற்கொள்ளல்
- தீங்கிழைக்கும் கழிவுகளைச் சுற்றாடலில் இடாது தடுத்து நல்ல பிரசையாக உருவாக எப்போதும் செயற்படுதல்

நாம் இலங்கைப் பிரசைகள் எனும் வகையில் தாய்நாட்டின் மீது பற்று வைப்பதுடன் அபிமானத்திற்குரிய இனத்தவர்களாக எழுச்சியடைவதற்காக இனங்களிடையே ஒற்றுமையையும் உறுதிப்படுத்திக்கொள்ளல் வேண்டும். எப்போதும் நீதியாகவும் நேர்மையாகவும் செயற்படுவதில் கவனம் செலுத்த வேண்டும். நாட்டிலிருந்து எமக்கு கிடைக்க வேண்டிய உரிமைகளைப் பெற்றுக் கொள்வது போலவே நாட்டுக்கு நாம் செய்ய வேண்டிய கடமைகளையும் பொறுப்புடன் நிறைவேற்ற வேண்டும். அரசாங்கத்தின் பல்வேறு படிநிலைகளினதும் செயற்பாடுகள் பொது மக்களின் பணி களை இலகுபடுத்துவதற்காகவே அமைந்துள்ளன. இப்பல்வேறு நிறுவனங்களிலும் மக்களுக்காக மக்களே செயற்படுகின்றனர். எனவே பிரசைகள் தமது கடமைகளைச் சரிவர நிறைவேற்றுவதுடன் இலஞ்சம், ஊழல், வீண்விரயம் என்பவற்றைத் தடுத்தலும் வேண்டும். நீங்கள் பொறுப்பு மிக்க ஒரு முன்னுதாரணமான பிரசையாக செயற்படுவது நாட்டின் எதிர்பார்ப்பாகும்.

## செயற்பாடு 2 - 6



- அரசாங்கத்தின் பல்வேறு படிநிலைகளிலும் உள்ள நிறுவனங்கள் பிரசைகளுக்கு ஆற்ற வேண்டிய பொறுப்புகள் மற்றும் பிரசைகளால் நிறைவேற்றப்பட வேண்டிய கடமைகள் தொடர்பான அட்டவணை ஒன்றைத் தயாரிக்குக.
- வகுப்பு மாணவர்களைக் குழுக்களாகப் பிரித்து தாம் தயாரித்த அட்டவணையில் உள்ள விடயங்கள் தொடர்பாகக் கலந்துரையாடி, அவற்றுள் மிக முக்கியமான அம்சங்களை முறையாக ஒழுங்குபடுத்துக.
- ஒவ்வொரு குழுவினரும் தமது செயற்பாட்டை வகுப்பறையில் முன்வைக்குக.
- ஆசிரியரின் உதவியுடன் குழுவினர் முன்வைத்த மிக முக்கியமான விடயங் களைச் சுவரொட்டியாகத் தயாரித்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.



# மனித உரிமைகளும் கடமைகளும்

**அறிமுகம்**

மனித உரிமைகள் என்பது இயற்கைச் சுபாவமான வாழ்க்கையை வாழ்வதற்கு மனிதனுக்கு அத்தியவசியமானதும் அடிப்படையானதுமான உரிமைகளாகும். மனித உரிமைகள் சகல மனிதர்களுக்கும் பொதுவானவையுமாகும். உரிமைகளை மதித்தல், கௌரவப்படுத்தல், மனித உரிமைகள் தொடர்பான கடமைகளை நடைமுறைப்படுத்தல், சனநாயக சமூகத்தைக் கட்டியெழுப்புவதற்கு பிரசைகளின் நலன்கருதி சமத்துவத்தையும் சம உரிமையையும் சமூகத்தில் நடைமுறைப்படுத்துதல் என்பவற்றுக்கு மனித உரிமைகளைப் பற்றிய அறிவு எமக்கு அவசியமானதாகும்.

சமூகத்தில் நல்ல பிரசையாக வாழ்வதற்கு மனித உரிமைகள் மற்றும் கடமைகள் பற்றி அறிந்து கொள்வதுடன், சமூகத்தில் வாழ்வதற்கு அவற்றை நடைமுறைப்படுத்தி, நம்மை நாமே தயார்படுத்திக் கொள்வது அவசியமாகின்றது. இந்த அத்தியாயத்தை நன்கு கற்பதன் மூலம் இவற்றை மேம்படுத்துவதற்கான ஒரு நல்ல வாய்ப்பினை நீங்கள் பெற்றுக்கொள்ளலாம்.

## மனித உரிமைகள்

மனிதன் மனிதனாக வாழ்வதற்கு அவசியமான உரிமைகள் அனைத்தும் மனித உரிமைகள் என வரையறுக்கலாம். இதன் மூலம் மனிதர்களாகிய நாம் கௌரவத்துடனும் சமத்துவத்துடனும் சமூகத்தில் வாழ்வதற்கு மனித உரிமைகள் வழிவகுக்கின்றன.

மனிதனாகப் பிறப்பதே மனிதருக்கு மனித உரிமைகள் கிடைப்பதற்கான அடிப்படைத் தகைமையாகும். நாம் இதைப் பொது மனிதத் தன்மை என அழைப்போம். மனித உரிமையானது, மனிதன் வாழ்வதற்கும் அவனது கௌரவத்தைப் பாதுகாப்பதற்கும் ஓர் அடித்தளமாக அமைகிறது. மனித உரிமையை முழுமையாகப் பெற்றுக்கொள்ள முடியாத சமூகத்தில் மனிதன் சிறப்புற வாழ்வதும் பூரண அபிவிருத்தியை ஏற்படுத்திக் கொள்வதும் கடினமானதாகும். இதன் காரணமாக மனிதன் வாழ்வதற்கும் தனது கௌரவத்தைப் பாதுகாப்பதற்கும் மனித உரிமைகள் அத்தியாவசியமாகின்றன.

தற்போது உலகளாவிய ரீதியிலான பேசப்படும் முக்கிய அம்சமாக மனித உரிமைகள் மாறியுள்ளன. பொதுத்தன்மை மற்றும் சமத்துவம் என்பன இதன் அடிப்படைப் பண்புகளாகும். சாதி, இனம், மதம், மொழி, ஆண், பெண், சமூக வர்க்கங்களைக் கொண்ட அரசியல் சமூகத்தில் இவை எதனையும் கருத்திற் கொள்ளாது அனைவருக்குமான உரிமைகளைப் பெற்றுக்கொடுப்பது இதன் விசேட அம்சமாகும்.

மனித உரிமைகளைப் பாதுகாக்கின்ற மக்கள் சமூகத்தில் சனநாயகம், பாதுகாப்பு, பிரசைகளின் சமூகவாழ்வு என்பன மேம்பட்டிருக்கும். சமூகத்தில் நீதியும் நேர்மையும் மேலோங்குவதானது உரிமைகளை அடைந்து கொள்வதற்கான சாதகமான சூழ்நிலையாக அமையும்.




உரு 3.1

## மனித உரிமைகள் வெற்றி கொள்ளப்பட்ட முக்கியமான வரலாற்றுச் சந்தர்ப்பங்கள்

மனித உரிமைகள் அனைவருக்கும் எவ்வித பேதமின்றி பிறப்பிலிருந்தே கிடைக்க வேண்டும். வரலாற்று ரீதியாகப் பின் நோக்கிப் பார்க்கையில், அக்காலத்தில் மனிதர்களுக்கு தமது உரிமைகளைப் பெற்றுக்கொள்வதற்கான சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. எடுத்துக் காட்டாக, அடிமை யுகம், மானிய முறை யுகம் போன்ற பல்வேறு யுகங்களில் மனிதர்கள் இவ்வாறு வாழ்ந்து வந்தமையைக் குறிப்பிடலாம்.

மனித சமூகம் படிப்படியாக முன்னேற்றம் கண்டபோது, மனிதன் தமது உரிமைகள் தொடர்பாகக் கூடுதலான கவனத்தைச் செலுத்தத் தொடங்கினான். இதன் காரணமாக உரிமைகளை வெற்றி கொள்வதற்காக ஆட்சியாளர்களுக்கு எதிராகப் போராடுதல், பல்வேறு விதமான ஆர்ப்பாட்டங்களில் ஈடுபடல், ஆட்சியாளர்களுடன் ஒப்பந்தங்களைச் செய்தல் போன்ற செயற்பாடுகளில் ஈடுபடலானான். இவ்வாறு மனிதன் தனது உரிமைகளைப் பெற்றுக்கொண்ட வரலாற்றுச் சந்தர்ப்பங்களுக்குப் பின்வருவனவற்றை உதாரணமாகக் குறிப்பிடலாம்.

- கி.பி. 1215 - பிரித்தானிய மக்னா காட்டா உடன்படிக்கை
- கி.பி. 1689 - பிரித்தானிய மனித உரிமைகள் பற்றிய பிரகடனம்
- கி.பி. 1776 - அமெரிக்காவின் சுதந்திர பிரகடனம்
- கி.பி. 1789 - மனிதன் மற்றும் பிரசைகளின் உரிமை தொடர்பான பிரான்சியப் பிரகடனம்
- கி.பி. 1917 - ரஷ்யப் புரட்சி

மனிதன் சுதந்திரமாகவும் நிம்மதியாகவும் வாழ்வதற்கு விரும்புகின்றமையே மனித உரிமைகளைப் பெற்றுக் கொள்வதற்கான முயற்சிகளுக்குக் காரணமாக அமைகிறது. உரிமையுடன் தொடர்புடைய செயற்பாடுகள் இரண்டு வகைப்படுகின்றன. அவை,



1914 - 1919 ஆம் ஆண்டு முதலாம் உலகப் போர் முடிவடைந்து இரு தசாப்தங்களின் பின்னர் இரண்டாம் உலகப் போர் ஆரம்பமானது. இரண்டாம் உலகப் போர் 1939 - 1945 வரை இடம் பெற்றது. இப்போர்கள் மிகவும் மோசமான விளைவுகளை மனித சமூகத்தில் ஏற்படுத்தி இருந்தன.

இரண்டாம் உலகப் போரில் இலட்சக்கணக்கான மக்கள் உயிரிழந்தனர்; இன்றும் கூட சிலர் ஊனமுற்ற நிலையில் வாழ்கின்றனர்; பெண்கள் மற்றும் மில்லியன் கணக்கான சிறுவர்கள் அநாதைகளானார்கள்; எம்மால் மதிப்பிட முடியாதளவிலான பொதுச் சொத்துகள் மற்றும் தனியார் உடைமைகள் சேதத்திற்குள்ளாயின.

இவ்விரு போர்களும் மனிதர்களின் உரிமைகள் பறிக்கப்பட்டமைக்கான சந்தர்ப் பங்களாக அமைகின்றன. எனவே உலக சமாதானத்தைக் கட்டியெழுப்பவும் இனங் களிடையே ஒற்றுமையை வளர்க்கவும் மனித உரிமைகளைப் பாதுகாக்கவும் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன; உலகத் தலைவர்களின் விருப்பமாகவும் இது காணப்பட்டது. இதற்காக 1945 ஆம் ஆண்டு ஐக்கிய நாடுகள் சபை தாபிக்கப்பட்டது.

மனித உரிமைகளை மேலும் பலப்படுத்தவும் பாதுகாக்கவும் 1948 டிசம்பர் 10 ஆம் திகதி ஐக்கிய நாடுகள் சபையின் அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் பொதுச் சபையால் மனித உரிமைகள் பிரகடனம் உறுதிப்படுத்தப்பட்டு வெளியிடப்பட்டது. இது மனித உரிமைகளைப் பாதுகாப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட மிக முக்கியமான ஒரு முயற்சியாகும்.

**வாசகம் - 1**

மனிதனாகப் பிறக்கும் அனைவருமே சுதந்திரத்துடனும் சம உரிமைகளுடனும் மேன்மையுடனுமே பிறக்கின்றனர். இவர்கள் இயல்பாகவே நம்பிக்கையுடனும் மனச்சாட்சிக்குக் கட்டுப்பட்டவர்களாகவும் ஒருவருக்கொருவர் சகோதரத்துவ உணர்வுடனும் செயற்பட வேண்டியவர்களாகவுமுள்ளனர்.

அனைவருக்கும் உரிமைகள் கிடைக்கும் என்றும், அவ்வுரிமைகளைப் பயன்படுத்தும் போது ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டிய பொறுப்புகள், மற்றும் கடமைகள் என்ன என்பதையும் இப்பிரகடனம் பொதுவாகக் குறிப்பிடுகின்றது.

உரிமைகள் அனைவருக்கும் சமமாகக் கிடைக்கப்பெறுகின்றன என்பதை ஏற்றுக் கொண்டு அது தொடர்பாக அவதானத்துடனும் பொறுப்புடனும் செயற்படுதல் நம் அனைவரினதும் கடமையும் பொறுப்புமாகும். உரிமைகளை அனுபவித்த வண்ணம் பொறுப்புகளை நிறைவேற்றுவது எமது கடமையாகும். இது சமூக அபிவிருத்திக்கு நேரடியாகப் பங்களிப்புச் செய்வதுடன் ஒரு சனநாயக மக்கள் சமூகத்தின் நலனைப் பேணவும் வழிவகுக்கும். இதன் காரணமாக உரிமைகள் மற்றும் கடமைகள் தொடர்பாக

நன்கறிந்து தனிப்பட்ட ரீதியிலும் சமூக வாழ்விலும் அவற்றைச் செயற்படுத்துவது அத்தியாவசியமாகும்.

மனித உரிமைகள் தொடர்பான சர்வதேசப் பிரகடனத்தைப் பிரதானமாக பாடசாலை மற்றும் ஏனைய கல்வி நிறுவனங்களில் காட்சிப்படுத்த வேண்டுமென ஐக்கிய நாடுகள் சபையானது பொதுச் சபை அங்கத்தவர்களைக் கேட்டுக்கொண்டுள்ளது.

பாடசாலை மாணவர்களாகிய நீங்கள் மனித உரிமைகள் தொடர்பாக அறிந்து வைத்திருப்பதன் அவசியத்தை மேற்குறிப்பிட்ட கூற்றின் மூலம் விளங்கிக் கொண்டிருப்பீர்கள். இவ்வுரிமைகள் தொடர்பான கடமைகளை மேற்கொள்ளல், சமூகத்திலுள்ள அனைத்து மக்களினதும் உரிமைகளைப் பாதுகாப்பதற்கான அடிப் படையாக அமையும். இது ஒற்றுமையான, அமைதியான சனநாயகச் சமூகம் ஒன்று ஏற்படுவதற்கு வழிவகுக்கும்.

**செயற்பாடு 3 - 1**

- ''மனித உரிமைகளைப் பாடசாலை மாணவர்கள் தெரிந்து கொள்வதன் முக்கியத்துவம்'' என்ற தலைப்பில் பாடசாலைச் சுவர்ப் பத்திரிகைக்கு ஆக்கம் ஒன்றினைத் தயாரிக்குக.
- மனித உரிமைகளை வென்றெடுத்த வரலாற்று நிகழ்வுகளில் சிலவற்றைத் தெரிவு செய்து அந்த நிகழ்வில் வென்றெடுத்த உரிமைகள் தொடர்பான தகவல்களைச் சேகரிக்க.

### உரிமைகளை வகைப்படுத்தல்

உரிமை என்பது மிகவும் விரிவான ஒரு எண்ணக்கருவாகும். உரிமைகளைப் பின் வருமாறு வகைப்படுத்தலாம்.




உரு 3.2

மனிதர்களுக்கு இயல்பாக இருக்க வேண்டிய உரிமைகளுக்கிடையே தேர்ந்தெடுக் கப்பட்ட சில பிரதான உரிமைகளை உலகின் பல நாடுகளும் தமது அரசியல் யாப்பில் உள்வாங்கியுள்ளன. அவற்றையே அடிப்படை உரிமைகள் என்கிறோம்.

ஐக்கிய நாடுகள் சபையினால் வெளியிடப்பட்ட அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனத்தில் (UDHR) குறிப்பிடப்பட்டுள்ள உறுப்புரைகள் ஒரு நாட்டின் யாப்பில் உள்வாங்கப்படும்போது, அவை அந்நாட்டு மக்களுக்கு அடிப்படை உரிமைகளா கின்றன. யாப்பில் உள்வாங்கப்படாத உறுப்புரைகள் அடிப்படை உரிமைகளாக அமையாது. அவ்வகையில், அனைத்து அடிப்படை உரிமைகளும் மனித உரிமைகள் என்றும், அனைத்து மனித உரிமைகளும் அடிப்படை உரிமைகளாக ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது என்றும் உங்களுக்கு விளங்கியிருக்கும். அடிப்படை உரிமைகள் மீறப்படும் போது சட்டத்தின் உதவியைப் பெறுவதற்கு சந்தர்ப்பம் வழங்கப்படும்.

இலங்கையின் நடைமுறை அரசியல் யாப்பின் III ஆம் அத்தியாயத்தில் அடிப்படை உரிமைகள் தொடர்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இவ் அரசியல் யாப்பின் 126 ஆம் சரத்திலே அவ் உரிமைகள் மீறப்படல் தண்டனைக்குரிய குற்றம் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

மனித உரிமைகள் ஒவ்வொரு மனிதனுக்கும் சமமாகக் கிடைப்பதுடன் விசேட குழுக் களுக்கு சிறப்பான முறையில் உரிமைகளை நடைமுறைப்படுத்துவதற்கு ஐக்கிய நாடுகள் சபை முடிவெடுத்துள்ளது. இதற்கு பெண்கள் மற்றும் சிறுவர் உரிமைகள் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

மனித உரிமைகளை அவற்றின் பண்புகளுக்கு ஏற்ப குடியியல் உரிமைகள், அரசியல் உரிமைகள், பொருளாதார உரிமைகள், சமூக-கலாசார உரிமைகள் என வகைப்ப டுத்தலாம்.

### ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் பிரகடனம்
**(Universal Declaration of Human Rights - UDHR)**

ஐக்கிய நாடுகள் சபையினால் 1948 டிசம்பர் 10 ஆம் திகதி மனித உரிமைகள் தொடர்பாக மனித உரிமைகள் பற்றிய சர்வதேசப் பிரகடனம் வெளியிடப்பட்டது. இப்பிரகடனம் 30 உறுப்புரைகளைக் கொண்டுள்ளது. அவை பின்வருமாறு,

- முகப்புரை : இது மனித உரிமைகளின் அவசியத்தை வலியுறுத்துகின்றது
- சரத்து 1 - 2 : மனித உரிமைகளின் இயல்பை வலியுறுத்துகின்றது
- சரத்து 3 - 27 : பல்வேறு உரிமைகளையும் அட்டவணைப்படுத்தியுள்ளது
- சரத்து 27 - 30 : பல்வேறு உரிமைகள் தொடர்பான கடமைகளைக் குறிப்பிடுகின்றது

**மனித உரிமைகள் தொடர்பான சர்வதேசப் பிரகடனத்தில் உள்ளடங்கியுள்ள 30 உறுப்புரைகளும் கீழே எளிமையான வடிவில் தரப்பட்டுள்ளன**

1. மனிதப் பிறவியினர் சகலரும் சுதந்திரமாகவே பிறக்கின்றனர். அவர்கள் மதிப்பிலும் உரிமைகளிலும் சமமானவர்கள். அவர்கள் நியாயத்தையும் மனச் சாட்சியையும் இயற்பண்பாகப் பெற்றவர்கள். அவர்கள் ஒருவருடன் ஒருவர் சகோரத உணர்வுப் பாங்கில் நடந்து கொள்ள வேண்டும்.

2. இனம், நிறம், பால், மொழி, சமயம், தேசிய அல்லது சமூகத் தோற்றம், சொத்துரிமை பிறப்பு அல்லது பிற நிலைகளின் அடிப்படையில் பாகுபடுத்தப்படாமல் சர்வதேச மனித உரிமைகள் பிரகடனத்தில் அறிவிக்கப்பட்டுள்ள அனைத்து உரிமைகளையும் சுதந்திரங்களையும் ஒவ்வொருவரும் பெற உரிமைபெற்றவராகின்றனர்.

3. வாழ்வதற்கும் சுதந்திரத்திற்கும் பாதுகாப்பிற்கும் சகலரும் உரிமை உடையோராவர்.

4. அடிமையாகவோ, அடிமைப்பணிகளிலோ எவரும் வைத்திருக்கப்படமாட்டார் கள். அடிமைத்தனமும் அடிமை வியாபாரமும் அதன் அனைத்து வடிவங்களிலும் தடை செய்யப்பட வேண்டும்.

5. எவரும் சித்திரவதைகளுக்கோ, கொடூரத்திற்கோ, மனிதாபிமானமற்ற தண்டனை களுக்கோ உட்படுத்தப்படலாகாது.

6. ஒவ்வொருவரும் சட்டத்தின் முன்பாக ஒரு தனிநபர் என்னும் முறையில் அனைத்து இடங்களிலும் அங்கீகரிக்கப்படும் உரிமை பெற்றவராகின்றனர்.

7. சட்டத்தின் முன் அனைவரும் சமமானவர்களாகவும், பாரபட்சம் எதுவுமின்றி சட்டத்தின் சமனான பாதுகாப்பிற்கு உரித்துடையவர்கள் ஆவர்.

8. அடிப்படை உரிமைகள் மீறப்படும் போது தகுதியான தேசிய நியாய சபைகளிடம் சரியான பரிகாரம்பெற ஒவ்வொருவரும் தகுதிபெற்றவராகின்றனர்.

9. பலவந்தமாக கைதுசெய்தல், தடுத்துவைத்தல் அல்லது நாடுகடத்தல் போன்ற வற்றிற்கு ஒருவரும் ஆளாகக் கூடாது.

10. ஒவ்வொருவரும் தன்மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகளுக்கு எதிராக முழுவதும் சமத்துவமான நியாயமான விசாரணைக்கு சுதந்திரமான பாகுபாடற்ற நியாய சபையினால் தனது உரிமைகளையும் கடமைகளையும் தீர்மானிக்கும் நோக்குடன் தகுதி பெற்றவராகின்றனர்.

11. (i) குற்றவாளியென உறுதியாகும் வரை சுற்றவாளியாகக் கருதப்படல்.

(ii) குற்றம் இழைக்கப்பட்ட காலப்பகுதியில் வழங்கப்படும் பொது விதிகளுக்கு மாறாக அதிக தண்டனைகள் வழங்காதிருத்தல்.

12. தனிப்பட்ட இரகசியங்களைப் பேணுவதற்கான உரிமை. அவரது மரியாதையையும், தன்மதிப்பையும் பாதித்தலாகாது.

13. (i) தமது நாட்டில் சுதந்திரமாகப் பயணம் செய்யவும் விரும்பிய இடத்தில் வாழ்க்கை நடாத்தவும் ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

(ii) நாட்டை விட்டு வெளியேறவும், மீண்டும் நாட்டுக்கு வந்தடைவதற்குமான உரிமை ஒவ்வொருவருக்கும் உண்டு.

14. (i) உயிர் பாதுகாப்பிற்காக வெளிநாடுகளில் தஞ்சம் கோரவும் தஞ்சம் புகவும் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு.

(ii) அரசியல் அல்லாத குற்றங்களால் நியாயமாகத் தொடரப்பட்ட குற்ற வழக்குகளின்போதோ அல்லது ஐக்கியநாடுகளின் கொள்கைகளுக்கு எதிராகச் செயற்பட்டிருந்தாலோ இந்த உரிமைகளைக் கொண்டு உதவிதேட முடியாது.

15. (i) ஒவ்வொருவருக்கும் ஒரு தேசிய இனத்தவராக இருப்பதற்கான உரிமையுண்டு.

(ii) எவரையும் மனம்போன போக்கில் அவரின் இனத்துவம் பறிக்கப்படவோ இனத்துவத்தை மாற்றிக்கொள்ளும் உரிமையை மறுப்பதோ கூடாது.

16. குடும்ப வாழ்க்கை நடாத்தவும், அக்குடும்பமானது, சமூகத்தினதும், அரசினதும் பாதுகாப்பைப் பெறுவதற்குமான உரிமை.

17. (i) சொத்து சார்பான உரிமை.

(ii) எவருடைய சொத்தையும் பலவந்தமாக உரித்தாக்க முடியாத தன்மை.

18. சுதந்திரமான சிந்தனைக்கும், மனச்சாட்சிக்கும், சமய சுதந்திரத்தைப் பின்பற்றவும் உரிமையுண்டு.

19. கருத்து வெளியிடுவதற்கும் தகவல் வழங்குவதற்கும் தகவல்கள் பெறுவதற்குமான உரிமையுண்டு.

20. அமைதியாக ஒன்று கூடுவதற்கான உரிமை, சங்கங்கள், கழகங்கள் நிறுவுவதற்கும் அதில் இணைவதற்குமான உரிமையுண்டு.

21. நேரடியாகவும், சுதந்திரமாகவும் தேர்ந்தெடுத்த மக்கள் பிரதிநிதிகள் ஊடாகப் பங்குபற்றுவதற்கும் அரச பணியில் சமமாக சேருவதற்கும் உரிமை உண்டு.

22. ஒரு சமூக உறுப்பினர் என்ற வகையில் ஒவ்வொருவரும் சமூகப் பாதுகாப்பிற்கான உரிமையுள்ளவர்களாகின்றனர்.

23. தொழில் புரிவதற்கும், நியாயமான ஊதியம் பெறுவதற்கும் மற்றும் தொழிற் சங்கங்களில் சேருவதற்குமான உரிமையுண்டு.

24. ஒவ்வொருவருக்கும் ஓய்வுக்கும் இளைப்பாறுவதற்கும் உரிமையுண்டு.

25. ஒவ்வொருவரும் தனதும் தனது குடும்பத்தாரதும் ஆரோக்கிய நல்வாழ்விற்குத் தேவையான தரமான வாழ்வு வாழும் உரிமையுண்டு. உணவு, உடை, வீடு மற்றும் சுகாதார சேவைகளின் பாதுகாப்பு பெறுவதற்கும் சமூக சேவைகள் மூலமான பாதுகாப்புப் பெறுவதற்குமான உரிமையுண்டு.

26. கல்வியைப் பெற்றுக்கொள்வதற்கான உரிமை ஒவ்வொருவருக்கும் உண்டு. குறைந்தது ஆரம்பக்கல்வியாவது இலவசமாகவும், கட்டாயமாகவும் வழங்கப்படல் வேண்டும்.

27. ஒவ்வொருவருக்கும் அவரவர் சமுதாயப் பண்பாட்டு வாழ்வில் சுதந்திரமாகப் பங்கேற்கும் உரிமையுண்டு. கலைகளை அனுபவிக்கவும் அறிவியல் முன்னேற்றத்தில் பங்கெடுக்கவும் அவற்றின் பயன்களை அனுபவிக்கவும் உரிமையுண்டு.

28. ஒவ்வொருவருக்கும் அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனத்தில் விபரிக்கப்பட்டுள்ள உரிமைகளையும் சுதந்திரத்தையும் முழுமையாக அனுப விக்கத் தேவையான சமூக மற்றும் சர்வதேச முறைமைக்கான உரிமைகளுக்கு உரித்துண்டு.

29. (i) எல்லா நபர்களாலும் நிறைவேற்றப்பட வேண்டிய சமூகக் கடமைகள் பல உள்ளன.

    (ii) தனிநபர் ஒருவரது உரிமைகள் மற்றும் சுதந்திரம் அனுமதிக்கப்படுகையில் அதன் எல்லையாக அமைவது அடுத்தவரின் உரிமைகளும் சுதந்திரமாகும்.

30. இந்தப் பிரகடனத்தில் உள்ளடக்கப்பட்டுள்ள உரிமைகள் அல்லது தனித்துவம் அழிந்து போகக் கூடிய விதத்தில் செயற்படுவதற்கு யாருக்கும் எந்த உரிமையும் அளிக்கப்படவில்லை.

மனித உரிமைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்,

- குடியியல் மற்றும் அரசியல் உரிமைகள்
- பொருளாதார, சமூக, கலாசார உரிமைகள்




3.3 மனித உரிமைகள்

**மனித உரிமைகள்**

| குடியியல், அரசியல் உரிமைகள் | பொருளாதார, சமூக, கலாசார உரிமைகள் |
| --- | --- |
| • உயிர்வாழவும் சுதந்திரமாகச் சிந்திக்கவும் தனிப்பட்ட பாதுகாப்பிற்குமான உரிமை.<br>• சட்டத்தின் முன் ஒரு அளாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்ற உரிமை<br>• சட்டத்தின் முன் ஒரு ஆளாக சமமானவர்கள் எனும் உரிமை<br>• நியாயமான வழக்கு விசாரணைக்கான உரிமை | • கல்வியைப் பெற்றுக் கொள்வதற்கான உரிமை.<br>• தொழில் செய்வதற்கான உரிமை. வேலைக்கேற்ற ஊதியம் பெறுவதற்கான உரிமை.<br>• விடுமுறை மற்றும் ஓய்வு பெறுவதற்கான உரிமை<br>• உணவு, உடை, உறையுள் மற்றும் சுகாதாரம் பெற்றுக்கொள்வதற்கான உரிமை |

- சித்திரவதைக்கோ அல்லது கொடூர மானதும், இழிவானதுமான நடத்து கைக்கோ உட்படாதிருப்பதற்கான உரிமை.
- போக்குவரத்துச் செய்வதற்கான உரிமை.
- வெளிநாடொன்றில் புகலிடம் பெறுவதற்கான உரிமை
- சிந்தனை செய்யவும், மனச் சாட்சிப்படி நடப்பதற்கும் விரும்பிய சமயத்தைப் பின்பற் றுவதற்குமான உரிமை
- சுதந்திரமாகக் கருத்துகளை வெளி யிடுவதற்கான உரிமை
- நேரடியாகவோ, தெரிவு செய்யப் பட்ட பிரதிநிதிகள் மூலமோ தமது நாட்டு அரசியலில் பங்குபற்று வதற்கான உரிமை
- கலாசார, விஞ்ஞான, கலை சம்பந் தமான அம்சங்களில் ஈடுபடுவதற் கான உரிமை
- சமூகப் பாதுகாப்பிற்கான உரிமை
- தனிப்பட்ட சொத்துகளை வைத்தி ருப்பதற்கான உரிமை
- போதியளவு வாழ்க்கைத் தரத்தை அனுபவிப்பதற்கான உரிமை.

ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் தொடர்பான பிரகடனத்தின் பின்னர் அதிலடங்கும் காரணிகளைச் சட்ட பூர்வமாக்குவதற்கும் அது தொடர்பான அங்கத்துவ நாடுகளின் கவனத்தை ஈர்ப்பதற்கும் இன்னும் இரு உடன்படிக்கைகள் 1966 ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டன. அவையாவன,

- பொருளாதார, சமூக, கலாசார, உரிமைகள் பற்றிய சர்வதேச உடன்பாடு (ICESCR - 1966).
- குடியியல், அரசியல் உரிமைகள் பற்றிய சர்வதேச உடன்பாடு (ICCPR - 1966).

குடியியல் மற்றும் அரசியல் உரிமைகள் தொடர்பான சர்வதேச பிரகடனத்துடன் தொடர்பான விருப்பத்திற்குரிய உடன்பாடொன்றும் கைச்சாத்திடப்பட்டுள்ளது. அது தொடர்பான விபரம் பின்வருமாறு,

## குடியியல்  மற்றும் அரசியல் உரிமைகள் மீதான சர்வதேச உடன்பாடு

International Convention on Civil and Political Rights - (ICCPR)

மனித உரிமைகள் தொடர்பான சர்வதேசப் பிரகடனத்தில் உள்ளடக்கப்பட்டுள்ள குடியியல் மற்றும் அரசியல் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக வேறு ஒரு சர்வதேச உடன்படிக்கை 1966 இல் மேற்கொள்ளப்பட்டது. இவ் உடன்படிக்கையில் கைச்சாத் திட்ட நாடுகள் அதன் பின் தங்களது நாட்டில் அதனை உறுதிப்படுத்த வேண்டும். இவ் உடன்படிக்கையில் உள்ளடக்கப்பட்ட உரிமைகள் சில கீழே தரப்பட்டுள்ளன.

- வாழ்வதற்கான உரிமை
- சட்டப்படியின்றி கைது செய்வதிலிருந்து பாதுகாத்துக் கொள்வதற்கான உரிமை
- சட்டத்தின் முன் ஒரு ஆளாக ஏற்றுக்கொள்வதற்கான உரிமை
- எதிர்காலத்தைப் பாதிக்கும் வகையில் வழங்கப்பட்டிருக்கும் தண்டனைகளில் இருந்து மீள்வதற்கான உரிமை
- அடிமைத் தன்மையிலிருந்து விடுபட்டிருப்பதற்கான உரிமை
- தனிப்பட்ட ரீதியிலான சுதந்திரம் மற்றும் பாதுகாப்பிற்கான உரிமை
- நீதியான வழக்கு விசாரணைகளுக்கான உரிமை
- சமய வழிபாட்டிற்கான உரிமை
- அமைதியான முறையில் ஒன்று கூடுவதற்கான உரிமை
- தேர்தலின் போது வாக்களிப்பதற்கான உரிமை
- பிரதிநிதியாக தேர்தலில் போட்டியிடுவதற்கான உரிமை
- கொடூரமாகவும், மனிதத் தன்மையற்ற வகையிலும் அவமானப்படுத்தும் வகையிலும் நடாத்தப்படுவதிலிருந்தும் சித்திரவதைகளிலிருந்தும் விடுபட்டிருப்பதற்கான உரிமை

குடியியல் மற்றும் அரசியல் உரிமைகள் தொடர்பாக சர்வதேச ஒப்பந்தத்தின் மூலம் அந்த உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்கான முதலாவது உடன்படிக்கையாக 1966 இல் இடம்பெற்ற இவ் உடன்படிக்கையைக் குறிப்பிட முடியும்.

மரண தண்டனையைத் தடை செய்யும் நோக்காக கொண்டு குடியியல் மற்றும் அரசியல் உரிமை தொடர்பான இரண்டாவது சர்வதேச உடன்பாடு 1989 இல் மேற்கொள்ளப் பட்டது. அவ்வாறு மேற்கொள்ளப்பட்ட இரண்டு உடன்படிக்கைகள் தொடர்பான தக வல்களை அறிந்து கொள்வோம்.

### குடியியல் மற்றும் அரசியல் உரிமைகள் மீதான சர்வதேச ஒப்பந்தத்துடன் இணைந்த முதலாவது விருப்பிலான பின்னேடு (First Optional Protocol to the ICCPR)

இந்த விருப்பத்திற்குரிய ஒப்பந்தம் 14 உறுப்புரைகளைக் கொண்டது. இதன் மூலம் ஏதேனுமொரு மனித உரிமை மீறப்பட்டால் அதற்கான நியாயம் அந்த நாட்டில் வழங்கப்படலாம். அந்தத் தீர்ப்பின் மீது குறிப்பிட்ட நபர் திருப்தியடையாவிட்டால் அவருக்கு இந்தப் பிரகடனத்தின் பிரகாரம் அமைக்கப்பட்டுள்ள மனித உரிமைக் குழுவுக்கு மேன்முறையீடு செய்யலாம். அதற்காக அந்த நாடு இந்த விருப்பத்துக்குரிய உடன்படிக்கையை ஏற்று கையொப்பமிட்டிருத்தல் வேண்டும்.

இலங்கை இவ் ஒப்பந்தத்தை ஏற்று கையொப்பமிட்டுள்ளது. எனவே மனித உரிமை மீறப்படும் போது ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் பேரவைக்கு முறைப்பாடு செய்யலாம்.

### மரண தண்டனையை நீக்கும் நோக்கோடு உருவாக்கப்பட்ட குடியியல், அரசியல் உரிமைகள் பற்றிய சர்வதேசப் பிரகடனம் இரண்டாவது விருப்பிலான பின்னேடு (Second Optional Protocol to the ICCPR)

இது 1989 டிசம்பர் 15 ம் திகதி ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச் சபையால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் பிரகடனத்தின் 3 ஆவது வாசகம் குடியியல், அரசியல் உரிமைகள் தொடர்பான சர்வதேச உடன்பாட்டின் 6 ஆவது வாசகம் என்பவற்றிற்கு மேலதிகமாக இது முன்வைக்கப்பட்டுள்ளது. இவ்வுடன்படிக்கை 11 வாசகங்களைக் கொண்டது. விருப்பத்திற்குரிய இவ்வுடன் படிக்கையில் கையொப்பமிட்டுள்ள அங்கத்துவ நாடுகள் எந்தவொரு குற்றத் திற்காகவும் குற்றவாளியாக்கப்பட்ட நபர் ஒருவருக்கு மரண தண்டனையை வழங்க முடியாது. அதற்கு மாறாக மாற்றுத் தண்டனைகளை வழங்க முடியும். இதுவரை இவ்வுடன்படிக்கையில் இலங்கை கையொப்பமிடவில்லை.

### பொருளாதார, சமூக, கலாசார உரிமைகள் தொடர்பான சர்வதேச உடன்படிக்கை

**International Conventiin on Economic, Social and Cultural Rights - (ICESCR)**

ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் பிரகடனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள உரிமைகளை வெவ்வேறு உடன்படிக்கைகளாகச் செயற்படுத்துவதை நோக்காக கொண்டு இவ்வுடன்படிக்கை கைச்சாத்திடப்பட்டுள்ளது.

கல்வியைப் பெறுவதற்கான உரிமை, சுகாதாரமான வாழ்க்கை நடாத்துவதற்கான உரிமை, சுதந்திரமாகத் தொழில் ஒன்றைத் தெரிவு செய்யும் உரிமை, நியாயமான சம்பளம் பெறும் உரிமை, தொழிற் சங்கங்களை ஆரம்பிப்பதற்கும் அவற்றில் இணை வதற்குமான உரிமை, சமூகப் பாதுகாப்பைப் பெற்றுக் கொள்ளும் உரிமை, சிறந்த

வாழ்க்கை தரத்தைப் பெற்றுக் கொள்ளும் உரிமை, தனது கலாசாரப் பெறுமதிக்கேற்ப வாழும் உரிமை என்பன இவ்வுடன்படிக்கையின் கீழ் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள உரிமைகளுள் சிலவாகும்.

இவ்வுடன்படிக்கையில் அங்கத்துவ நாடுகள் கையொப்பமிட்டு ஏற்றுக் கொண்டதன் பின்னர் குறிப்பிட்ட பொருளாதார, சமூக, சலாசார உரிமைகளைத் தமது நாட்டினுள் உறுதிப்படுத்துவதற்குக் கடமைப்பட்டுள்ளன.

**பொருளாதார, சமூக, கலாசார உரிமைகள் தொடர்பான உடன்படிக்கையில் ஏற்படுத்தப்பட்ட விருப்பத்திற்குரிய உடன்பாடு - 2008 (Optional Protocol to the ICESCR)**

பொருளாதார, சமூக, கலாசார உரிமைகள் தொடர்பான சர்வதேச உடன்படிக்கை உள்ளடக்கிய உரிமைகளை மேலும் உறுதிப்படுத்துவதற்காக அது தொடர்பான விருப்பத்திற்குரிய உடன்பாடு 2008 ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது.

### சர்வதேச மனித உரிமைகள் சட்டம் (International Bill of Rights)

மனித உரிமைகளைப் பாதுகாத்தல், தெளிவுபடுத்தல், உறுதிப்படுத்தல் ஆகியவற்றின் பொருட்டு ஐக்கிய நாடுகள் சபை பிரதான 6 சட்டங்களை ஏற்படுத்தியுள்ளது. இவை சர்வதேச மனித உரிமைகள் சட்டம் எனும் பெயரில் அழைக்கப்படுகின்றன. அவை கீழே தரப்பட்டுள்ளன.

- ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் பற்றிய சர்வதேசப் பிரகடனம் (1948)
- பொருளாதார சமூக மற்றும் கலாசார உரிமைகள் பற்றிய சர்வதேச உடன்படிக்கை (1966)
- குடியியல், அரசியல் உரிமைகள் பற்றிய சர்வதேச உடன்படிக்கை (1966)
- குடியியல், அரசியல் பற்றிய விருப்பத்திற்குரிய சர்வதேச உடன்படிக்கை (1966)
- சமூக, அரசியல் உரிமைகள் தொடர்பான சர்வதேச உடன்படிக்கையுடன் தொடர்புடைய விருப்பத்திற்குரிய உடன்படிக்கை (1989)
- பொருளாதார, சமூக, கலாசார உரிமைகள் தொடர்பான உடன்படிக்கையில் காணப்படும் விருப்பத்திற்குரிய உடன்படிக்கை (2008)

**செயற்பாடு 3 - 2**



- *ஒவ்வொரு வருடமும் டிசம்பர் மாதம் 10 ஆம் திகதியில் மனித உரிமைகள் தினம் கொண்டாடப்படும். அதன் பொருட்டு ''சர்வதேச மனித உரிமைகள் சட்டம்'' எனும் தலைப்பில் காலைக் கூட்டத்தில் முன்வைப்பதற்குப் பொருத்தமான பேச்சொன்றைத் தயாரிக்குக.*

மேலே கலந்துரையாடப்பட்ட உரிமைகள் ஒவ்வொரு நபரும் தனித்தனியாக அனுபவிப்பதை உறுதிப்படுத்த வேண்டி இருப்பதுடன் சில தனிநபர் குழுக்கள் உரிமைகளை அனுபவிப்பதை உறுதி செய்யப்பட வேண்டி இருப்பதும் மிக முக்கியமானது என நிகழ்காலத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இதற்கமைய சமூகத்தினுள் பல்வேறு அச்சுறுத்தல்களுக்கு உட்படக்கூடிய தனி நபர் குழுக்கள் மீது விசேட கவனம் செலுத்தப்பட்டு அவர்களது உரிமைள் பாதுகாக்கப்படுவதை உறுதிப்படுத்துவதற்காகப் பல்வேறு மனித உரிமைகள் தொடர்பான விதப்புரைகள் காலத்திற்கேற்றவாறு சர்வதேச மட்டத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ளன.

## பெண்கள் உரிமைகள்

சமூகமொன்றின் மிகச் சிறிய அடிப்படை அலகு குடும்பமாகும். ஒரு குடும்ப அலகில் தாய் விலைமதிக்க முடியாத சேவையை ஆற்றுகின்றாள். பிள்ளைகளைப் பெற்றெடுத்தல், அவர்களைப் பராமரித்து வளர்த்தல், அவர்களைப் பாதுகாத்தல், உணவுகளையும் ஊட்டங்களையும் வழங்குதல், கல்வியைப் பெற்றுக் கொடுத்தல் போன்றவற்றினூடாக குடும்பத்தின் நலனுக்காகவும் சமூகத்தின் நன்மைக்காகவும் அவள் மிகப் பெரிய சேவையாற்றுகின்றாள்.

ஒரு பெண் மூலம் அவளது குடும்பத்திற்கு ஆற்றப்படும் செயற்பாடுகள் மட்டு மல்லாமல், தேசிய பொருளாதாரத்திற்கும் பெண்களால் வழங்கப்படும் பங்களிப்பு பெறுமதி மிக்கதாகும். சமூகத்தின் பல்வேறு பொறுப்புகளை ஏற்று ஒரு சிறந்த தேசிய பங்களிப்பு அவளால் ஆற்றப்படுகின்றது.

பண்டைய காலத்தில் கீழைத்தேய நாடுகளில் பெண்களுக்கு விசேட முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வந்துள்ளது. கி. பி 6 ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் வாழ்ந்த லிச்சவி அரச குடும்பத்தினால் பின்பற்றப்பட்ட பெண்கள் சம்பந்தமான இரண்டு கொள்கை கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. இவை ஏழு விதமான அழியாச் செல்வங்களில் இரண்டாகும். ஆதிகாலம் தொட்டு பெண்களுக்கு மதிப்பளிக்கப்பட்டமை இதிலிருந்து புலனாகிறது. அக் கொள்கைகள் பின்வருமாறு,

- திருமணமாகாத இளம் பெண்களைப் பாதுகாத்தல்
- திருமணமான பெண்களைப் பாதுகாத்தல்

இவ்வாறு பண்டைய காலந் தொட்டு பெண்களுக்கு முக்கிய இடம் வழங்கப்பட்டதன் காரணம், பெண் என்பவள் சமூகத்தில் உயர்வானதும் தூய்மை மிக்கதுமான பதவிக்கு உரித்துடையவள் என்பதனாலாகும்.




உரு 3.4 பெண்களால் ஆற்றப்படும் சமூகப் பங்களிப்புகள்

நடைமுறையில் சமூகத்தில் காணப்படும் உரிமைகளை அனுபவிப்பதில் பெண்கள் பல்வேறு சவால்களைச் சந்திக்கின்றனர். கொடுமைகளுக்கு ஆளாதல், பல்வேறு துஷ்பிரயோகங்களுக்கு உட்படுத்தப்படல், முறைகேடாக நடாத்தப்படல் போன்றன இத்தகைய சவால்களுக்கான சில எடுத்துக்காட்டுகளாகும்.

ஐக்கிய நாடுகளின் மனித உரிமை தொடர்பான சர்வதேச பிரகடனத்தில் பெண்கள் என்பவர்கள் சமூகத்தில் விசேட கவனம் செலுத்தப்பட வேண்டிய ஒரு குழாத்தினர் என எண்ணப்பட்டு பெண்களுக்கெதிரான பாரபட்சங்களை ஒழிப்பதற்கான ஒரு சர்வதேச உடன்படிக்கை ஏற்படுத்தப்பட்டது (CEDAW).

**பெண்களுக்கு எதிரான பாரபட்சங்களை ஒழிப்பதற்கான சர்வதேச உடன்படிக்கை (Convention on the Elimination of All Forms of Discrimination Against Women - CEDAW)**

பெண்களுக்கெதிரான பாரபட்சங்களை சமூகத்தினுள்ளே ஒழிப்பது இவ்வுடன் படிக்கையின் அடிப்படை நோக்கமாகும். ஐக்கிய நாடுகள் சபையின் மூலம் 1979 டிசம்பர் 18 ஆம் திகதி இவ்வுடன்படிக்கை கைசாத்திடப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டது. இவ் உடன்படிக்கைக்கேற்ப பெண்களுக்கு பின்வரும் உரிமைகள் உரித்தாகின்றன.

பங்கேற்கின்ற அரசுகள் அனைத்துத் துறைகளிலும் விசேடமாக அரசியல், சமூக, பொருளாதார, கலாசாரத் துறைகளில் ஆண்களுக்கு சமமான முறையில் அவற்றின் உரிமைகள் மற்றும் அடிப்படைச் சுதந்திரத்தை அனுபவித்தல் மற்றும் அவற்றைப் பின்னற்றல் போன்றவற்றை உறுதி செய்வதற்காகப் பெண்களது முழுமையான முன்னேற்றம் மற்றும் வளர்ச்சி என்பவற்றை உறுதிப்படுத் துவதற்குத் தேவையான சட்ட உருவாக்கம் உட்பட அனைத்து வழிமுறைகளும் மேற்கொள்ளப்படும்.

இவ்வுடன்படிக்கையின் அடிப்படையில் பெண்களுக்குரித்தான உரிமைகள் சில பட்டியல் படுத்தப்பட்டுள்ளன.

**பெண்களின் குடியியல் மற்றும் அரசியல் உரிமை**

- குடும்ப அலகினுள்ளே பெண்களின் உரிமை
- கல்வியும், பயிற்சியும் பெறுவதற்கான உரிமை
- பொருளாதாரத்திற்கும் அதன் பிரதி பலன்களைப் பெறுவதற்குமான உரிமை
- சுகாதாரப் பாதுகாப்பிற்கும் போஷாக்கிற்குமான உரிமை
- சமூக முரண்பாடுகளிலிருந்து பாதுகாப்பு பெறுவதற்கான உரிமை.

இந்த உரிமைகள் பெண்களுக்கு எதிரான பாரபட்சங்களை ஒழிப்பதுடன் ஆண்களை விடவும் பெண்கள் உரிமையில் குறைந்தவர்கள் இல்லை என்பதனையும் வலியுறுத்து வதைக் காணலாம்.

**உறுப்புரை -10**

அரசினால் வழங்கப்படும் கல்வி முறையினை ஆண்களுடன் சம உரிமையுடன் பெண்களும் பெறுவதுடன் பாரபட்சங்களை வெளிப்படுத்தும் சகல வழிகளையும் இல்லாதொழித்தல்.

**உறுப்புரை -15**

அரசினால் நடைமுறைப்படுத்தப்படும் நீதியின் முன் ஆண் பெண் சமத்துவ நிலையினை ஏற்படுத்தல்.

இலங்கை 1981 இல் இவ்வுடன்படிக்கையில் கைச்சாத்திட்டு ஏற்றுக்கொண்டது. இவ்வுடன்படிக்கையின் படி மேற்கொள்ளப்பட்ட செயற்பாடுகளாவன,

- சர்வதேச உடன்படிக்கைகளுக்கேற்ப 1993 ஆம் ஆண்டு இலங்கையில் பெண்கள் பிரகடனம் வெளியிடப்பட்டமை.
- பெண்களுக்கென தனியாக மகளிர் விவகார அமைச்சு ஒன்றை ஏற்படுத்தியமை.

- பெண்களுக்கு எதிராக ஏற்படும் வேறுபாடுகள் தொடர்பாக விசாரசணை செய்ய தேசிய மாதர் குழு அமைக்கப்பட்டமை.
- பெண்களுக்கு எதிராக மேற்கொள்ளப்படும் குற்றங்களைப் புதிதாக வரைவிலக்க ணப்படுத்தியமை.
- பெண்களுக்கு எதிராக அவர்களது வதிவிடங்களில் ஏற்படும் கொடுமைகள் தொடர்பாக வீட்டுத் துன்புறுத்தல் பற்றிய சட்டத்தை அமுல்படுத்தியமை.
- அனைத்துப் பொலிஸ் நிலையங்களிலும் சிறுவர், பெண்களுக்குரிய முறைப் பாடுகளை விசாரணை செய்வதற்காக சிறுவர், பெண்கள் அலகொன்றை ஏற்படுத்தியமை (CEDAW).

*1999 ஆம் ஆண்டு ஒக்டோபர் 6 ஆம் திகதி சிடோவ் தொடர்பான விருப்பத்திற்குரிய உடன்படிக்கை ஐக்கிய நாடுகள் சபையினால் கைச்சாத்திடப்பட்டது.*

**செயற்பாடு 3 - 3**

- தாய், பெண் அபிமானம் தொடர்பான கவிதை அல்லது பாடல்களை சேகரியுங்கள்.
- பெண்களின் உரிமைகளை முன்னேற்றுதல் தொடர்பாக சமூகம் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புகள் எனும் தலைப்பில் கட்டுரை வரைக.

## சிறுவர் உரிமைகள்

பெற்றோரது மிகவும் விருப்பத்திற்குரிய செல்வமாகப் பிள்ளைகள் உள்ளனர். மனித சமூகத்தில் குழந்தைகள் செல்வங்களாகக் கருதப்படுகின்றனர். அதற்குக் காரணம் பிள்ளைகளின் வாழ்க்கை முறையாகும். அதனால் பிள்ளைகளை மிகவும் கவனமாக அணுக வேண்டியது மிகவும் முக்கியமாகும்.

சிறுவர்களுக்கு அவர்களது பிள்ளைப் பருவத்தில் கிடைக்கவேண்டிய உரிமைகளை அனுபவிப்பதற்கான சந்தர்ப்பம் கிடைக்காதபோது அவர்களது பூரண வளர்ச்சியில் தடையேற்படுகின்றது. இந்நிலைமை எதிர்காலத்தில் அவர்கள் நற்பிரசைகளாக சமூகத் தினுள் பிரவேசிப்பதற்குத் தடையாக அமைகின்றது.

சிறுவர்களை வேலைக்கு அமர்த்துதல், அவர்களைப் பல்வேறு துஷ்பிரயோகங்களுக்கு உட்படுத்துதல், சிறுவர்களைப் போராளிகளாகப் பயன்படுத்தல், பாடசாலைக் கல்வியை மறுத்தல், பல்வேறு கொடுமைகளுக்கு உட்படுத்தல் என்பன சிறுவர் உரிமைகள் மீறப்பட்ட சந்தர்ப்பங்களாகும்.

நாட்டிற்குள்ளும், நாடுகளுக்கிடையேயும் இடம்பெறும் யுத்தங்களின்போது, அந்த யுத்தங்களுடன் தொடர்பில்லாத பெரும் எண்ணிக்கையிலான சிறுவர்கள் பல்வேறு

கொடுமைகளுக்கு ஆளாதல், அநாதைகளாதல், மரணித்தல், மந்தபோசணை குறைபாட்டை அடைதல் போன்ற நிலைகளை எதிர்நோக்குகின்றனர். முதலாம், இரண்டாம் உலகப் போர்கள் இவ்வாறான நிலைமைகளுக்கு மிகச் சிறந்த உதாரணங் களாக விளங்குகின்றன.



உரு 3.5 யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட சிறுவர்கள்

இத்தகைய மோசமான நிலைமைகளே சிறுவர்களின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என உலக மக்கள் அவதானம் செலுத்தக் காரணமாக அமைந்தன.

சிறுவர் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக ஐக்கிய நாடுகள் சபையினால் சிறுவர் பாதுகாப்பு, மேம்பாடு, அபிவிருத்தி போன்ற விடயங்கள் மீது அதிக கவனம் செலுத்தப்பட்டுள்ளது. 1989 நவம்பர் 20 ஆம் திகதி ஐக்கிய நாடுகள் பொதுச் சபை யினால் இது பிரகடனப்படுத்தப்பட்டது. அங்கத்துவ நாடுகள் ஏற்றுக் கொண்டதன் பின்னர் 1991 தொடக்கம் செயற்படுத்தப்பட்ட இவ்வுடன்பாட்டில் இலங்கையும் கைச்சாத்திட்டது.

சிறுவர் உரிமைகள் தொடர்பான உடன்படிக்கையை ஏற்படுத்தும் பொழுது, ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் தொடர்பான உலகப் பிரகடனம் மற்றும் 1924 ஆம் ஆண்டு சிறுவர் உரிமைகள் தொடர்பான ஜெனீவாப் பிரகடனம் உட்பட பிரதான சர்வதேச ஆவணங்கள் பல கவனத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

**ஐக்கிய நாடுகள் சபையின் சிறுவர் உரிமைகள் பற்றிய சமவாயம்**
**United Nation's Convention on Rights of The Child (CRC)**

சிறுவர் உரிமைகள் பற்றிய சமவாய முகப்புரை மற்றும் உறுப்புரைகள் 54 ஆகும்.

இந்தச் சமவாயம் சிறுவர்களின் பாதுகாப்பு, பங்குபற்றல், அபிவிருத்தி, உயிர் வாழ்தல் (இருத்தல்) போன்றவற்றில் விஷேடமாக அவதானம் செலுத்தியுள்ளது.




உரு 3.6

சிறுவர் உரிமைகள் தொடர்பான உடன்படிக்கையானது சில நியதிகளை அடிப்படை யாகக்கொண்டு தயாரிக்கப்பட்டுள்ளது. இவ் உடன்படிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து உரிமைகளுக்கும் இந்நியதிகள் உரித்துடையதாக இருக்கும். இந்நியதிகள் பின்வரும் அட்டவணையில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.




உரு 3.7

**சிறுவர் உரிமை பற்றிய சமவாயம் Convention on Rights of The Child**

***உறுப்புரை - 1***

18 வயதுக்குக் குறைந்தோர் பிள்ளைகள் அல்லது சிறுவர்கள் ஆவர்.

பாடசாலை மாணவர்கள் சிறுவர்கள் என்ற வகுதியினுள் உள்வாங்கப்படுகின்றனர். இதனால் நீங்களும் உங்களது உரிமைகள் பற்றிச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். அதே போல நீங்கள் உரிமைகளை அனுபவிப்பதோடு அவை தொடர்பான கடமைகளையும் பொறுப்புகளையும் செயற்படுத்த வேண்டியதும் உங்களது கடமையாகும்.

சிறுவர்கள் என்ற வகையில் எந்தவிதமான பாகுபாடுமின்றி இந்த சிறுவர் உரிமை சமவாயத்தைப் பின்பற்றல் வேண்டும் என உறுப்புரை 2 குறிப்பிடுகின்றது. இந்த உறுப்புரையின்படி இன, மத, மொழி, சொத்து, உடற்பலவீனம் போன்ற எவ்வேறுபாடுகளுமின்றி இந்த சமவாயத்தின் உரிமைகள் எல்லாப் பிள்ளைகளுக்கும் உறுதிப்படுத்தப்படல் வேண்டும். இலங்கை போன்ற பல்லின சமூகங்கள் வாழும் ஒரு நாட்டில் உங்கள் அனைவருக்கும் சம உரிமைகளின் அடிப்படையில் இவ்வுரிமைகள் வழங்கப்படுகின்றன. அதேவேளை அனைத்து பிள்ளைகளினதும் இவ்வுரிமைகள் மதிக்கப்பட வேண்டியன. அவற்றை பாதுகாப்பதற்கு உதவுதல் உங்களது கடமையாகும்.

***உறுப்புரை - 3***

பிள்ளைகள் தொடர்பாகச் செயற்படும் போதும் அவர்கள் தொடர்பாக எடுக்கும் தீர்மானங்களின் போதும் பிள்ளைகளுடைய நலன்களைக் கருதி செயற்படல் வேண்டும்.

**உறுப்புரை - 6**

வாழ்வதற்கான உரிமைகள் அனைத்து பிரசைகளுக்கும் உண்டு என்று அரசாங்கம் ஏற்றுக் கொள்வதோடு பிள்ளைகளின் வாழ்வதற்கான உரிமையை மதிப்பது சமூகத்தில் வாழும் அனைவரினதும் கடமையாகும்.

அனைத்துப் பிரசைகளும் அவை தமது தனிப்பட்ட கடமைகளும் பொறுப்புகளும் எனக்கருதிச் செயற்படுவதற்கு முயற்சிக்க வேண்டும். அவ்வாறு செயற்படும்போது சிறுவர் உரிமைகளைப் பாதுகாக்க முடியும்.

**உறுப்புரை - 7**

குழந்தை பிறந்ததும் பதிவு செய்யப்படல் வேண்டும்; தனக்கெனத் தேசியத்தைப் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும். மேலும், பிறப்பிலிருந்து பெயரொன்றை உரித்தாக்கிக் கொள்ளும் உரிமையும், இனம் ஒன்றினை அடையாளப்படுத்திக் கொள்ளும் உரிமையும் அக்குழந்தைக்கு உண்டு.

**உறுப்புரை - 35**

பிள்ளைகளை விற்பனை செய்தல் அல்லது கடத்திச் செல்லுதல் ஆகியவற்றிலிருந்து பாதுகாப்பதற்கான சகல நடவடிக்கைகளையும் அரசாங்கம் மேற்கொள்ளுதல் வேண்டும்.

பிள்ளைகள் கடத்தப்படுதல் அல்லது பலவந்தமாக தடுத்து வைக்கப்படுதல் ஆகியன சிறுவர்கள் உளவியல் ரீதியான பாதிப்பிற்கு உள்ளாவதற்கு வழிவகுக்கின்றன. இதனால் அவர்களது கல்வி கற்பதற்கான உரிமை மறுக்கப்படுகிறது; பெற்றோர் மற்றும் பாதுகாவலரின் அன்பு கிடைக்காமல் போகின்றது; சுகாதார பாதிப்பும் ஏற்படுகின்றது. இதனால் இதற்கு எதிராகச் செயற்படுதல் முக்கியமானதாகும். இதன் போது பிள்ளைகளை முறையாகக் கையாள்தல் சமூகத்தின் பொறுப்பும் கடமையுமாகும்.

**உறுப்புரை - 28**

கல்வியைப் பெற்றுக் கொள்ளும் உரிமை அனைத்துச் சிறுவர்களுக்கும் உண்டு. ஆரம்பக் கல்வியைக் கட்டாயப்படுத்தலும் அதனை இலவசமாகப் பெற்றுக் கொடுத்தலும் அரசாங்கத்தின் பொறுப்பு ஆகும்.

இலங்கைப் பிரசைகள் என்ற வகையில் அனைவருக்கும் ஆரம்பக் கல்வியிலிருந்து உயர் கல்விவரை இலவசமாகக் கல்வியைப் பெற்றுக் கொடுப்பதற்கான அனைத்து வசதிகளையும் அரசாங்கம் செய்து கொடுத்துள்ளது. இவற்றை பயனுள்ள வகையில் பயன்படுத்தி நல்ல கல்வியைப் பெற்றுக் கொள்வதும், நீங்கள் பெற்றுக் கொண்ட

அறிவையும் திறமைகளையும் சமூகத்தின் வளர்ச்சிக்காகப் பயன்படுத்துவதும் உங்களது கடமையையும் பொறுப்பும் ஆகும்.

**சிறுவர் உரிமைகள் சில பின்வருமாறு,**

- கருத்து வெளிப்பாட்டு உரிமை
- சிந்தனை செய்யும் உரிமை, மனசாட்சிக்கான உரிமை, மத நம்பிக்கை பற்றிய உரிமை
- ஒன்று கூடுவதற்கான உரிமை
- தனித்துவத்தினைப் பேணும் உரிமை
- தகவல் சேகரிக்கும் உரிமை
- சுகாதாரம் மற்றும் போசணையைப் பெற்றுக் கொள்வதற்கான உரிமை
- போதைப் பொருளிலிருந்து பாதுகாப்புப் பெறும் உரிமை
- சிறுபான்மைச் சமூகங்களுக்குரிய பிள்ளைகளுக்குத் தமது கலாசாரத்தை அனுபவிப்பதற்கும் சமய அனுஷ்டானங்களைக் கடைபிடிப்பதற்கும் தமது மொழியைப் பயன்படுத்துவதற்குமான உரிமை
- விளையாட்டுகளில் ஈடுபடுவதற்கும், பொழுது போக்காக இருப்பதற்கும் கலா சார, அழகியல் ரீதியிலான செயற்பாடுகளில் ஈடுபடுவதற்குமான உரிமை
- கல்வி, சுகாதாரம் என்பவற்றிற்கு அல்லது அபிவிருத்திக்கு இடையூறு ஏற்படுமாறு சிறுவர் உழைப்பினைப் பயன்படுத்துவதிலிருந்து விலகி இருப்பதற்கான உரிமை
- பாலியல் துஷ்பிரயோகங்கள், பாலியல் வன் முறைகள், பாலியல் செயற்பாடுகள் என்பவற்றிலிருந்து பாதுகாப்புப் பெறும் உரிமை
- யுத்த சூழ்நிலைகளின் போது பாதுகாப்புப் பெறுவதற்கும், யுத்தத்தில் பங்கு பற்றச் செய்வதிலும், போர் வீரராகப் படையணியில் சேர்த்துக் கொள்ளுதல் என்பவற்றிலிருந்தும் விலகியிருப்பதற்கான உரிமை

**சிறுவர் உரிமைகள் பற்றிய சமவாயத்தின் படி அரசாங்கம் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் சில கீழே தரப்பட்டுள்ளன.**

- சிறுவர்களின் இருப்பையும் மேம்பாட்டையும் உறுதிப்படுத்தல்
- குடும்ப உறவுகளை பாதுகாத்தல்
- பாதுகாப்பான குடும்பச் சூழல் கிடைக்கப்பெறாத சிறுவர்களை பாதுகாத்தல்
- சிறுவர்கள் உச்ச பயனை அடையும் வகையில் சட்டங்களை நடைமுறைப்படுத்தல்
- சமூகப் பாதுகாப்பினைப் பெற்றுக் கொடுத்தல்
- போர் நடவடிக்கைகளுக்கு உட்படுத்தாதிருத்தல்
- கல்வி பெறும் உரிமையை உறுதிப்படுத்தல்

**சிறுவர் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக இலங்கையில் மேற்கொள்ளப்பட்டுள்ள நடவடிக்கைகள்**

- ஐக்கிய நாடுகள் சிறுவர் உரிமை தொடர்பான சமவாயத்தை ஏற்று நடைமுறைப்படுத்தல்
- இலங்கையில் நீதி நிர்வாகத்தினை சிறுவர் உரிமை பற்றிய சமவாயத்திற்கு இணங்க மேற்கொள்ளல்
- சிறுவர் தொடர்பான நடவடிக்கைகளை மேற்கொள்வதற்குத் தேசிய சிறுவர் அதிகார சபையைத் தாபித்து செயற்படுத்துவதோடு அதிகாரத்தைப் பிரயோகித்தல்
- சிறுவர் பாதுகாப்புத் திணைக்களம் தாபிக்கப்பட்டுள்ளமை
- சகல பொலிஸ் நிலையங்களிலும் சிறுவர் மற்றும் பெண்கள் தொடர்பான முறைப்பாடு, விசாரணைகளை மேற்கொள்ளல்; சிறுவர் - பெண்கள் பிரிவு தாபிக்கப்பட்டுள்ளமை
- சிறுவர் பாதுகாப்பு தொடர்பாக ஆலோசனைகளைப் பெற்றுக் கொள்வதற்காகச் சிறுவர் தொலைபேசி இலக்கம் அறிமுகம் செய்யப்பட்டுள்ளமை (Child Line Sri Lanka - 1929)

**செயற்பாடு 3 - 4**

- பின்வரும் உரிமைகளை அனுபவிக்கும் போது உங்களால் மேற்கொள்ளப் பட வேண்டிய கடமைகளைக் குறிப்பிடுக.

| உரிமைகள் | கடமைகள் |
|---|---|
| மதத்தை பின்பற்றும் சுதந்திரம் | |
| கல்வியைப் பெற்றுக் கொள்ளும் சுதந்திரம் | |
| பாரபட்சத்திற்கு உள்ளாகாதிருத்தல் | |
| ஒன்று கூடுவதற்கான சுதந்திரம் | |

- சிறுவர் உரிமைச் சமவாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ள உமக்கு விருப்பமான 3 உரிமைகளைத் தெரிவு செய்து, அவ்வுரிமைகள் உமது வாழ்க்கையை வெற்றிகரமாகக் கொண்டு செல்ல உதவும் விதத்தை விளக்குக.

**விசேட தேவையுடையோர் (Children with Special Needs)**

சமூகத்தில் வாழும் அனைவரும் ஒரேவிதமான திறமை உடையவர்களல்லர். உடல் ரீதியாக, உள ரீதியாக, அறிவு ரீதியாக மற்றும் வேறு வகையில் மாற்றுத்திறன் உடைய வர்கள் எம்மத்தியில் வாழ்கின்றனர். இத்தகைய மாற்றுத் திறன்கள் பிறப்பின் போது ஏற்பட்டவையாக இருக்கலாம் அல்லது பிறப்பின் பின் ஏற்பட்டவையாக இருக்கலாம். மாற்றுத்திறன் உடையவர்களாக இருப்பினும், சமூகத்தில் உள்ள ஏனையோரைப்

போல் இவர்களிடமும் விசேட திறமைகள் இருக்கின்றன. குறிப்பாகக் கண்பார்வை இழந்தவர்கள் கலைத்துறையிலே மிக சிறப்பான முறையில் தமது திறமைகளை வெளிக்காட்டிய சந்தர்ப்பங்கள் மற்றும் நிகழ்வுகளைப் பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள். இத்தகையோர் விசேடமான முறைகளைக் கொண்டு தமது கல்வியைச் சிறப்பான முறையில் நிறைவு செய்து நாட்டிற்கு சேவையாற்றும் சந்தர்ப்பங்கள் பற்றியும் நீங்கள் அறிந்திருப்பீர்கள். தமது திறமைகளை மேம்படுத்திக் கொண்டு நாட்டிற்கும் சமூகத்திற்கும் அதிகளவில் சேவை ஆற்றுவதற்கு இத்தகையோருக்கு சந்தர்ப்பம் கிடைத்துள்ளது.

விசேட தேவையுடையோர் மீது விசேட கவனம் செலுத்தப்பட்டு அவர்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பதற்காக ஐக்கிய நாடுகள் சபை நடவடிக்கை எடுத்துள்ளது. விசேட தேவையுடையோர் தொடர்பாக ஐக்கிய நாடுகள் சமவாயம் (2006) உறுதி செய்தமை விசேட தேவையுடையோரின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக மேற்கொண்ட முக்கிய அம்சமாகக் குறிப்பிடலாம். இவ்வாறு சிறுவர் உரிமை சமவாயத்தின் மூலம் விசேட தேவையுடையோரின் உரிமைகளைப் பாதுகாப்பதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**செயற்பாடு 3 - 5**



- விசேட தேவையுடையோரது உரிமைகளைப் பேணுவதற்காக சமூகத்தினால் நிறைவேற்றப்பட வேண்டிய பொறுப்புகள் சிலவற்றைக் குறிப்பிடுக.
- விசேட தேவையுடையோரின் நல்வாழ்க்கைக்காக அரசினால் மேற்கொள் ளப்பட்டுள்ள வசதிகள் தொடர்பாகச் சுருக்கமாகக் குறிப்பிடுக.

**ஆதிவாசிகள் மற்றும் பழங்குடி மக்கள் பிரிவினர்**

ஆதிவாசிகள், ஒரு விசேட கலாசாரத்திற்கு உரித்தாகின்றனர். உணவு, ஆடையணிகள், மொழி, பண்பாடு, பழக்கவழக்கங்கள், ஆகியன அவர்களது கலாசாரத்திற்கு உதார ணங்களாகும். அவர்களுடைய நடனங்கள், பாடல்கள் போன்றனவும் அவற்றுள் உள்ளடங்குகின்றன. ஆதிவாசிகளின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக உலக தொழிலாளர் அமையம் மூலம் 1989 ஆம் ஆண்டு ஆதிவாசிகள் மற்றும் பழங்குடி மக்கள் சங்கம் அறிமுகப்படுத்தப்பட்டது. ஆதிவாசிகள் தாம் பழங்காலத்தில் வாழ்ந்து வந்ததைப் போன்றே அவர்களின் தொழில், மொழி, பண்பாடுகள், பழக்க வழக்கங்கள், வாழ்க்கை முறை போன்றவற்றை அவ்வாறே நடாத்திச் செல்வதற்குத் தேவையான வசதிகளை அமைத்துக் கொடுத்தல் இச்சங்கத்தின் பிரதான நோக்கமாகும்.

இலங்கையில் வாழும் ஆதிவாசிகள் ''வேடுவர் சமூகம்'' என்றழைக்கப்படுகின்றனர். விசேட குழுவினராகக் கருதப்படும் ஆதிவாசிகள் தம் உரிமைகளை அனுபவிப் பதற்கான சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுப்பதும் அவ்வுரிமைகளுக்கு மதிப்பளிப்பதும் ஒரு நாட்டில் வாழும் அனைத்துப் பிரசைகளினதும் கடமையாகும்.



உரு 3.7 இலங்கையில் வாழும் ஆதிவாசிகள்

**செயற்பாடு 3 - 6**

இலங்கையில் ஆதிவாசிகளது உரிமைகளைப் பாதுகாப்பதற்காக மேற்கொள்ள வேண்டிய செயற்பாடுகள் சிலவற்றைக் குறிப்பிடுக.

## முதியோர் (சிரேஷ்ட பிரசைகள்)

முதியோருக்கான வயதெல்லையாகச் சர்வதேச ரீதியில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு வயதெல்லை கிடையாத போதிலும், இலங்கையில் அரசாங்கத்துறையில் சேவையாற்றி ஓய்வு பெறும் வயதெல்லையாக 57 - 60 கொள்ளப்படுகிறது.

சிரேஷ்ட பிரசைகள் தம் இளமைப் பருவத்தில் அரசதுறை ஊழியராகவும், தனியார்துறை ஊழியராகவும் சுய தொழில் புரிபவராகவும் வெளிநாட்டு வேலை வாய்ப்புகளில் ஈடுபட்டவராகவும் நாட்டின் பொருளாதார மற்றும் சமூக வளர்ச்சிக்காகத் தம்மையும் தம் காலத்தையும் செலவிட்டுள்ளனர். இவ்வகையில் இத்தகையோர் சமூகத்தின் நலனுக்காகப் பெரும் சேவை ஆற்றியவர்களாகக் கருதப்படுகின்றனர்.

இவர்கள் சிறந்த மற்றும் திருப்தியான முறையில் சமூகத்தில் வாழ்வதற்குத் தேவையான சந்தர்ப்பத்தைப் பெற்றுக் கொடுத்தல் நாட்டு மக்களினதும் எமது சமூகத்தினதும் பொறுப்பும் கடமையுமாகும். எதிர்காலத்தில் ஆசிய நாடுகளில் முதியோர்களின் சதவீதம் அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகின்றது. அதனால், அவர்களுடைய உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது குறித்து கூடுதலான கவனம் செலுத்த

வேண்டிய தேவை ஏற்பட்டுள்ளது. இலங்கையில், சிரேஷ்ட பிரசைகளுக்காகப் பல்வேறு வகையான காப்புறுதித் திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளன. முதியோருக்குத் திருப்திகரமான சமூக வாழ்க்கையொன்றைப் பெற்றுக்கொடுப்பது குடும்பத்தினதும் சமூகத்தினதும் பொறுப்பும் கடமையுமாக இருக்கின்றது.

எதிர்காலத்தில் ஆசிய நாடுகளுள் இலங்கைச் சனத்தொகையிலேயே முதியோர் வீதம் அதிகரிக்கலாமென எதிர்பார்க்கப்படுகிறது. எனவே நாம் அவர்களது உரிமைகளைப் பாதுகாப்பதில் கூடிய கவனம் செலுத்துதல் வேண்டும். தேசிய மட்டத்தில் இலங்கையில் முதியோர் உரிமைகளைப் பாதுகாக்கும் சட்டமொன்று (2000 ஆம் ஆண்டில் 9 ஆம் இலக்கத்தில்) அமுல்படுத்தப்பட்டுள்ளது. சர்வதேச ரீதியிலும் முதியோர் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக விசேட கவனம் செலுத்தப்பட்டு வருகின்றது.

**செயற்பாடு 3 - 7**



- குடும்ப அங்கத்தவர்கள் எனும் வகையில் வயது முதிர்ந்தோர்களுக்குத் திருப்திகரமான சமூக வாழ்க்கை ஒன்றை ஏற்படுத்திக் கொடுப்பதற்காக உங்களால் மேற்கொள்ளப்பட வேண்டிய செயற்பாடுகளைக் குறிப்பிடுக.
- முதியோர் நலன் கருதி இலங்கை அரசினால் பின்பற்றப்பட்டுவரும் நடவடிக்கைகள் சிலவற்றைக் குறிப்பிடுக.

## தொழிலாளர் உரிமைகள்

நாட்டின் வளர்ச்சிக்காக மிகப் பாரிய பங்களிப்பினை வழங்குபவர்கள் தொழிலாளர்களாவர். இதனால், தொழில் புரிவோருக்கு சமூகத்தில் சிறந்த இடத்தினை வழங்குதல் அவசியமாகும். எனவே, தொழிலாளர் உறவுகளை நல்ல முறையில் பேணுவது நாட்டின் வளர்ச்சிக்கு இன்றியமையாததாகும்.

தொழிலாளர்களுக்கு சமூகத்தில் சிறந்த நிலையை ஏற்படுத்தும் பொருட்டு 1919 ஆம் ஆண்டு சர்வதேச தொழிலாளர் அமைப்பு (ILO) தோற்றுவிக்கப்பட்டது. 1946 ஆம் ஆண்டிலிருந்து சர்வதேச தொழிலாளர் அமைப்பு ஐக்கிய நாடுகளின் சபையின் இணைப்பு நிறுவனமாகச் செயற்படத் தொடங்கியது. இது, தொழிலாளர்களின் உரிமைகளைப் பாதுகாப்பதை நோக்காகக் கொண்டு பல்வேறு தொழில் அமைப்புகளையும் உருவாக்கியுள்ளது. இலங்கையும் 1948 ஆம் ஆண்டு சர்வதேச தொழிலாளர் அமைப்பின் அங்கத்துவத்தைப் பெற்றுக் கொண்டது. சர்வதேச தொழிலாளர் சங்கத்தினால் நிறுவப்பட்ட பல தொழிலாளர் அமைப்புகள் இலங்கையில் ஏற்றுக் கொள்ளப்பட்டு அவற்றின் செயற்றிட்டங்களைச் செயற்படுத்துவதற்கான திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

### தொழிலாளர் உரிமைகளைப் பாதுகாத்தல்

- *கடை காரியாலயச் சட்டம் (சாப்புச் சட்டம்)*
- *பெண்களுக்கான பிரசவகால ஓய்வு பற்றிய கட்டளைச் சட்டம்*
- *தொழிற்சாலை கட்டளைச் சட்டம்*
- *சம்பளக் கட்டளைச் சட்டம்*
- *ஊழியர் சேமலாப நிதிச் சட்டம்*

அனைத்துத் தொழிலாளர்களும் திருப்தியாக தம் சேவையை நிறைவேற்றுவதற்காக உரிய ஊதியம், விடுமுறை, தொழில் பாதுகாப்பு, சமூகப் பாதுகாப்பு, சுகாதார வசதிகள் போன்றவற்றைப் பெற்றுக் கொள்வதற்கான சந்தர்ப்பம் இருத்தல் வேண்டும்.

தொழிலாளர்களுக்கு இவ்வுரிமைகளைப் பெற்றுக்கொடுப்பதன் மூலம் தொழிலாளர், மற்றும் தொழில் வழங்குநர் ஆகிய இருவருக்குமிடையிலான உறவை நல்ல முறையில் பேணவும் தார்மீக ஒற்றுமையை ஏற்படுத்தவும் உழைப்பிற்கு ஏற்ற ஊதியத்தை உயர்மட்டத்திற்குக் கொண்டு செல்லவும் முடியும்.

உரிமைகளை அனுபவிக்கும் போது உரிமை மற்றும் அவை தொடர்பான கடமைகளை முறையாகச் செய்வதன் மூலமாகவே தொழிலாளர் தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள முடியும். தொழிலாளர் மற்றும் தொழில் வழங்குநர் தம் பொறுப்புகளையும் கடமைகளையும் முறையாக நிறைவேற்ற வேண்டும். இதன்போது, தொழில் முறை வெற்றியடைவதோடு, தொழிலாளருக்கும் தொழில் வழங்குனருக்கும் இடையிலான உறவு வலுப்படும். இந்நிலை நாட்டின் உற்பத்திச் செயற்பாடுகளின் வெற்றிக்கும் நாட்டின் அபிவிருத்திக்கும் காரணமாக அமையும்.

### செயற்பாடு 3 - 8

- நிரல் I இல் தொழிலாளர் உரிமைகள் காட்டப்பட்டுள்ளன. அவை தொடர்பாக அவர்களால் நிறைவேற்ற வேண்டிய கடமைகளை நிரல் II இல் பூரணப்படுத்துக.

| நிரல் I<br>தொழிலாளர் உரிமைகள் | நிரல் II<br>தொழிலாளர் கடமைகள் |
|---|---|
| 8 மணித்தியால சேவைக் காலம் | |
| பொருத்தமான ஊதியம் பெறும் உரிமை | |
| விடுமுறை பெறும் உரிமை | |
| தொழிற் சங்கத்தில் சேர்ந்து கொள்ளும் உரிமை | |

## சுற்றாடல் சார் உரிமைகளும் கடமைகளும் (நியம வரைவிலக்கணம்)

சுற்றாடல் என்பது இயற்கையாகக் காணப்படும் எல்லா உயிர் மற்றும் உயிரற்ற பொருள்களின் தொகுப்பாகும். எம்மைச் சூளவுள்ள நீர், மண், தாவரம், நிலம், வாயு மற்றும் உயிரினங்கள் யாவும் இயற்கைச் சுற்றாடலுக்கு உரித்தாகின்றன. பண்டைய காலம் தொட்டு மனிதன் தன் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்வதற்காகச் சுற் றாடலைப் பல்வேறு விதமாகப் பயன்படுத்தியுள்ளான். 18 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட கைத்தொழில் புரட்சி காரணமாக, சூழலுக்கு ஏராளமான தீங்குகள் விளைவிக்கப்பட்டன. சனத்தொகை அதிகரிப்பு மற்றும் மனிதனது தேவைகள் அதிகரித்தமை ஆகியன உற்பத்திச் செயற்பாடுகளில் பாரிய மாற்றங்களை ஏற்படுத்தின.

இம்மாற்றங்கள் பல்வேறுவகையில் சுற்றாடல் மாசடைதல்களுக்குக் காரணமாகின்றன. மனிதனைப் போன்றே, மரஞ்செடி கொடிகள், பொய்கைகள், மிருகங்கள், பறவைகள், ஆறுகள், குளங்கள், இன்றியமையாத இயற்கை அம்சங்களாக விளங்குகின்றன. மனிதனானவன் சூழலின் ஓர் அங்கம் மட்டுமே ஆவான். எனவே சூழலின் இயற்கைத் தன்மை பேணப்படின், சுத்தமான குடிநீர், சுத்தமான வளி ஆகியவற்றுடன் மாச டையாத சூழலில் வாழ்வதற்கான பாதுகாப்பான நிலை உருவாகும்.

புவியின் அபிவிருத்தியில் மனிதனே பிரதானமாக இருக்கின்றான். இயற்கையுடன் இணைந்து ஒத்துழைப்புடன் செயற்பட்டு சுகாதாரமான வாழ்க்கையை வாழ்வதற்கான முழு உரிமையும் அவனுக்குண்டு.

(சுற்றாடல் மற்றும் அபிவிருத்தி தொடர்பான ரியோ அறிக்கையின் 3 ஆவது கோட்பாடு)

இக்கோட்பாட்டின் மூலம் சுற்றாடல் தொடர்பில் மனிதன் மேற்கொள்ள வேண்டிய கடமைகளின்பால் கவனம் செலுத்தப்பட்டுள்ளது. சுற்றாடல் உரிமைகளைப் பாதுகாக்கும் பொருட்டு சமூகத்தின் மூலம் மேற்கொள்ளப்பட வேண்டிய கடமைகள் மற்றும் பொறுப்புகள் குறித்து அவதானம் செலுத்தப்படல் வேண்டும்.

நீரைப் பாதுகாத்தல், காடுகள் மற்றும் வன விலங்குகளைப் பாதுகாத்தல், கழிவுகளை உரிய முறையில் முகாமை செய்தல் போன்ற விடயங்களில் தம் கடமையினை முறையாக செய்தல் மற்றும் அவை தொடர்பான சட்டங்களுக்கு ஏற்றவாறு செயற்படுதல் ஆகியன மனிதன் தனது சுற்றாடல் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்குக் காரணமாக அமையும்.

1980 ஆம் ஆண்டு உறுதிப்படுத்தப்பட்ட தேசிய சுற்றாடற் சட்டமே சூழல் பாதுகாப்புத் தொடர்பாக இலங்கையில் நடைமுறைப்படுத்தப்படும் பிரதான சட்டமாக உள்ளது. இச்சட்டத்தின் மூலம் சுற்றாடல் தொடர்பாக ஏற்படும் பல்வேறு பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதுடன், இதனைச் செயற்படுத்தும் பிரதான நிறுவனமாக மத்திய சுற்றாடல் அதிகாரசபை செயற்படுகின்றது.

இலங்கையில் சுற்றாடல் தொடர்பாகச் செயற்படும் நிறுவனங்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.

- சுற்றாடல் அமைச்சு
- வனப் பாதுகாப்புத் திணைக்களம்
- புவிச்சரிதவியல் மற்றும் சுரங்க அகழ்வாராய்ச்சி பணியகம்
- சமுத்திர சுற்றாடல் பாதுகாப்பு அதிகார சபை
- வனவிலங்கு பாதுகாப்புத் திணைக்களம்
- கரையோரப் பாதுகாப்புத் திணைக்களம்

இவ்வமைப்புகள் மூலம் மேற்கொள்ளப்படுகின்ற சுற்றாடல் திட்டங்களுக்கு இணங்க செயற்படுதலும், தனிப்பட்ட ரீதியில் சுற்றாடல் பாதுகாப்புக்கு ஒத்துழைப்பு வழங்குதலும் சுகாதாரமான சுற்றாடலில் வாழ்வதற்கான உரிமையினை உறுதிப் படுத்துவதற்கு நாம் ஆற்ற வேண்டிய கடமையும் பொறுப்பும் ஆகும்.

**செயற்பாடு 3 - 9**

- மனித செயற்பாடுகள் காரணமாக சூழல் மாசடையும் சந்தர்ப்பங்கள் குறித்து செய்தித் தாள்களில் வெளிவந்த செய்திகளைச் சேகரிக்க.
- பின்வரும் அட்டவணையைப் பூரணப்படுத்துக.

| நிரல் I | நிரல் II | நிரல் III | நிரல் IV |
|---|---|---|---|
| சூழல் அம்சங்கள் | மாசடையச் செய்யும் மனித நடத்தைகள் | மாசடைதலின் விளைவுகள் | மாசடைதலைத் தடுக்கும் வழிமுறைகள் |
| நீர் | | | |
| நிலம் | | | |
| வளி | | | |

**இலங்கையில் மனித உரிமைகள் தொடர்பான யாப்புக் கோட்பாடுகளின் வளர்ச்சி**

இலங்கையின் முதலாவது சனநாயக சோசலிசக் குடியரசின் அரசியல் யாப்பில் (1972) முதன் முறையாக அடிப்படை உரிமைகளை உள்ளடக்கியமை இது தொடர்பாக எடுக்கப்பட்ட முக்கியமான நடவடிக்கையாகக் கருதப்படுகின்றது. 1972 ஆம் ஆண்டு இலங்கையின் முதலாவது சனநாயக குடியரசின் 18 வது உறுப்புரையில் அடிப்படை உரிமைகள் தொடர்பான விதிமுறைகள் உள்ளடக்கப்பட்டுள்ளன.

எனினும் இவ்வரசியல் யாப்பில் அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பதற்கான செயற்பாடுகள் மற்றும் உரிமைகள் மீறப்படும் சந்தர்ப்பங்களில் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் தொடர்பாகக் குறிப்பிடப்படவில்லை.

1978 ஆம் ஆண்டு இலங்கையின் இரண்டாம் குடியரசு யாப்பில் 3 வது அத்தியாயத்தின் 10 - 14 வது உறுப்புரைகளில் அடிப்படை உரிமைகள் உள்ளடக்கப்பட்டுள்ளன.

**அடிப்படை உரிமைகள் (Fundamental rights)**

**உறுப்புரை - 10**

- ஒவ்வொருவரும் தான் விரும்பும் மதத்தை அல்லது நம்பிக்கையைப் பின்பற்றுவதற்கான சுதந்திரம், சிந்தனை செய்யும் சுதந்திரம் உட்பட மனச்சாட்சியைப் பின்பற்றும் சுதந்திரம் என்பவற்றுக்கு உரித்துடையவராதல் வேண்டும்.

**உறுப்புரை - 11**

- ஒவ்வொருவரும் சித்திரவதை அல்லது கொடூரமான மனிதாபிமானமற்ற அல்லது இழிவாக நடாத்துதலுக்கு அல்லது தண்டனைக்கு உட்படலாகாது.

**உறுப்புரை - 12**

- சட்டத்தின் முன் சகலரும் சமமானவர்கள் அத்துடன் சட்டத்தின் சமமான பாதுகாப்பிற்கு உரித்துடையவர்கள்.
- எந்தவொரு நபரும், இனம், மதம், மொழி, சாதி, பால், அரசியல் கொள்கை, பிறப்பிடம் காரணமாக வேறுபடுத்தப்படக் கூடாது.

**உறுப்புரை - 13**

- ஒவ்வொருவரும் தனது நாட்டில் தனக்கு எதிராகப் புரியப்பட்ட சித்திரவதை தொடர்பாக முறைப்பாடு செய்ய உரித்துடையவராவதுடன், அத்தகைய முறைப்பாட்டாளர் குறித்த முறைப்பாட்டினால் அல்லது கொடுக்கப்பட்ட சான்றினால் அச்சுறுத்தல் அல்லது தவறாக நடாத்தப்படாமல் இருப்பதை அரசு உறுதிப்படுத்த வேண்டும்.

**உறுப்புரை - 14**

- ஒவ்வொரு பிரசையும் தனியாக அல்லது மற்றவர்களுடன் சேர்ந்து, பகிரங்கமாக வேனும் அந்தரங்கமாகவேனும் தனது மதத்தையோ அல்லது நம்பிக்கையையோ வழிபாட்டிலும் போதனையிலும் அனுசரிப்பிலும் வெளிக்காட்டுவதற்கான சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம், தொழிற் சங்கத்தை அமைக்கும் சுதந்திரம், மதவழிபாட்டில் ஈடுபடுவதற்கான சுதந்திரம், சொந்தக் கலாசாரத்தையும் மொழியையும் பயன்படுத்துவதற்கான சுதந்திரம், சட்டமுறையான

தொழிலில் ஈடுபடுவதற்கான சுதந்திரம், இலங்கைக்கு திரும்பி வருவதற்கான சுதந்திரம் ஆகியவற்றிற்கு உரித்துடையவராவார்.

**அடிப்படை உரிமைகள் மீறப்படும் போது மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள்**

- 1978 ஆம் ஆண்டு அரசியல் யாப்பின் 17 மற்றும் 126 வது உறுப்புரைகளில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு, அதிகார அல்லது நிர்வாக செயற்பாடுகள் மூலம் அடிப்படை உரிமைகள் மீறப்படுமாயின் அது தொடர்பாக உயர் நீதிமன்றத்திற்கு மனுத்தாக்கல் செய்யும் உரிமை உண்டு.
- அடிப்படை உரிமை மீறல் தொடர்பாக இலங்கை மனித உரிமைகள் ஆணைக்குழுவுக்கு முறைப்பாடு செய்யலாம்.
- நிர்வாகச் செயற்பாட்டின் மூலம் அடிப்படை உரிமை மீறப்படுமாயின் நிர்வாகத் திற்கான பாராளுமன்ற ஆணையாளரிடம் (குறைக்கேள் அதிகாரி அல்லது ஒம்புட்ஸ்மன்) முறைப்பாடு செய்யலாம்.
- நாம் மேலே கலந்துரையாடிய குடியியல் மற்றும் அரசியல் உரிமைகள் தொடர்பான முதலாவது சமவாய விருப்பு உடன்படிக்கையில் இலங்கையும் கைச்சாத்திட்டுள்ளதால், மனித உரிமை மீறல்கள் தொடர்பாக அதன் தீர்ப்புகள், தேசிய ரீதியாக இடம்பெறும் விடயங்கள் தொடர்பாக திருப்தி அடையாத போது சர்வதேச மனித உரிமைகள் ஆணைக்குழுவிற்கு முறையீடு செய்யலாம்.

**இலங்கையில் மனித உரிமைகளை அனுபவிப்பது தொடர்பான தற்போதைய நிலைமை**

ஒரு பிரசைக்கு உரித்தாகும் ஓர் அடிப்படை உரிமை ஏதேனும் ஓர் அதிகாரம் அல்லது நிர்வாகச் செயற்பாடு மூலம் மீறப்படுதல் அல்லது மீற முயற்சித்தலின் போது, உதவியைப் பெற்றுக் கொள்வதற்கு அல்லது அது சம்பந்தமாகப் பரிகாரம் பெற்றுக் கொடுக்கும் படி நீதிமன்றத்தில் மனுதாக்கல் செய்வதற்கு இலங்கை நீதிமன்றம் மூலம் சந்தர்ப்பம் வழங்கப்பட்டுள்ளது.

இவ்வாறு ஒருவர் மனுத்தாக்கல் செய்கையில், வழக்கு விசாரணையின் போது பொருத்தமான தீர்ப்பினை வழங்குவதற்காகவும், உரிய முறையில் செயற்படுவதற்காகவும் நீதிமன்றங்கள் நடைமுறைப்படுத்தப்படுகின்றன. இதன் மூலம் பிரசைகளது அடிப்படை உரிமைகள் பாதுகாக்கப்படுகின்றன.

அரச அலுவல்கள் மூலம், அரச திணைக்களங்கள் மற்றும் உள்ளூராட்சி மன்றங்கள், மற்றும் வேறு நிறுவனங்களின் அதிகாரிகள் மூலம் அடிப்படை உரிமைகள் மீறப்படும் போது, அது தொடர்பான முறைப்பாடுகளை சட்டத்தின் விதிமுறைகளுக்கு இணங்க பரிசீலனை செய்து அறிக்கை சமர்ப்பிக்கும் அதிகாரம் ஒம்புட்ஸ்மனுக்கு வழங்கப்பட்டுள்ளது.

அடிப்படை உரிமைகள் மீறுவது தொடர்பாக இலங்கை மனித உரிமைகள் ஆணைக் குழுவிற்கு முறைப்பாடு செய்வதற்கு பிரசைகளுக்கு வாய்ப்புகள் வழங்கப்பட்டுள்ளன. அடிப்படை உரிமைகள் மீறப்படுதல் தொடர்பான முறைப்பாட்டைப் பரிசீலனை செய்து நியாயமான தீர்ப்பினை பரிந்துரை செய்வதற்கு மனித உரிமைகள் ஆணைக்குழுவிற்கு முடியும்.

இச்செயற்பாடுகள் அனைத்தும் இலங்கையின் பிரசைகளின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பதற்காக மேற்கொள்ளப்பட்டுள்ள நடவடிக்கைகள் ஆகும். தேசிய கல்வி நிறுவகம் மூலம் பாடசாலை மற்றும் தேசிய கல்வியியற் கல்லூரிகளது பாடத்திட்டங்களில் மனித உரிமைகள் தொடர்பான அத்தியாயங்கள் சேர்க்கப்பட்டுள்ளதன் மூலம் மாணவர்களை அறிவூட்டுவதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

மனித உரிமைகளுக்கு மதிப்பளிப்பதுடன் அவற்றுடன் இணைந்த கடமைகளையும் பொறுப்புக்களையும் நிறைவேற்றும் எதிர்கால சந்ததியினரை உருவாக்குவதே இதன் நோக்கமாகும். மேலும், பல்கலைக்கழகங்கள் மற்றும் ஏனைய கல்வி நிறுவனங்கள் மூலம் நடாத்தப்படும் பாடநெறிகளினூடாகவும் மனித உரிமைகள் தொடர்பாக மாணவரை அறிவூட்டுவதற்குத் தேவையான நடவடிக்கைகள் மேற்கொள் ளப்பட்டுள்ளன.

மேலும் நீதி, சமாதானம் மற்றும் பொது மக்களின் பாதுகாப்புத் தொடர்பாகச் செயற்படும் அதிகாரிகள் மற்றும் அரச துறைகளில் கடமையாற்றும் அதிகாரிகளுக்கு மனித உரிமைகள் தொடர்பான அறிவை வழங்குவதற்குப் பயிற்சிப் பாடநெறிகள் பலவும் ஏற்படுத்தப்பட்டு அவற்றை நடைமுறைப்படுத்துவதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இவ்வாறு மனித உரிமைகள் மற்றும் கடமைகள் தொடர்பாக அறிவூட்டுதல் ஒரு சிறந்த சனநாயக மக்கள் சமூகத்தைக் கட்டியெழுப்புவதற்கு வழிவகுக்கும்.

**செயற்பாடு 3 - 10**



- மனித உரிமைகள் மீறப்பட்ட சந்தர்ப்பங்களையும் அது தொடர்பாக உயர் நீதிமன்றத்தினால் வழங்கப்பட்ட தீர்ப்புகள் பற்றிய தகவல்களைக் கொண்ட பத்திரிகைச் செய்திகளையும் சேகரிக்க.
- அந்த செய்திகளை நன்றாக வாசித்து சிறு குறிப்புகள் எழுதுக.

### மனித உரிமைகளை அனுபவிப்பதில் உள்ள வரையறைகள்

மனித உரிமைகள் பற்றிய கருத்துகள் பண்பாட்டு ரீதியில் முக்கியம் பெறுகின்றன. மனித உரிமைகள், சுதந்திரம் மற்றும் சமத்துவம் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு அதனை அனைவரும் அனுபவிப்பதற்கான சந்தர்ப்பத்தை அமைத்துக் கொடுப்பதற்கான சட்ட திட்டங்களைக் கொண்டுள்ளது.

அதேவேளை, மனித உரிமைகளை அனுபவிக்கும் போது ஒரு சில எல்லைகளுக்கு உட்பட்டு அவற்றை அனுபவிக்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது. இன்னுமொருவரது உரிமைகளுக்கு தடையேற்படும் வண்ணம் தமது உரிமைகளை அனுபவிப்பதற்கு எவருக்கும் உரிமையில்லை.

ஒருவருக்கு தனது கைத்தடியைச் சுழற்றிக் கொண்டு தான் சுதந்திரத்துடன் தன் பாதையில் பயணஞ் செய்யமுடியும். ஆனால் அச்சுதந்திரம் அடுத்தவரின் மூக்கு நுனி வரை மட்டுமே ஆகும்.

பேராசிரியர் ஹரல்ட் ஜே. லஸ்கி

1978 ஆம் ஆண்டு இலங்கை அரசியல் யாப்பின் 15 வது உறுப்புரையில் அடிப்படை உரிமைகளை அனுபவிப்பது தொடர்பான வரையரைகள் விதிக்கப்பட்டுள்ளன.

இவ்வகையில், தேசியப் பாதுகாப்பு, இன மற்றும் சமய ஒற்றுமையை மேம்படுத்தல், தேசிய பொருளாதாரத்தைப் பாதுகாத்தல், பொது மக்களது சுகாதாரம், பண்பாடு, ஏனையோரின் உரிமைகளைப் பாதுகாத்தல் மற்றும் மதித்தல் போன்றன தொடர்பாக உரிமைகளை அனுபவிப்பதற்கான எல்லைகளை வகுக்கும் அதிகாரம் தொடர்பாக அரசியல் யாப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. நாட்டில் யுத்தம் அல்லது சிவில் பிரச்சினைகள் ஏற்படும் சந்தர்ப்பத்தின் போது பொது நலனை கருத்திற் கொண்டு ஊடக தணிக்கையினை மேற்கொள்வதற்கு அரசுக்கு உரிமை உண்டு என்பது இதற்கு சிறந்த உதாரணமாகும். நாட்டின் பிரஜைகள் ஒவ்வொருவரும் தமது உரிமைகளை சட்டத்தின் எல்லைக்குள் இருந்தே அனுபவித்தல் வேண்டும் என்பதை விளங்கிக் கொள்ளல் வேண்டும்.

### மனித உரிமைகளைப் பாதுகாப்பதில் பிரசைகளது பொறுப்புகளும் கடமைகளும்

இலங்கையர்கள் பண்டைய காலத்திலிருந்து பொறுப்புகளையும் கடமைகளையும் நிறைவேற்றுவதனை வாழ்க்கையின் ஓர் அங்கமாக கொண்டிருந்தனர் எனக் கூறப் படுகிறது. தம் குடும்பத்தின் அங்கத்தவர்கள் மற்றும் மூத்தோரைப் பராமரித்தல், அவர்கள் மீது அக்கறை காட்டுதல், அவர்களுக்காக தமது பொறுப்புகளையும் கடமைகளையும் நிறைவேற்றுதல் என்பன இலங்கையில் பண்டைய காலம் தொட்டு நிலவிவரும் ஒரு கலாசார அம்சமாக உள்ளது. அவ்வாறே, தமது உழைப்பையும்

திறமையையும் தமது தாய் நாட்டிற்காக வழங்கியமை தொடர்பான தகவல்களையும் அறியக் கூடியதாக உள்ளன. அத்துடன் இயற்கை வளங்களை அனுபவிக்கும் போது இயற்கைச் சூழலுக்கு தீங்கு ஏற்படா வண்ணம் செயற்படுவதும் இன்றியமையாதது.

உரிமைகளுடன் இணைந்த கடமைகளை நிறைவேற்றுதல் சனநாயக வாழ்க்கை முறையொன்றில் காணப்படும் ஒரு விசேட அம்சமாகும். அவ்வாறு பொறுப்புகளையும் கடமைகளையும் நிறைவேற்றுதலானது, தமது உரிமைகளை மட்டுமல்லாமல் மற்றவர்களின் உரிமைகளையும் பாதுகாப்பதற்கு வழிவகுக்கும். மேலும், உரிமைகளுடன் கூடிய கடமைகளை நிறைவேற்றுவது, சனநாயக மக்கள் சமூகத்தின் சிறந்த தன்மை, ஒற்றுமை, நல்வாழ்வு, சமாதானம் ஆகிய பண்புகளை நிலைநாட்டுவதற்கும் வழிவகுக்கும்.

உரிமைகளுடன் பிணைக்கப்பட்டுள்ள பிரசைகளது கடமைகள் இரண்டு வகைப்படும்.



உரு 3.5

நாட்டில் அமுல்படுத்தப்படும் சட்டத்திற்கு அமைவாக பிரசைகள் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் சட்ட ரீதியான கடமைகள் எனப்படும். அரசாங்கத்திற்கு வரி செலுத்துதல், சட்டத்தை மதித்தல், அரசியல் யாப்பைப் பாதுகாத்தல், பொதுச் சொத்துகளைப் பாதுகாத்தல் போன்றன இதில் அடங்கும். இத்தகைய கடமைகள் உதாசீனப்படுத்தப்படின், சட்ட ரீதியான தண்டனைகளுக்கு உள்ளாக நேரிடும்.

மதகுருமாரை மதித்தல், மூத்தோரைப் பாதுகாத்தலும் பராமரித்தலும் ஆசிரியர்களுக்கு மதிப்பளித்தல், விழுமியங்களை மதித்தலும் பின்பற்றலும், சுற்றாடலைப் பேணுதல், நாட்டின் வளங்களைப் பாதுகாத்தல் போன்றன பண்பாட்டு ரீதியான கடமைகள் ஆகும்.

மதுபானம், புகை பிடித்தல் மற்றும் ஏனைய தவறான நடத்தைகளிலிருந்து விலகியிருத்தல் ஆகியன சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பொதுவான பண்பாட்டு அம்சங்களாகும். இவற்றிலிருந்து விலகி ஒரு சிறந்த நற்பிரசையாக வாழ்வதற்கு பண்பாட்டு ரீதியிலான உரிமை ஒரு நபருக்கு உண்டு. இத்தகைய தவறான செயற்பாடுகளிலிருந்து சமூகத்தை மீட்டெடுப்பதும் ஒரு நற்பண்புள்ள பிரசை ஒருவரது கடமையாகும். இத்தகைய கடமைகளை நிறைவேற்றத் தவறின், அவன் சமூகத்தின் வெறுப்புக்கு ஆளாவான் சமூகத்திலிருந்து ஒதுக்கி வைக்கப்படுவான். இத்தகைய பண்பாட்டு ரீதியிலான கடமைகளை நிறைவேற்றுதலானது, ஒருவரது கௌரவத்திலும் மதிப்பிலும் சமூகம் அவரை ஏற்றுக் கொள்வதிலும் நேரடியாகத் தாக்கம் செலுத்தும்.

**அடிப்படைக் கடமைகள்**

இலங்கையின் அரசியலமைப்பில் அடிப்படை உரிமைகளைப் போன்று அடிப்படைக் கடமைகள் தொடர்பாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. 1978 ஆம் ஆண்டு இலங்கை அரசியலமைப்பில் 28 வது பிரமாணத்தில் அடிப்படைக் கடமைகள் தொடர்பாக சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. (தரம் 10 குடியியற் கல்வி நூலின் முதலாவது அத்தியாயத்தில் கற்றுக் கொண்ட விடயங்களின் பால் கவனத்தைச் செலுத்தவும்).

**செயற்பாடு 3 - 11**

- கீழே காட்டப்பட்ட நிரல் I இல் பிரசை ஒருவரினால் நிறைவேற்றப்பட வேண்டிய அடிப்படைக் கடமைகள் சில காட்டப்பட்டுள்ளன. அக்கடமைகளை நிறைவேற்றுவதற்காக அவர் மேற்கொள்ள வேண்டிய செயற்பாடுகளை நிரல் II குறிப்பிட்டுக் காட்டுக.

| நிரல் I | நிரல் II |
|---|---|
| **பிரசை ஒருவரினால் நிறைவேற்றப்பட வேண்டிய அடிப்படைக் கடமைகள்** | **அக்கடமைகளை நிறைவேற்றுவதற்கு அவர் மேற்கொள்ள வேண்டிய செயற்பாடுகள்** |
| தேசிய அபிவிருத்தியினை ஏற்படுத்தலும் தேசிய ஒற்றுமைக்கு உரமூட்டலும் | |
| பொதுச் சொத்துகளை பாதுகாத்தல் | |
| தன்னால் தெரிவு செய்யப்படும் தொழிலை மனச்சாட்சியுடன் செய்தல் | |
| இயற்கையையும் இயற்கை வளங்களையும் பாதுகாத்தல் | |

**மனித உரிமைகளைப் பாதுகாப்பதில் பிரசையொருவருக்குள்ள கடமைகளும் பொறுப்புகளும்**

### குடும்ப அங்கத்தவரொருவர் எனும் வகையில் கடமைகளை நிறைவேற்றல்

ஒருவர் பிறந்ததும் அங்கத்துவம் பெறும் சமூக அலகு குடும்பமாகும். நாம் அனைவரும் ஒரு குடும்பத்தினது அங்கத்தவர்களாகவே வாழ்கின்றோம். குடும்ப அங்கத்தவர் எனும் வகையில் நீங்கள் அனுபவிக்கும் உரிமைகள் தொடர்பாக சற்றுச் சிந்தித்துப் பாருங்கள். உணவு, போசாக்கு, அன்பு, அரவணைப்பு, காப்பு, உறையுள், கல்வி என்பன குடும்பம் மூலம் நீங்கள் பெற்றுக் கொள்ளும் உரிமைகளுக்கான சில எடுத்துக்காட்டுகளாகும். இவை பெற்றோரால் நிறைவேற்றப்பட வேண்டிய கடமைகள் மற்றும் பொறுப்புகளாகக் கருதப்படுகின்றன. நீங்கள் அவற்றை அனுபவிப்பதற்கான வாய்ப்புகள் செய்து தரப்பட்டுள்ளன.

இவ்வுரிமைகளை அனுபவிப்பதற்காக நீங்கள் பெற்றோருக்கும் மூத்தோருக்கும் ஆற்ற வேண்டிய கடமைகளை செவ்வனே நிறைவேற்றுதல் வேண்டும். அப்பொழுது உங்களது உரிமைகள் பாதுகாக்கப்படுவதுடன் பெற்றோர் மற்றும் மூத்தோரது உரிமைகளும் பாதுகாக்கப்படும். இவை உங்களால் நிறைவேற்றப்பட வேண்டிய பண்பாட்டு ரீதியிலான கடமைகள் என்பதைக் கவனத்திற் கொண்டு செயற்படுதல் அவசியமாகும். இவ்வாறு தத்தமது கடமைகள், பொறுப்புகளை குடும்ப அங்கத்தவர்கள் எனும் வகையில் அந்நியோன்னியமான முறையில் நிறைவேற்றுவது குடும்ப அலகொன்றின் நிலையான தன்மைக்கு மட்டுமன்றி, அதன் முன்னேற்றத்திற்கும் காரணமாக அமையும். குடும்ப அங்கத்தவர்களிடையேயான தொடர்புகளை மேலும் வலுப்படுத்துவதற்கும் இந்நிலைமை ஏதுவாக அமையும்.

**பாடசாலை அங்கத்தவராக கடமைகளை நிறைவேற்றுதல்**

குடும்பத்தைப் போன்று ஒருவரது வாழ்க்கையைச் சிறந்த முறையில் கட்டியெழுப்பு வதற்கு பாடசாலையும் முக்கிய அங்கம் வகிக்கிறது. பாடசாலையின் அங்கத்தவர் என்ற வகையில் நீங்கள் அனுபவிக்கும் உரிமைகள் தொடர்பாகச் சற்று சிந்தித்துப் பாருங்கள்.

கல்வி வசதிகளை உங்களுக்கு இலவசமாக வழங்கும் பொருட்டு அரசு அதிகள விலான நிதியைச் செலவிடுவது இங்கு கவனத்திற்கொள்ளப்படவேண்டிய ஒரு முக்கிய அம்சமாகும். கல்வியைப் பெற்றுக் கொடுத்தல், உங்கள் திறமைகளை விருத்தி செய்தல், நற்பிரசைகளாக உங்களை சமூகத்திற்கு அறிமுகப்படுத்தல் போன்றன பாடசாலைகள் மூலம் உங்களுக்கு ஆற்றப்படும் சேவைகளாகும். மாறாக, நீங்கள் பாடசாலைக்கு ஆற்ற வேண்டிய கடமைகளும் உள்ளன. கற்றல் செயற்பாடுகளை சிறந்த முறையில் மேற்கொள்ளல், ஆசிரியர்களுக்குக் கீழ்படிதல், ஒழுக்கம் பேணல், பாடசாலைச் சட்டதிட்டங்கள் மற்றும் சம்பிரதாயங்களைப் பாதுகாத்தல், பாடசாலை வளங்களைப் பாதுகாத்தல் என்பவற்றுடன் அவற்றை உரிய முறையில் பயன்படுத்திக் கொள்ளல் ஆகியன உங்களால் பாடசாலைக்கு ஆற்றப்பட வேண்டிய கடமைகளாகும்.

பாடசாலை மாணவர் என்ற வகையில் உங்களுக்குரிய உரிமைகளைச் சிறந்த முறையில் பெற்றுக் கொள்ளல் உங்கள் எதிர்கால வாழ்க்கை சிறப்புற அமைவதற்கு ஏதுவாக அமையும். உரிமைகளை அனுபவிப்பதுடன் உரிமைகளுக்குரிய கடமைகளையும் பொறுப்புகளையும் செவ்வனே நிறைவேற்றுதல் உங்கள் கௌரவமும் மதிப்பும் பாதுகாக்கப்படுவதற்கு வழிகோலும்.

**உயர் கல்வி நிறுவனத்தின் அங்கத்தவராக கடமைகளை நிறைவேற்றுதல்**

நீங்கள் உயர் கல்வியைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு ஒரு கல்வி நிறுவனமொன்றில் இணைகையில் நற்பிரசை எனும் வகையில் உரிமைகளை அனுபவிப்பதுடன், தமது

கடமைகளையும் பொறுப்புகளையும் நிறைவேற்றுவதிலும் கவனம் செலுத்துதல் வேண்டும்.

உயர் கல்வி நிறுவனத்தின் மாணவராக தமது உரிமைகளை அனுபவிப்பதுடன், ஏனையோரது உரிமைகளைப் பாதுகாக்கும் வகையில் செயற்படுவது தொடர்பாகவும் கவனம் செலுத்துதல் முக்கியம். இவ்வகையில், கற்றல் செயற்பாடுகளில் சிறப்பாக ஈடுபட்டு சமூகத்திற்கும் நாட்டிற்கும் சிறந்த ஒரு நற்பிரசையாகப் பிரவேசிக்க வேண்டுமென்ற உறுதியான இலட்சியம் உங்களிடம் இருக்க வேண்டும். ஒருவர் உயர் கல்வி நிறுவனத்தின் ஒரு மாணவராக தனது வாழ்க்கையில் செலவிடும் காலம் மிக முக்கியமான காலப் பகுதியாகும். இதனால் நீங்கள் கல்வி கற்கும் நிறுவனத்திற்கு நற்பெயரைப் பெற்றுக்கொடுப்பது உங்கள் கடமையாகும். இவ்வகையில் சிறந்த முறையில் கல்வியை நிறைவு செய்தலானது, நாடு உங்கள் மீது கொண்டுள்ள எதிர்பார்ப்பை நிறைவேற்ற வழி வகுக்கும்.

**தொழில் புரிகையில் நிறைவேற்றப்பட வேண்டிய கடமைகள்**

கல்வியை நிறைவு செய்ததன் பின்னர், உங்கள் கல்வி அல்லது தொழிற் தகைமைகளுக்கு ஏற்ப எதிர்காலத்தில் தொழில் புரிவதற்கான சந்தர்ப்பம் உங்களுக்கு கிடைக்கும். நீங்கள் எந்தத் தொழிலில் ஈடுபடினும், உங்கள் தொழிலில் முழுமையான உழைப்பை வழங்குதல், சமூகத்திற்கும் நாட்டுக்கும் தொழில் ரீதியாகச் சேவை புரிதல் உங்கள் கடமையாகும். எந்தத் தொழிலாக இருந்தாலும் அதன் சேவையானது சென்றடைவது சமூகத்திற்கே. நீங்கள் செய்யும் தொழிலை உண்மையாகவும் நேர்மையாகவும் செய்தல் சமூகத்தின் வளர்ச்சிக்கும் நாட்டின் வளர்ச்சிக்கும் வழிவகுக்கும். உங்களிடமிருந்து சேவையைப் பெற்றுக் கொள்ளும் நபர்களுக்காக அதிகபட்ச சேவையை வழங்குதல் உங்களது நோக்கமாக இருத்தல் வேண்டும்.

நீங்கள் செய்யும் தொழிலின் மூலம் அதி கூடிய சேவையை வழங்குதல் உங்கள் சேவை மதிப்புக்கும் வரவேற்பிற்கும் காரணமாக அமையும். நாட்டின் மூலம் உங்களுக்கு கிடைக்கும் சேவைகளை விட அதிகமான சேவைகளை நீங்கள் நாட்டிற்கு வழங்குவதற்கு உறுதி பூணுங்கள்.

**செயற்பாடு 3 - 12**

- பாடசாலைச் சமூகத்தின் அங்கத்தவர் என்ற வகையில் ''உங்களது உரிமைகளும் உங்களால் நிறைவேற்றப்பட வேண்டிய கடமை களும்'' எனும் தலைப்பில் பாடசாலை சுவர் பத்திரிகைக்கு ஆக்கமொன்று வரைக.

# 4 சுற்றாடற் பிரச்சினையும் பேண்தகு அபிவிருத்தியும்

**அறிமுகம்**

இதுவரையில் கண்டறியப்பட்ட தகவல்களின் அடிப்படையில் உயிர்வாழக் கூடிய ஒரேயொரு கோள் புவி ஆகும். ஞாயிற்றுத் தொகுதியில் அதன் அமைவிடம், புவியியல் ரீதியான மற்றும் உயிரியல் ரீதியான பரிணாமம் உயிர்களின் உருவாக்கத்திற்கு ஏதுவாகியுள்ளது. வளிக்கோளம், நீர்க்கோளம் மற்றும் கற்கோளம் என்பவற்றின் சேர்க்கையால் உருவாகியுள்ள புவியின் உயிர்க்கோளத்தில் தாவரங்களும் விலங்குகளும் வாழ்வதற்கான உகந்த சூழல் காணப்படுகிறது. இந்த அத்தியாயத்தினைக் கற்பதன்மூலம் உங்களால், சூழல், சூழற்றொகுதியிலுள்ள கூறுகள், சூழற் பிரச்சினைகள், அபிவிருத்திபற்றிய எண்ணக்கரு, பேண்தகு அபிவிருத்தி, பேண்தகு அபிவிருத்தியை ஏற்படுத்துவதில் அரசினதும் சமூகத்தினதும் பங்களிப்பு என்பவற்றை அறிந்து கொள்ள இயலுமாக இருக்கும்.

சமகாலத்தில் சூழல் தொடர்பாக அதிக கவனம் செலுத்தப்படுவதற்கான காரணம், மனிதனால் புவி பல்வேறு அச்சுறுத்தல்களுக்கு முகம் கொடுப்பதனால் ஆகும். ஆதிகால மனிதன் சூழலுடன் சுமுகமான தொடர்பைக் கொண்டிருந்தமையாலும் அவன் சூழலுக்குக் குறைந்தளவு செல்வாக்கைச் செலுத்தியமையினாலும் சூழல் மாசடைதல் தவிர்க்கப்பட்டது. எனவே, சூழல் தொடர்பான பொருள் விளக்கத்தையும் அதன் கூறுகளையும் நன்கு விளங்கிக் கொள்ளுதல் அவசியமாகின்றது.

## சூழல் தொடர்பான கருத்துகளும் வரைவிலக்கணங்களும்

- நாம் புவியின் ஓர் அங்கமாவதுடன் அது எம்மில் ஒரு பகுதியாகும்.
- மணம் வீசும் மலர்கள் எமது சகோதரர்கள் ஆவர்.
- மான்கள், குதிரைகள், கழுகுகள் எமது சகோதரர்கள் ஆவர்.
- குதிரையினதும் மனிதனதும் உடல் வெப்பம் ஆகிய அனைத்தும் உரிமையாவது ஒரே குடும்பத்தின் அங்கத்தினருக்கே ஆகும்.

(சியாட்டல் பிரகடனம் 1954)

உயிரி ஒன்றினைச் சூழவுள்ள பௌதீக, இரசாயன மற்றும் உயிரியல் நிலைமைகள் சூழலாகும்.

மைக்கல் அல்ப், சூழல் கலைக்களஞ்சியம் -1993

சூழல் என்பது, உயிர்களின் இருப்பில் பாதிப்புச் செலுத்தும் வெளிவாரி நிலைமைகளின் தொகுப்பாகும்.

கெரன் ஜோன்ஸ், சூழலியல் கலைக்களஞ்சியம்- 1990

சூழல் என்பது உயிர் ஒன்றினைச் சூழவுள்ள பௌதீக, இரசாயன, உயிரியல் நிலையாகும்.

சூழல் அகராதி

ஒருவரது சூழல் என்பது அவரது சுற்றுப்புறமாகும். அதே போல், தாவரங்கள் மற்றும் விலங்குகளது சூழலும் சுற்றுப்புறத்தினால் ஆனதாகும்.

மனிதனும் சூழலும் - 1998

மேற்படி வரைவிலக்கணங்களுக்கு அமைவாக சூழல் என்பது உயிருள்ள, உயிரற்ற கூறுகளின் தொகுதியாகும் என்பது புலனாகின்றது. இதனடிப்படையில் தாவர வர்க்கங்களும் உயிருள்ள, உயிரற்ற அனைத்தும் சூழலுக்குற்பட்டவையாக அமைகின்றன. இவை ஒவ்வொன்றுக்குமிடையில் பல்வேறு சிக்கலான இடைத் தொடர்புகள் காணப்படுகின்றன. மேற்படி இடைத் தொடர்புகளின் மூலம் சூழலின் இருப்பும் செயற்பாடுகளும் இடம் பெறுகின்றன.

**செயற்பாடு 4 - 1**



- சூழலைப் பொருள் விளக்கம் செய்வதற்காக பொது வரைவிலக்கணமொன்றைக் கட்டியெழுப்புக.
- சூழல் தொடர்பில் முன்வைக்கப்பட்டுள்ள வரைவிலக்கணங்களின் பட்டியல் ஒன்றைத் தயாரிக்குக.

## சூழல் தொகுதியில் உள்ளடங்கியுள்ள கூறுகள்

**உயிரற்ற கூறுகள்**

உயிரற்ற சூழலின் கூறுகளாக வளிக்கோளம், நீர்க்கோளம், கற்கோளம் என்பன காணப்படுகின்றன. புவியிலுள்ள வளிக்கோளமானது, காலநிலை, பாறைகள், மண், தரைத்தோற்ற அம்சங்கள், சமுத்திரங்கள் மற்றும் நீர்நிலைகள் ஆகியவற்றைக் கொண்டது. இவ் அனைத்துக் கூறுகளும் புவியிலுள்ள தாவரங்களுடனும் உயிர்களுடனும் பல்வேறு வழிகளில் தொடர்புபடுகின்றன. இதன் உயிரற்ற கூறுகளில் உயிர்த் தொகுதியின் மீது தாக்கம் செலுத்தும் பௌதீக மற்றும் இரசாயன காரணிகள் பல உண்டு. அவை உயிருள்ள மற்றும் உயிரற்ற கூறுகளுடன் தொடர்பு கொண்டு விளங்குகின்றன. உதாரணமாக, சூரியஒளி, வெப்பநிலை, மழைவீழ்ச்சி, உவர்த் தன்மை, அமிலத் தன்மை மற்றும் மூலத் தன்மையின் (pH) அளவு போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**உயிர்க் கூறுகள்**

மனிதன் உட்பட அனைத்து உயிரினங்களும் தாவரங்களும் நீர் வாழ் உயிரினங்களும் கொண்ட மிகவும் மென்மையான பாகம் உயிரியற் சூழலில் உள்ளடங்குகின்றது. சூழற் தொகுதியில் உயிரிகளுக்குத் தேவையான அடிப்படை உணவை உற்பத்தி செய்யும் செயன்முறை முதல் நிலை உற்பத்தியாகக் கொள்ளப்படுகிறது.

**சமூகச் சூழல்**

சமூகச் சூழல் என்பது பௌதீகச் சூழலைச் சாராததாகும். சமூகச் சூழலான பௌதீகக் கட்டமைப்பில் பல்லினத் தன்மை, சமயங்கள், சாதிகள், மரபுரிமைகள், சம்பிரதாயங்கள், உரிமைகள், கடமைகள், பொறுப்புக் கூறல், வகைகூறல், நாளாந்த பழக்கவழக்கங்கள் போன்றன உள்ளடங்குகின்றன. இவை மனிதனது தலையீட்டினால் கட்டியெழுப்பப்பட்டவையாகும்.

சூழல் என்பது நாம் வாழும் சுற்றுப் புறமாகும். பண்டைய கிரேக்க நாட்டினர் சூழலை ஒயிகஸ் (Oikes) எனக் குறிப்பிட்டதுடன், தாம் வாழும் அயற் சூழலானது அனைத்து உயிரிகள், அவற்றுக்கிடையே நிலவுகின்ற இடைத் தொடர்புகள், அவற்றின் உயிரியற் செயற்பாடுகள் போன்றவற்றை உள்ளடக்கியதாகுமெனவும் குறிப்பிட்டனர்.

இவ்வாறு சூழலைப் பல்வேறு விதமாக வகைப்படுத்த முடியும். மனிதனால் கட்டியெழுப்பப்பட்டுள்ள சூழலைச் '**சமூகச் சூழல்**' எனவும் பௌதீகச் சூழலை, '**உயிரியற் சூழல்**' மற்றும் '**மானிடச் சூழல்**' எனவும் கூறலாம்.

## இயற்கைச் சூழல்

புவியில் காணப்படுகின்ற உயிருள்ள, உயிரற்ற அனைத்தும் இயற்கைச் சூழலுக் குரியனவாகின்றன. இவை மனிதனது செல்வாக்கின்றி இயற்கைத் தொகுதிகளாக இயங்குகின்றன. தாவரங்கள், விலங்குகள், பறவைகள், மண், நீர், வளி, காலநிலை, சக்தி, ஒளி போன்றன புவியின் இயற்கை அம்சங்களாகும்.

**இயற்கைச் சூழலுக்கு உரியவைகள்**


உரு 4.1 காடுகள்


உரு 4.2 மலைத் தொடர்கள்


உரு 4.3 விலங்குகள்


உரு 4.4 தாவரங்கள்


உரு 4.5 பறவைகள்



உரு 4.6 மண்ணின் குறுக்கு வெட்டுமுகம்



உரு 4.6 நதி



உரு 4.8 சூரிய ஒளி

## இயற்கைச் சூழலுக்குரிய நிகழ்வுகள்




உரு 4.9 காபன் வட்டம்




உரு 4.10 நீரியல் வட்டம்




உரு 4.11 கனிய வட்டம்



உரு 4.12 உணவு வலை

மானிட இனத்தினதும் உலக இருப்புக்கும் மேற்படி சூழற் தொகுதிகளின் ஒன்றிணைந்த செயற்பாடுகள் அவசியமாகின்றன.

## சூழலும் மனிதனும்

மனிதன் இயற்கையின் ஓர் அங்கமாவான். மனிதன் சூழலின் உள்வாரியான அங்கமாகவும் உள்ளான். பௌதீகச் சூழல் மூலம் தோன்றிய உயிரியற் சூழலின் சிறப்பான அங்கமாக மனிதன் கருதப்படுகின்றான். எனவே, மனிதனது இருப்பு சூழலினாலேயே உறுதிப்படுத்தப்படுகின்றது. மனிதன் தனது சிந்தனைகளையும் ஆற்றல்களையும் நடைமுறை உலகில் செயற்படுத்துவதன் மூலம் சூழலையும் மாற்றியமைக்க முனைகிறான். இதனால் இயற்கைச் சூழலின் சமநிலைக்குப் பாரிய அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளது. சூழலின் இருப்பு மனித இருப்புக்குக் காரணமாவதால் சூழலைப் பாதுகாப்பது அவசியமாகும்.

## சூழலிருந்து கிடைக்கும் சேவைகள்

### வாழ்க்கைக்கு உதவும் சேவைகள் ( Life support Services )

இயற்கையாகக் கிடைக்கும் சூரிய ஒளி, காற்று, நீர் போன்றன இதனுள் அடங்கும். இவை உயிரிகளின் இருப்புக்கு அத்தியாவசியமான சேவைகளை ஆற்றுகின்றன.

### பொருளாதார உதவிச் சேவைகள் (Economic Support Service)

மனித வாழ்க்கைக்குத் தேவையான மூலப் பொருட்களும், சக்தியும் இதனுள் அடங்கு கின்றன. மூலப் பொருட்களாக நிலம், கனிய வளங்கள், இரசாயனப் பொருட்கள், தாவரங்கள், விலங்குகள், உணவுகள் ஆகியனவும் சக்திகளாக சூரிய சக்தி, உயிர்ச் சுவட்டு எரிபொருள், உயிரியல் வாயு, புவி வெப்பம், நீர் மின்சாரம், காற்று போன்றனவும் பொருளாதார உதவிச் சேவைகளில் அடங்குகின்றன. மனிதன் தனது தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள முனைகையில், இவற்றின் மீதே அதிகளவு தாக்கத்தைச் செலுத்துகிறான்.

### கழிவு உறிஞ்சல் சேவைகள் (Garbage Absorb Service)

அயற் சூழலில் கிடைக்கும் முக்கியமான சேவைகளில் இதுவும் ஒன்று. விலங்குகளது வாழ்க்கையின் பல்வேறு செயற்பாடுகள் மற்றும் மனிதனது பொருளாதார நடவடிக்கைகள் மூலம் சூழலில் சேர்க்கப்படும் கழிவுப் பொருட்கள் சூழல் மூலம் அகத்துறிஞ்சப்படுதல் இதன் மூலம் இடம் பெறும். எனினும் சூழலினால் தாங்க முடியாத அளவுக்கு ஒன்று சேரும் கழிவுப் பொருட்களினால் அதன் அகத்துறிஞ்சும் சக்தி குறைவடைகின்றது. இதனால் சூழல் மூலம் தீமையான விளைவுகள் ஏற்படுத்தப்படுகின்றது. எனவே, மனிதனது வாழ்க்கையில் சூழல் அத்தியாவசி

யமானதோர் அங்கமாகவும் இன்றியமையாததொன்றாகவும் விளங்குகிறது. எனவே, தன்னையும் சூழலின் ஓர் அங்கமெனக் கருதி, கழிவகற்றும் போது சூழலின் இருப்புக்குப் பங்கமேற்படாத வகையில் எமது பொருளாதாரச் செயற்பாடுகளை மேற் கொள்ளல் அவசியமாகின்றது.

### மனிதன் சூழலை மாற்றுவதற்கு முனைதல்

மனித நாகரிகத்தில் ஆதி மனிதன் தனது அயற் சூழலை மாற்றியமைக்கும் ஆற்றலை வரையறுக்கப்பட்ட அளவிலேயே கொண்டிருந்தான். சூழலில் வாழ்ந்து கொண்டே அச்சூழலால் தாங்கிக் கொள்ளக் கூடிய அளவு மாற்றங்களை மட்டுமே மேற்கொண்டு ஆதி மனிதன் வாழ்ந்து வந்தான். அக்கால மனிதன் கொண்டிருந்த எளிமையான வாழ்க்கை முறையே இதற்கு அடிப்படைக் காரணமாகியது. எனினும், தற்கால மனிதன் கொண்டுள்ள அறிவு, தொழில்நுட்ப தேர்ச்சிகள் சூழலிலுள்ள வளங்களை அபரிமிதமாக நுகர்வதற்குக் காரணமாகிறது. மனிதனானவன், புவிச் சூழலில் வாழுகின்ற உயிர்களில் 0.5% மட்டுமே ஆயினும், இயற்கைச் சூழலுக்கு அவனால் ஏற்படுத்தப்படும் தாக்கம் பாரிய அளவாகக் காணப்படுகிறது.

மனித பரிணாமத்துடன் மனிதனானவன் மனிதச் சூழல் மூலம் பௌதீகச் சூழல் மற்றும் உயிரியற் சூழலுக்கு பாரிய தாக்கத்தை (அச்சுறுத்தலை) ஏற்படுத்தியுள்ளான். ஆரம்பத்தில் சூழலில் ஏற்படுத்திய மாற்றங்கள் அளவில் சிறியனவாகவும் இலகுவில் தாங்கிக் கொள்ளக் கூடியனவாகவும் இருந்தன. ஆகவே சூழற் தொகுதியின் சமநிலைக்குப் பாரிய அச்சுறுத்தல்கள் ஏற்படவில்லை.

20 ஆம் நூற்றாண்டின் பின்னரைப்பகுதியில் உலகில் அதிகளவிலான சனத் தொகைப் பெருக்கம் ஏற்பட்டது. அத்துடன், மனித வளத்தின் வாழ்கைத் தரத்தைப் பண்பு ரீதியில் அபிவிருத்தி செய்வதற்காகவும் மனித வளம் விருத்தி செய்யப்பட்டது. இவை காரணமாக சூழலில் பல மாற்றங்கள் நிகழலாயின. சில பிரதேசங்களில் இயற்கைச் சமநிலையில் மாற்றங்கள் ஏற்பட்டன. அதன் விளைவாக உலகச் சமநிலை பெரும் சவாலை எதிர் கொண்டது. 2012 ஆம் ஆண்டில் உலக சனத்தொகை 07 பில்லியனை அண்மித்ததுடன், உலக சனத்தொகை வளர்ச்சி வேகமும் அதிகரித்தது. இதனால், மனிதன் தனது பொருளாதாரச் செயற்பாடுகளை முன்னெடுக்கும் போது இயற்கை வளங்களையும் கனிய வளங்களையும் எல்லையின்றிப் பயன்படுத்தத் தொடங்கினான். தனது தேவைகளுக்காகக் குடியேற்றங்களைத் தாபித்தல், விவசாய மயமாக்கம், கைத்தொழில் மயமாக்கம், நகர மயமாக்கம், உட்கட்டமைப்பு வசதிகள் மற்றும் ஏனைய தேவைகளின் பொருட்டு பௌதீகச் சூழலை வரையரையின்றி மனிதன் பயன்படுத்தத் தொடங்கினான். இவற்றின் பயனாக இன்று பல சூழற் பாதிப்புகள் ஏற்பட்டுள்ளன.



உரு 4.13 - நீர்வளம் மாசடைந்த ஒரு சந்தர்ப்பம்

## சுற்றாடற் பிரச்சினைகள்

இயற்கையாக அமைந்த புவிச் சூழலின் அழிவுக்குக் காரணமாகும் அனைத்து விதமான மாசடையும் நிலைமைகளும் சுற்றாடற் பிரச்சினைகளாகக் கொள்ளப்படும். இதற்கு இயற்கைச் செயற்பாடுகளும் மனிதச் செயற்பாடுகளும் காரணமாகின்றன. இவ்விரு செயற்பாடுகளாலும் சூழலின் சமநிலை பாதிக்கப்படுகின்றது. இதனால் ஏற்படும் தீங்குகள் சுற்றாடற் பிரச்சினைகள் என அழைக்கப்படுகின்றன. இயற்கைச் செயற்பாடுகள் மூலம் ஆற்றப்படும் சுற்றாடற் பிரச்சினைகள் குறுங்காலத் தாக்கங்களை ஏற்படுத்தினும், அவை உயிரியல் மற்றும் பௌதீகச் சூழல் செயற்பாட்டின் மூலம் கட்டுப்படுத்தப்படுகிறது. எனினும், மனிதனால் பௌதீகச் சூழலில் ஏற்படுத்தப்படும் மாற்றங்கள் குறுங்காலப் பிரச்சினைகளாக இல்லாத காரணத்தால் அவற்றைக் கட்டுப்படுத்த முடிவதில்லை. இதனால், சூழலானது பாரிய தாக்கங்களுக்கு உள்ளாகியுள்ளது.

புவிச் சூழல் தொகுதியில் இடம்பெறும் சுற்றாடற் பிரச்சினைகள் நீர்க் கோளம், வளிக்கோளம், கற்கோளம் மற்றும் உயிர்க்கோளம் சார்ந்த பிரச்சினைகளாக அடையாளப்படுத்தப்படுகின்றன.

## சுற்றாடல் பிரச்சினைகளினால் ஏற்படும் சமூகப் பாதிப்புகள்

மனிதன் தனது தேவைகளுக்காக சூழலில் உள்ள வளங்களை வரையரையின்றியும் முறையற்ற விதத்திலும் பயன்படுத்துவதனால் பல்வேறு சூழற் பிரச்சினைகள் தோன்றுகின்றன. இதனால் உலகில் அநேகமான நாடுகள் பல பிரச்சினைகளை எதிர்கொண்டுள்ளன. உணவு மற்றும் போசாக்குப் பிரச்சினைகள், நோய்கள் மற்றும் சுகாதாரப் பிரச்சினைகள், விபத்துகளால் ஏற்படும் உயிர் மற்றும் சொத்திழப்புகள், சமூகப் பொருளாதார சீரழிவுகள் என்பன இதில் அடங்குகின்றன.

சூழல் பிரச்சினை ஏற்படுவதற்கான முக்கிய காரணங்களுள் ஒன்றாக வளங்கள் அபரிமிதமாக நுகரப்படுதலைக் குறிப்பிடலாம். அபிவிருத்தியடைந்த நாடுகள் வளங்களை அதிகளவில் பயன்படுத்துவதன் காரணமாக அபிவிருத்தியடைந்து வரும் நாடுகள் பாதிக்கப்பட்டுள்ளன. மேலும் அதிகளவு சூழற் பிரச்சினைகளை எதிர்கொண்டிருப்பதும் அபிவிருத்தியடைந்து வரும் நாடுகளே. இந்நாடுகளின் வளங்களை அபிவிருத்தியடைந்த நாடுகள் தம் தேவைகளுக்குப் பயன்படுத்துகின்றன. உதாரணமாக, ஆபிரிக்கா, தென்அமெரிக்கா, ஆசியாக் கண்டத்தில் அமைந்துள்ள நாடுகளினது இயற்கை மற்றும் கனிய வளங்கள் அதிகளவில் அபிவிருத்தியடைந்த நாடுகளின் தேவைகளுக்குப் பயன்படுத்தப்படுகின்றன. இதன் விளைவாக வரையறையற்ற வள நுகர்வும் வியாபாரமும் இடம்பெறுவதால் வளங்கள் தேய்வுறுகின்றன. மேற்படி நாடுகளது வளங்களுக்கு நியாயமான விலை கிடைக்காமையால் அந்நாடுகளில் வறுமை நிலையும் அதிகரிக்கின்றது. மேலும், காடழிப்பு, முறையற்ற வளப்பாவனை, பாதுகாப்பற்ற பயன்பாடு போன்றன காரணமாகவும் சூழற் பிரச்சினைகள் மேலும் உக்கிரமடைந்துள்ளன. இதற்கமைய, சூழல் பிரச்சினையானது, மனிதனது வறுமை நிலையை அடிப்படையாகக் கொண்டு ஏற்படும் சமூகப் பிணக்குகளை மேலும் தீவிரமடையச் செய்துள்ளதுடன், சூழல் மற்றும் சமூகத் தாக்கங்கள் பலவற்றையும் ஏற்படுத்தியுள்ளது.

**செயற்பாடு 4 - 2**



- சூழற் பிரச்சினைகள் ஏற்படுவதில் பாதிப்புச் செலுத்தும் இயற்கைக் காரணிகளை விளக்குக.
- இயற்கைக் காரணிகளினால் ஏற்படும் சூழற் பிரச்சினைகளின் பாதிப்புகளைக் குறிப்பிடுக.
- சூழற் பிரச்சினைகளினால் ஏற்படும் சமூகப் பாதிப்புகள் குறித்து பத்திரிகைக்கு கட்டுரை ஒன்று வரைக.

## இயற்கைக் காரணிகளினால் பௌதீகச் சூழலுக்கு ஏற்படும் பாதிப்புகள்

புவிக் கோளத்தின் இயற்கைச் சமநிலையில் பாதிப்புச் செலுத்தும் காரணிகள் மூலமும் சூழற் பிரச்சினைகள் ஏற்படுகின்றன. உதாரணமாக, புவியதிர்வு, நிலச்சரிவு, எரிமலை வெடிப்பு, காட்டுத் தீ, பனிமலைச் சரிவு, வெள்ளப்பெருக்கு, வறட்சி, சூறாவளி, சுனாமி போன்றவற்றைக் குறிப்பிடலாம்.



உரு 4.14 புவியதிர்வு



உரு 4.15 சுனாமி

மேற்படி இயற்கைக் காரணிகளின் விளைவாக ஏற்படும் சூழற் பிரச்சினைகள் குறுங்காலத்தில் அழிவுகளை ஏற்படுத்தக்கூடியவை. உதாரணமாக, சூறாவளியினால் இயற்கைச் சூழலுக்கு மட்டுமன்றி சொத்துகளுக்கும் பாரிய பாதிப்புகள் ஏற்படுகின்றன. எனினும், சூறாவளியின் சக்தி முடிவடைந்ததன் பின்னர் அதன் தாக்கம் நிறைவடையும். இதனால் பௌதீக வளங்கள் குறுகிய காலத்தில் மீண்டும் வழமை நிலைக்கு மீளவும் திரும்புகின்றன. எவ்வாறாயினும் அழிவடைந்த சொத்துகளைப் புதிதாக மீளக் கட்டியெழுப்ப வேண்டிய நிலையும் ஏற்படும்.

**செயற்பாடு 4 - 3**



இயற்கைச் செயற்பாட்டினால் நடைபெறுகின்ற சூழற் பிரச்சினைகளை உள்ளடக்கிய பட்டியல் ஒன்றைத் தயாரிக்குக.

### மனிதச் செயற்பாடுகளினால் ஏற்படும் சுற்றாடற் பிரச்சினைகள்

மனிதச் செயற்பாடுகள் இன்று இயற்கைச் சூழற் தொகுதியில் பாரிய சுற்றாடற் பிரச்சினைகளை ஏற்படுத்தியுள்ளன. இதன் காரணமாக, புவி வெப்பமடைதல், வானிலையில் பாரிய மாற்றங்கள், உயிர்ப் பல்வகைமையின் பாதிப்பு, வளி மற்றும் நீர் அசுத்தமடைதல், மண் வளமற்றுப் போதல், அமில மழை பொழிதல், ஓசோன் படலம் பாதிக்கப்படல், பாலைவனமாதல், உவர் நீராதல், நோய்களும் ஆட்கொல்லி நோய்களும் பரவுதல், பனிக்கட்டிகள் உருகுதல், சமுத்திர நீர் மட்டம் உயர்வடைதல் போன்ற பல பிரச்சினைகள் ஏற்பட்டுள்ளன. உண்மையில் இவற்றைச் சூழற் பிரச்சினைகளாகக் குறிப்பிட்டாலும், மனித வர்க்கத்தின் பிரச்சினைகளாகவும் இவற்றைக் கொள்ள முடியும். சுற்றாடல் பிரச்சினைகள் ஏற்படுவதில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகளைப் பின்வரும் உதாரணங்கள் மூலம் காட்டலாம்.

### நீர் மாசடைதல்

பொருட்களை கரைசலுக்குட்படுத்தக் கூடிய ஆற்றல் நீருக்குள்ள ஒரு விஷேட இயல்பாகும். இதனால் நீர் இலகுவில் மாசடைதலுக்குட்படுகின்றது. கடந்த 125 ஆண்டுகளில் மனிதச் செயற்பாடுகள் காரணமாக நீர் மாசடைதல் மிகவும் துரிதமடைந்துள்ளது. சனத்தொகை அதிகரிப்பு, மலம் போன்ற மனிதக் கழிவுகள் சுகாதாரத்திற்கு பாதிப்பு ஏற்படும் வகையில் வெளியேற்றப்படல், காடழிப்பு, விவசாய நடவடிக்கைகள் போன்றன காரணமாக நீர் மாசடைகின்றது. இதனால், உலகம் பூராகவும் உள்ள மக்களுள் 24% பேர் சுத்தமான நீரைப் பெற முடியாதுள்ளனர்.

**சுத்தமான நீர்**

*சுத்தமான நீர் என்பது அமிலத் தன்மை அல்லது காரத்தன்மை ஆகிய இரண்டுமற்ற தூய்மையான நீராகும். சுத்தமான நீரின் pH பெருமானம் 7.0% ஆகும். வளியில் உள்ள காபனீரொட்சைட்டுடன் தாக்கமுற்று நீர் அமிலத் தன்மையடைவதால் இன்று இயற்கைச் சூழலில் இருந்து தூய நீரைப்பெற்றுக் கொள்வதில் சிக்கல்கள் ஏற்பட்டுள்ளன.*

நீர் மாசடைதல் என்பது நீரில் இயற்கையாகக் காணப்படும் இயல்புகள் மாற்றமடைதல் ஆகும். அதாவது, நீரில் காணப்படும் பௌதீக இரசாயன மற்றும் உயிரியல் ரீதியான பண்புகள் மாற்றமடைவதாகும்.

### நீர் மாசடையும் சந்தர்ப்பங்கள்

- கைத்தொழில்கள் மூலம்

  கடதாசி, வர்ணப் பூச்சுகள், துணி வகைகள், தோல் பதனிடல், கனிய எண்ணெய், இறப்பர், உணவு போன்ற கைத்தொழில் உற்பத்திகள்.

- விவசாய நடவடிக்கைகள் மூலம்

  பசளைகள், களைக் கொல்லிகள், பூச்சிக் கொல்லிகள், கிருமி நாசினிகள், பங்கசு கொல்லிகள் போன்றன.

- இயற்கைக் காரணிகள் மூலம்

  எரிமலை வெடிப்பு, புவியதிர்ச்சி, சுனாமி, நிலச்சரிவு, நிலக்கீழ் கனியங்களின் செயற்பாடுகள்.

- வீட்டுக் கழிவுகள் மூலமும் குப்பைகள் மற்றும் மனிதக் கழிவுகள் மூலமும் அசுத்தமடைதல்.
- வாகனக் கழிவுகள்
- அமில மழை பொழிதல்

- நீரில் போசணைப் பதார்த்தங்கள் சேருவதனால் அல்காக்கள், நீர்த்தாவரங்கள் பரவலடைதல்.
- இரத்தினக் கல் அகழ்வு, சுரங்கமகழ்வு, வீடமைப்பு, நிலக்கீழ் நீர் மற்றும் குழாய்க் கிணறு அமைத்தல், செயற்கையான நீர்த் தேக்கங்களை அமைத்தல், நிலக்கரி அகழ்வு
- உவர் நீர் நன்னீருடன் கலத்தல்
- சமுத்திரங்களுக்கு அருகாமையில் அணுப்பரிசோதனைகளை மேற்கொள்ளல் மற்றும் இராணுவப் பயிற்சிகள் மூலம்

## நீர் மாசடைவதால் ஏற்படும் பிரச்சினைகள்

- *நீரியல் வட்டத்தின் செயற்பாடுகள் தடைப்படுதல்*
- *அசுத்தமடைந்த நீரைப் பருகுவதால் நோய்கள் பரவுதல்*
- *நீர் வாழ் அங்கிகள் அழிவடைதல்*
- *விவசாய நடவடிக்கைகள் பாதிப்படைதல்*
- *தாவர சாகியம் அழிவடைதல்*
- *அல்காக்கள் மற்றும் விரும்பத்தகாத தாவரங்கள் பரவலடைதல்*
- *சுற்றாடலின் எழில் பாதிப்படைதல்*
- *சுத்தமான நீரைப் பெற்றுக் கொள்ள அதிக செலவு ஏற்படுதல்*

## மனித செயற்பாடுகளின் விளைவாக கற்கோளத்திற்கு ஏற்படும் பாதிப்புகள்

*மனித தேவைகளுக்காக அநேகமான வளங்கள் கற்கோளத்தில் இருந்தே பெறப்படுகின்றன. கற்கோளம் என்பது, புவியின் வெளிப்புறத்தில் காணப்படும் வன்பாறைப்படலமாகும். இது பாறைகள், கனியங்கள், மண் ஆகியவற்றினாலானது. மனிதனது அனைத்துப் பொருளாதார நடவடிக்கைகளுக்காக இவற்றில் உள்ளடங் கியுள்ள வளங்கள் பயன்படுத்தப்படுகின்றன. இரும்புத்தாது, அலுமினியம், டைடேனியம், மக்னீசியம், ஈயம், வெள்ளி, பிளாட்டினம், யுரேனியம், இரசம் போன்ற அனைத்தும் இதில் உள்ளடங்கியுள்ளன. மனிதனது அனைத்துக் கைத்தொழில் உற்பத்திகளுக்காகவும் பயன்படும் கனியங்கள் இங்கு பெறப்படுவதுடன், இக்கனிய வகைகள் சமமற்றவகையில் பரவியுள்ளதனால் குறிப்பிட்ட சில நாடுகள் மட்டுமே இவற்றுக்கு உரித்துடையனவாக விளங்குகின்றன.*



உரு 4.16 காரீயம் அகழ்தல்



உரு 4.17 நிலக்கரி அகழ்தல்






4.18 உரு கனியங்கள் அகழ்தல்

மேற்படி கனிய வளங்கள் புவியின் மேற்பரப்பிலும் புவியின் உள்ளேயும் பரவலாகக் காணப்படுவதால் இவற்றை அகழும் போது கற்கோளத்திற்கு பல்வேறு பாதிப்புகள் ஏற்படுகின்றன.





உரு 4.19 கனியங்களை அகழும் போது ஏற்படும் பாதிப்புகள்

மேற்படி கனிய வளங்கள் உருவாவதற்கு நீண்ட காலம் எடுப்பதால் இவை தேய்வடையும் வளங்களாக உள்ளன. இதனால் இவற்றை சிக்கனமாகப் பயன்படுத்துதல் முக்கியமானது. கனிய வளங்களை அகழும் போது கற்கோள சூழற் தொகுதிக்கு குறைந்த பட்ச பாதிப்புகள் ஏற்படும் வகையிலேயே அவற்றை அகழ்தல் வேண்டும்.

**கற்கோளம் பாதிக்கப்படுவதால் ஏற்படும் விளைவுகள்**

- சுற்றாடலின் இயற்கை அழகு அழிவுறல்
- மண்வளம் குன்றுதல்
- தரிசு நிலம் உருவாகுதல்
- வெள்ளப் பெருக்கு ஏற்படல்
- நிலம் வளமற்றுப் போதல்
- காடுகளின் மூடு படை அழிவுறல்
- நோய்களும் ஆட்கொல்லி நோய்களும் பரவுதல்
- நிலக்கீழ் நீர் குறைதல்

**நிலப் பயன்பாடு தொடர்பில் ஏற்படுகின்ற பாதிப்புகளும் அவற்றின் மீதான மனிதச் செல்வாக்குகளும்**

இயற்கையாக அமைந்துள்ள நிலப்பரப்பில் மனிதத் தேவைகளுக்காக மாற்றங்களை ஏற்படுத்துதலே நிலப் பயன்பாடு என்பதனால் கருதப்படுகின்றது. நிலமானது மனிதனால் மாற்றத்திற்குட்படுத்தப்பட்டுள்ள விதத்தைப் பின்வரும் படங்கள் சுட்டிக்காட்டுகின்றன.



உரு 4.20 பெருந் தெருக்கள்



உரு 4.21 தொழிற்சாலைகள்



உரு 4.22 ஏனைய நடவடிக்கைகள்



உரு 4.23 செயற்கைச் சூழல்

மேற்படி நிலப்பயன்பாட்டின் விளைவாக சூழற் தொகுதியானது பல்வேறு பாதிப்புகளுக்கு உட்படுகின்றது.

**விவசாய நடவடிக்கைகளுக்காக காடுகளின் மூடுபடைகளை நீக்குதல்**

உலகின் மொத்த நிலப்பரப்பு 144.8 மில்லியன் சதுர கிலோ மீற்றர்கள் ஆகும். இதில் பயிர்ச்செய்கைக்கு உகந்த நிலம் 11% மட்டுமேயாகும். மொத்த நிலப்பரப்பில் பெரும் பகுதி மனித வாழ்க்கைக்கோ பொருளாதார நடவடிக்கைகளுக்கோ உகந்ததன்று. ஆனால், பயிர்ச்செய்கையின் பொருட்டு பாரியளவு நிலப்பரப்பு காடழிப்பின் மூலம் பெறப்பட்டுள்ளது. விவசாயத்திற்காக நிலத்தைத் தயார்படுத்தல், சக்தி வலுவின் தேவையைப் பூர்த்தி செய்தல், மரப்பலகை வியாபாரம், குடியேற்றங்களைத் தாபித்தல், கைத்தொழில் பேட்டைகளை அமைத்தல், கனியங்களை அகழ்தல், பாதைகளை அமைத்தல், அபிவிருத்திச் செயற்பாடுகள், செயற்கை நீர்த்தேக்கங்களை நிர்மாணித்தல் போன்றன காடழிப்பிற்கு பிரதான காரணங்களாக அமைந்துள்ளன. மிகப் பாரிய அளவில் காடழிப்பை மேற்கொள்ளும் நாடுகளுக்கு பின்வரும் நாடுகள் உதாரணங்களாக விளங்குகின்றன. ஐவரிகோஸ்டில் மொத்த வனப் பரப்பில் 85%, கொங்கோவில் 68% , பங்களாதேஷில் 95% , இலங்கையில் 78% மும் அழிவுக்குட்படுத்தப்பட்டுள்ளன.

**காடழிப்பினால் ஏற்படும் பாதிப்புகள்**

- வளிக்கோளத்தில் ஒட்சிசன் வழங்கலுக்கு தடை ஏற்படுவதுடன் காபனீரொட்சைட்டின் உறிஞ்சும் ஆற்றல் குறைவடைதல்
- நீர் மட்டம் குறைவடைதல்
- மண்ணின் ஈரப்பதன் குறைவடைதல்
- வெள்ளப் பெருக்கும் நிலச்சரிவும் அதிகரித்தல்
- மண்ணின் பௌதீக இயல்புகள் குன்றி மண் வளமற்றுப் போதல்
- உயிரிகளின் வாழிடம் அற்றுப்போதல்
- சுற்றாடலின் அழகு குறைவடைதல்
- தாவர, உணவு மற்றும் ஔடத வளங்கள் வரையறைக்குட்படுதல்
- மண்ணரிப்பு அதிகரித்தல்
- உயிர்ப் பல்வகைமை அழிவுறல்
- நீர் வட்டத்தின் செயற்பாட்டிற்கு தடங்கலேற்படுதல்

- நிலக்கீழ் நீரின் அளவு குறைதல்
- பாலைவனமாதல்
- புவி வெப்பமடைதல்

**செயற்பாடு 4 - 3**



- உயிர் வளங்களின் அழிவு மற்றும் அதனோடு தொடர்புடைய ஏனைய துறைகள் உள்ளடங்கிய தகவற் கோவை ஒன்றைத் தயாரிக்குக.
- வளங்களைப் பாதுகாப்பதற்கு மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகளை முன்வைக்குக.
- சூழல் நேய பண்பைக் கொண்டிருப்பதன் மூலம் பெற்றுக்கொள்ளக்கூடிய அனுபவங்களைப் பற்றிய மனப்பாங்குகளைக் கட்டியெழுப்புவதற்கான சந்தர்ப்பங்களை எழுதுக.
- சுற்றாடல் பிரச்சினைகளைக் குறைப்பதற்காக நற்பிரசை என்ற வகையில் நாம் நடந்து கொள்ள வேண்டிய விதம் பற்றி கருத்து தெரிவிக்குக.

### விவசாய நடவடிக்கைகளுக்காக இரசாயனங்களைப் பயன்படுத்துதல்

பசுமைப் புரட்சியினால் விவசாய நடவடிக்கைகள் நவீனமயப்படுத்தப்பட்டுள்ளன. இதன் மூலம் விளைச்சலை அதிகரித்துக் கொள்ளும் பொருட்டு பயன்படுத்தப்படும் இரசாயன வளமாக்கிகள், கிருமிநாசினிகள் போன்றவற்றின் மூலமும் சுற்றாடற் பிரச்சினைகள் தீவிரமடைந்துள்ளன. இதனால் சுதேச ரீதியாகக் காணப்பட்ட சூழல் நேய நிலைமைகள் மாற்றமடைந்துள்ளதுடன், நீர் மாசடைதலும் ஏற்பட்டுள்ளது. இதனால், பசுமைப் புரட்சியினால் அறிமுகப்படுத்தப்பட்ட அனேகமான வழிமுறைகள் சூழல் மாசடைதலையே ஏற்படுத்தியுள்ளன. இதனால், பூகோள வெப்பமடைதலானது 2010 ம் ஆண்டு ஆகும் போது 40% ஆக அதிகரித்துள்ளது. (மூலம்: சுற்றாடல் வளமுகாமைத்துவமும் நிலையான அபிவிருத்தியும், A.H தனபால) இதன் காரணமாக 1945 ஆம் ஆண்டு தொடக்கம் உலகின் வளமான நிலப்பரப்பில் 23% பாதிப்புக்கு உள்ளாகியுள்ளது.

## உக்காத கழிவுகளை நிலத்தில் வெளியேற்றுதல்

மனிதனது தொழில்நுட்ப முன்னேற்றத்துடன் இயற்கைச் சூழலின் வளங்களும் அதன் இயல்புகளும் மாற்றத்திற்குட்படுத்தப்பட்டு பிளாஸ்டிக் மற்றும் செயற்கைப் பொருட்கள், இலத்திரனியல் பொருட்கள் மற்றும் உபகரண உற்பத்திகள் மேற்கொள்ளப்படுகின்றன. இவை போட்டித் தன்மையுடனும் பல்வேறு

வடிவங்களிலும் சந்தைக்கு வருகின்றன. அவை குறுங்காலத்திலேயே காலாவதியான பொருட்களாக மாறுவதால் குப்பைகள் எனும் நிலையை அடைகின்றன. மேற்படி அனைத்தையும் சுற்றாடலின் இயற்கைச் செயற்பாட்டின் மூலம் உக்கச் செய்வது இயலாததாக உள்ளது. இவற்றை அழிப்பதை விட உற்பத்தி செய்யும் வேகம் அதிகரித்துக் காணப்படுவதால், இவை மேலும் மேலும் பௌதீகச் சூழலில் சேருகின்றன. இதன் மூலம் சுற்றாடற் செயற்பாட்டிற்கு பாதிப்பு ஏற்படுவதுடன், இதன் பக்க விளைவுகளாக புவியின் நீர், வளி ஆகியனவும் மாசடைகின்றன. இவற்றை மீள் சுழற்சிக்குட்படுத்துவதும் கடினமானதாகும்.

## கைத்தொழில் கழிவுகள்

மனிதனால் பொருட்களும், சேவைகளும் உற்பத்தி செய்யப்படும் போது அதன் பக்க விளைவுகளாக கைத்தொழில் கழிவுகள் சூழலில் விடுவிக்கப்படுகின்றன. கனிய எண்ணெய், கனியங்களின் பகுதிகள், உலோகம், அல்லுலோகப் பகுதிகள் இரசாயனப் பொருட்கள் போன்றன மாசடையத்தக்க கழிவுகளைப் படியச் செய்கின்றன. மேற்படி கைத்தொழில் கழிவுகளுள் சில, மீள் சுழற்சிக்கு உட்படுத்தக் கூடியனவாக இருப்பினும், அனேகமானவை அவ்வாறு செய்ய முடியாதனவாகும். இதனால் பல பிரச்சினைகள் தோன்றியுள்ளன. இவற்றுள் மிகவும் அபாயகரமானதாக அணு சக்திக் கழிவுகள் விளங்குகின்றன. இதிலடங்கியுள்ள கதிர் வீச்சுத் தன்மையுள்ள பொருட்களினால் பல்வேறு பிரச்சினைகள் தோற்றம் கண்டுள்ளன.



உரு 4.24 தொழிற்சாலைக் கழிவுகள்



உரு 4.25 அணுசக்திக் கழிவுகள்



4.26 உரு இரசாயனக் கழிவுகள்

**வளி மாசடைதல்**

வளிக் கோளத்தின் அமைவுச் சேர்க்கையில் ஏற்படும் மாற்றம் வாயு மாசடைதல் எனக் குறிப்பிடப்படுகிறது. கைத்தொழிற் புரட்சியினாலும், பசுமைப் புரட்சியினாலும் கண்டு பிடிக்கப்பட்ட புதிய உற்பத்திகளின் விளைவாக வளி மாசடைதலானது உருவானது. சிறப்பாக, மனிதன் வலுச்சக்தியாக உயிர்ச் சுவட்டு எரிபொருளைப் பயன்படுத்தத் தொடங்கியமை இதன் ஆரம்பமாகும். இதற்கு மேலதிகமாக கைத்தொழில்கள், காடழிப்பு, விவசாய நடவடிக்கைகள் மற்றும் போக்குவரத்து போன்ற துறைகள் வளி மாசடைதலில் மேலும் தாக்கங்களை ஏற்படுத்தியுள்ளன.

**வளி மாசடைதலும், பச்சை வீட்டு வாயுக்களை வெளியேற்றும் துறைகளும்**




வளிக்கோளத்தில் நைதரசன், ஒட்சிசன் மற்றும் ஆகன் ஆகிய வாயுக்கள் மூன்றும் 99.9% அடங்கியுள்ளன. மிகவும் சிறியளவில் காணப்படும் காபனீரொட்சைட், மீதேன், காபனொக்சைட், நைதரசனொட்சைட், குளோரோபுளோரோகாபன் (CFC) போன்றன ஓசோன் தாக்கத்தின் மூலம் வளிமாசடைதலில் செல்வாக்குச் செலுத்துகின்றன. இவற்றுள் அநேகமான வாயுக்கள் மனிதனால் மேற்கொள்ளப்படும் உற்பத்திகளின் பக்க விளைவுகளாகக் கருதப்படுகின்றன.

### இயற்கை முறையில் வளி மாசடைதல்


உரு 4.27 எரிமலை வெடிப்பு


உரு 4.28 காட்டுத் தீ


உரு 4.29 புழுதிப் புயல்

### செயற்கையான முறையில் வளி மாசடைதல்


உரு 4.30 கைத்தொழிற்சாலைகள்


உரு 4.31 வாகனப் போக்குவரத்துகள்


உரு 4.32 குப்பை கூளங்கள்


உரு 4.33 ஆகாய விமானப் பயன்பாடு


உரு 4.34 காடழிப்பு

### வளிமாசடைவதால் ஏற்படும் தீமைகள்

- புவி வெப்பமடைதல்
- ஓசோன் படலம் பாதிப்படைதல்
- அமில மழை பொழிதல்
- தூசுப்படை ஏற்படுதல்
- உயிர்ப் பல்வகைமையும், உயிர் உற்பத்திச் செயன் முறைகளும் அழிவடைதல்
- காலநிலையில் மாற்றங்கள் ஏற்படுதல்
- பனி மலைகள் உருகுதல்
- கடல் நீர் மட்டம் உயர்வடைதல்

- நோய்களும், ஆட்கொல்லி நோய்களும் பரவுதல்


உரு 4.35 ஓசோன் படலம் சிதைவடைதல்


உரு 4.36 அமில மழை


உரு 4.37 தூசுப் படலம்


உரு 4.38 வெள்ளப்பெருக்கு


உரு 4.39 வறட்சி


உரு 4.40 பனிமலை உருகுதல்


உரு 4.41 நோய்கள்

## காலநிலையில் ஏற்பட்டுள்ள பாதிப்புகள்

விவசாயம், கைத்தொழில், போக்குவரத்து போன்றவற்றினால் ஏற்பட்டுள்ள நவீன மயமாக்கம் காரணமாக வளிக்கோளத்தில் வெளியேற்றப்படும் பச்சை வீட்டு வாயுக் கள் மூலம் இயற்கையான பச்சை வீட்டுப் போர்வை பாரிய அளவில் மாற்றத்திற்கு உட்பட்டுள்ளது. மேற்படி பச்சைவீட்டு வாயுக்களின் வெளியேற்றம் அதிகரித் துள்ளமையினால் புவியின் வளிக்கோளம் வெப்பமடைந்துள்ளது. கைத்தொழில்

புரட்சி, எரிபொருள் தகனம் மற்றும் காடழிப்பு காரணமாக காபனீரொட்சைட்டின் அளவு 26% ஆக அதிகரித்துள்ளது. மேலும், விவசாய மற்றும் விலங்கு வேளாண்மை நடவடிக்கைகளினாலும் உயிரியல் கழிவுகளின் தகனத்தினால் மீதேன் வாயுச் செறிவும் அதிகரித்துள்ளது.

**காலநிலை மாற்றத்தினால் ஏற்படும் தீமைகள்**

- சூழல் வெப்பநிலை உயர்வடைதல்
- பனி மழை மற்றும் பனிப்படலம் உருகுதல்
- சமுத்திரத்தின் நீர் மட்டம் உயர்வடைதல்
- படிவு வீழ்ச்சிச் செயன்முறை மாற்றமடைதல்
- மின்னல், சூறாவளி, டொனாடோ, பனிமழை போன்ற நிகழ்வுகள் ஏற்படல்
- எல்னினோ பாதிப்பு
- பருவ மழைச் செயன்முறையில் பாதிப்பு ஏற்படல்
- விவசாய விளைச்சல் குறைவடைதல்
- நோய் பரவுதல்  அதிகரிக்கும்

**உயிரினச் சூழலுக்கும், சமூகச் சூழலுக்கும் ஏற்படும் பாதிப்புகள்**

உயிரின வளங்கள், இயற்கையான வாழிடத்திலிருந்து வெளியேற்றப்படுதல் அல்லது அழிக்கப்படுதல் மனிதச் செயற்பாடுகளினால் இடம்பெறுகின்றன. இதனால் இயற்கைச் செயற்பாடுகள், உயிர்க் கூறுகளான தாவரங்கள் மற்றும் விலங்குகள் அதிகளவில் பாதிக்கப்படுகின்றன.

உதாரணம் :- காடுகள், ஈரநிலங்கள், உயிர் பல்லினத்தன்மை, முருகைக் கற்பாறைகள் உட்பட்ட சமுத்திர வளங்கள் போன்றன பாதிக்கப்படுகின்றன. தாவரங்கள் மற்றும் விலங்கினங்கள் பெரும் எண்ணிக்கையில் சிவப்புத் தரவுப் புத்தகத்தில் உள்ளடக் கப்பட்டுள்ளமைக்குக் காரணம் இதுவேயாகும்.

இதற்கிணங்க உயிர்ச் சூழல், சமூகச் சூழலின் இருப்புக்கு நேரடியாகப் பங்களிப்புச் செய்வதுடன், அதன் சமநிலை சீர்குலைந்து சமூகச் சூழல் அழிவுக்குட்படுகின்றது.

**உயிர்ச் சூழலில் ஏற்படும் பாதிப்புகள்**

- உயிர்ச் சூழலின் சமநிலை சீர்குலைதல்
- தனித்துவமான தாவரங்களும் விலங்கினங்களும் அழிவுறல்

- உயிர்த் தொகுதிகளின் செயற்பாடுகள் சீர்குலைதல்
  உ+ம்: ஒட்சிசன், வட்டம், நீரியல் வட்டம்
- உணவுத் தயாரிப்பும், உணவுச் சங்கிலியும் பாதிப்புறல்.
- ஆக்கிரமிப்புத்தன்மையுள்ள தாவரங்களும் விலங்குகளும் உருவாகுதல்

## சமூகச் சூழலுக்கு ஏற்பட்டுள்ள பாதிப்புகள்

***மனிதச் செயற்பாடுகள் சிக்கலடைந்துள்ளதுடன் சமூகச்சூழலும் பிரதிகூலத் தன்மையை அடைந்துள்ளது***

மனிதனின் சிக்கலான செயற்பாடுகள் சமூக பல்வகைமைக்கு காரணமாக உள்ளன. அதற்கிணங்க வகிபாகம் தொடர்பான மோதல்கள், செயல்கள் சார்ந்த சூழல் மோதல்கள், சமூக கலாசார மற்றும் ஒழுக்கச் சீர்கேடுகள், குடும்ப அமைப்பு சீர் குலைதல், குடும்பத்தின் பணிகள் சிக்கலடைதல், சமூக நிறுவனங்களில் ஏற்படும் மாற்றம், உலகமயமாக்கம், பொருளாதார கோலங்கள் மாற்றமடைதல், தொழில்நுட்ப நவீனமயமாக்கம் போன்ற காரணிகளால் உலகின் அனைத்து சமூகங்களும் பல்வேறு பாதிப்புகளுக்கு முகங்கொடுத்துள்ளன. இதனால்,

- சமூகத் தொடர்புகள் சீர்குலைதல்
- சமய மற்றும் இன மோதல்கள் ஏற்படுதல்
- சமூக அநீதிகள் ஏற்படுதல்
- குடும்ப அமைப்பு சீர்குலைதல்
- பெற்றோருக்கும், பிள்ளைகளுக்கும் இடையிலான தொடர்புகள் சீர்குலைதல்
- சமூக ஒழுக்கக்கேடுகள் அதிகரித்தல்
- சமூக விரோதச் செயல்கள் அதிகரித்தல் போன்றன ஏற்படுகின்றன.

## சூழல் தொடர்பான அரசின் பொறுப்புகளும், கடமைகளும்

புவியில் வாழ்கின்ற மனிதன் உட்பட அனைத்து விலங்கினங்களுக்கும் தாவரங்களுக்கும் சுற்றாடல் இன்றியமையாதது. ஆகவே, சிறந்த சூழலொன்றைப் பேண வேண்டுமாயின் சூழலின் அளவையும், தரத்தையும் பாதுகாத்தல் முக்கியம். இதன் பொருட்டு அரசாங்கத்தினால் சூழல் பாதுகாப்பு வழி முறைகள் பின்பற்றப்பட வேண்டும். அதற்காக மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் பின்வருமாறு,

- தேசிய சுற்றாடல் சட்டத்திற்கு அமைவாக பாரிய அளவு அபிவிருத்தித் திட்டங்களை ஆரம்பிக்கும் முன் சூழல் பாதிப்புகளை மதிப்பிடல், சூழல் பாதுகாப்பு அனுமதிப் பத்திரத்தை வழங்குதல் மற்றும் சூழல் தர நிர்ணயங்களை அறிமுகப்படுத்துதல் போன்றன முக்கியமானவையாகும்.

- காலத்திற்குக் காலம் சுற்றாடலின் தேவைகளைக் கருத்திற் கொண்டு தேசிய மற்றும் பிராந்திய ரீதியில் மேற்கொள்ளப்படும் முக்கிய தீர்மானங்களின் மூலம் சூழலைப் பாதுகாத்தல்.
- சூழல் தொடர்பான சட்டங்களுக்கு அமைவாகச் செயற்படுவதற்கு ஏற்ற வகையில் பிரசைகளின் மனப்பாங்கை விருத்தி செய்தல்.
- விழிப்புணர்வூட்டல் நிகழ்ச்சித் திட்டங்கள் மூலம் சூழல் நேயப் பிரசைகளை உருவாக்குதல்.
- அபிவிருத்தி நடவடிக்கைகளின் போது சுற்றாடலுக்கு ஏற்படும் செலவை மதிப்பிடல்.
- நாட்டின் உற்பத்தி மற்றும் கைத்தொழில் துறைகளில் பசுமை வினைத்திறன் எண்ணக்கருவைப் புகுத்துதல்.

**சூழல் தொடர்பான பிரசைகளின் பொறுப்புகளும், கடமைகளும்**

- சுற்றாடல் வளங்களைச் சிக்கனமாகப் பயன்படுத்துதல்
- உக்காத கழிவுப் பொருட்களைச் சூழலில் விடுவிப்பதைத் தவிர்த்தல்
- கழிவுப் பொருட்களை மீள்சுழற்சிக்கு உட்படுத்துதல்
- வீடு மற்றும் அயற் சூழலைப் பாதுகாத்தல்
- சூழலின் இருப்பையும் அதன் முக்கியத்துவத்தையும் உணர்ந்து செயற்படல்
- சூழல் பாதுகாப்பு தொடர்பில் ஏனைய நபர்களையும் அறிவூட்டுதல்
- சுற்றாடல் சட்ட திட்டங்களுக்கு அமைவாகச் செயற்படுதல்
- சூழல் தொடர்பாகச் செயற்படும் நிறுவனங்களுக்கு முழுமையான அனுசரணையை வழங்குதல்
- எப்போதும் சூழல் நேய வாழ்க்கை முறையைப் பின்பற்றுதல்.

## அபிவிருத்தி

அபிவிருத்தி என்பது மனித வாழ்க்கையின் பண்புத் தரத்தை முன்னேற்றுதல் என எளிமையாகப் பொருள் விளக்கம் கூறலாம். அபிவிருத்தி என்ற எண்ணக்கருவானது ஆரம்பத்தில் பொருளாதார வளர்ச்சியாகக் கருதப்பட்டதுடன், அது தலா தேசிய உற்பத்தி அதிகரிப்பின் மூலம் அடையாளம் காணப்பட்டது. அபிவிருத்தி என்ற எண்ணக்கருவானது ஒரு நாட்டு மக்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல், நலன்புரி

நடவடிக்கைகளை மேம்படுத்துதல், பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்துதல் தொடர்பில் முக்கியம் பெறுகிறது.

## அபிவிருத்தி என்ற எண்ணக்கருவின் தோற்றம்

நவீன அபிவிருத்தி எனும் எண்ணக்கருவானது மேற்கத்தைய நாட்டினராலேயே உருவாக்கப்பட்டது. அது தொடர்பில் மேலும் தெளிவினைப் பெற்றுக்கொள்வதற்கு கல்வியலாளர்களது வரைவிலக்கணங்களின்பால் கவனத்தைச் செலுத்துவோம்.

ஒரு நாட்டினது வறுமை நிலை ஒழிந்து வேலை வாய்ப்புகள் அதிகரித்து வருமானப் பகிர்விலுள்ள முரண்பாடு நீக்கப்படுமாயின் அதுவே அபிவிருத்தியாகும். (டட்சி சியர்ஸ்)

உற்பத்திகளின் அதிகரிப்பும் அதற்குக் காரணமாய் அமைந்த நுட்ப முறைகளினதும் நிறுவன அமைப்புகளினதும் வளர்ச்சியே அபிவிருத்தியாகும். (கிங்டல் பர்க்)

அபிவிருத்தி என்பது சனத்தொகை, சமூகம் கலாசாரம், ஒழுக்கம் எனும் பண்புகளை உள்ளடக்கிய மாற்றம் மற்றும் வளர்ச்சி தொடர்பான செயற்பாடாகும்.

(1981 - 1990 அபிவிருத்தி தசாப்தம், ஐக்கிய நாடுகள் சபை)

அபிவிருத்தி என்பது உலக மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதாகும்.

(1961 - 70 அபிவிருத்தி தசாப்தம், ஐக்கிய நாடுகள் சபை)

மேற்குறிப்பிட்ட வரைவிலக்கணங்களுக்கு ஏற்ப அபிவிருத்தி என்ற எண்ணக்கரு ஆரம்பத்தில் பொருளாதார வளர்ச்சியை மட்டும் கவனத்திற் கொண்டதுடன், பின்னர் வாழ்க்கைத் தரத்தின் வளர்ச்சியையும் கவனத்திற் கொண்டமை தெளிவாகின்றது. இது மென்மேலும் விரிவான எண்ணக்கருவாக வளர்ச்சியடைந்து மக்களின் மரபுகள், கலாசாரம் மற்றும் விழுமியங்களில் ஏற்படும் மாற்றங்கள் போன்றவற்றை உள்ளடக்கியதுடன், மனித உரிமைகள், ஜனநாயகம், அரசியல் நிறுவனங்களின் இயல்பு, சூழலின் பண்பு சார் நிலைமை என்பவற்றையும் உள்வாங்கிக் கொண்டது.

## செயற்பாடு 4 - 4



- அபிவிருத்தி என்பதன் பொருளை வரைவிலக்கணங்கள் மூலம் விளக்குக.
- அபிவிருத்தி என்ற எண்ணக்கருவானது காலத்திற்கு காலம் மாற்றமடைந் தமைக்கான காரணங்களை விளக்குக.

### அபிவிருத்தியை அளவிடல்

ஒரு நாடு அடைந்துள்ள பொருளாதார முன்னேற்றத்தையும் அதன் மட்டத்தையும் அறிவதற்காக அவற்றை அளவிடல் வேண்டும். இவ் அளவையின் மூலம் தமது நாடு அபிவிருத்திப் போக்கில் உயர்வாக அல்லது தாழ்வாக உள்ளதென்பதை தீர்மானித்துக் கொள்ள முடியும். இதன் பொருட்டு பல்வேறு அளவீடுகள் பயன்படுத்தப்படுகின்றன. அவ் அளவீடுகள் காலத்திற்கேற்ப மாற்றமடைந்து வந்துள்ளன.



## செயற்பாடு 4 - 5

- விளக்கப்படத்தில் காட்டப்பட்டுள்ள எண்ணக்கருக்களைக் கொண்டு அபிவிருத்தியை அளவிடுவதன் நோக்கங்கள் தொடர்பில் கலந்துரையாடலில் ஈடுபடுக.




## மொத்த தேசிய உற்பத்தி

ஒரு நாட்டினது அந்நிய செலாவணி வருவாயை கருத்திற் கொண்டு கடந்த ஆண்டில் உற்பத்தி செய்யப்பட்ட அனைத்து பொருட்கள் மற்றும் சேவைகளினதும் ஒட்டு மொத்தப் பெறுமதி மொத்த தேசிய உற்பத்தி ஆகும்.

மொத்த தேசிய உற்பத்தி = மொத்த உள்நாட்டு உற்பத்தி + மொத்த வெளிநாட்டு வருவாய்

**தலைக்குரிய மொத்தத் தேசிய உற்பத்தி**

ஒரு நாட்டில் வருடமொன்றிற்கு உற்பத்தி செய்யப்படும் பொருட்கள் மற்றும் சேவைகளின் அளவில், அந்த நாட்டின் பிரசை ஒருவருக்கு உரித்தாகும் அளவு மொத்த தேசிய உற்பத்தி எனப்படும். இது தலா வருமானம் எனக் குறிப்பிடப்படும்.

$$\text{தலைக்குரிய மொத்தத் தேசிய உற்பத்தி (தலா வருமானம்)} = \frac{\text{மொத்தத் தேசிய உற்பத்தி}}{\text{நட்டாண்டு சனத்தொகை}}$$

தனிநபர் தலா தேசிய உற்பத்தியின் குறைபாடுகள்

- பொருளாதாரத் தகவல்களை மட்டும் கருத்திற் கொள்ளல்
- சமூக நிலைமையை வெளிப்படுத்தாது இருத்தல்
- சமூக நலன்புரிக் காரணிகள் தொடர்பில் தகவல்களை முன்வைக்காமை
- உற்பத்திக்குப் பங்களிப்புச் செய்யாதவர்களுக்கும் இதன் பெறுமானம் பகிர்ந்தளிக் கப்படுதல்.

$$\text{மொத்த மெய்த்தேசிய உற்பத்தி} = \frac{\text{பண ரீதியான மொத்தத் தேசிய உற்பத்தி}}{\text{உள்நாட்டு உற்பத்திச் சுருக்கி}} \times 100$$

**நவீன அளவைகள்**

பௌதீக வாழ்க்கைப் பண்புச் சுட்டெண் ( PQLI )

மேற்படி சுட்டியைத் தயாரிப்பதற்கு பின்வரும் மூன்று அம்சங்கள் பயன்படுத்தப் படுகின்றன.

- எழுத்தறிவு
- பிறப்பின் போதான ஆயுள் எதிர்பார்ப்பு
- சிசு மரணவீதம்

மேற்படி சுட்டியானது 0 - 100 வரையிலான பெறுமானத்தைக் கொண்டிருக்கும். இதன் மூலம் நாட்டின் சமூக, கலாசார துறைகள் பற்றிய விளக்கத்தைப் பெற்றுக் கொள்ள முடியும். அத்துடன் நாட்டின் கல்வி, போசாக்கு மற்றும் சுகாதார நிலைமை தொடர்பான விளக்கத்தையும் பெற்றுக் கொள்ளலாம். இச்சுட்டியின் மூலம் சமூக அபிவிருத்தியின் இயல்பை அளவிட முடியும். ஒரு நாட்டின் அபிவிருத்தியின் உண்மை நிலையை இதன் மூலம் அறியலாம். அபிவிருத்தியை அளவிடும் போது தனிநபர் வருவாயின் குறைபாட்டை இச்சுட்டியின் மூலம் பூர்த்தி செய்ய முடியும்.

## மனித அபிவிருத்திச் சுட்டி HDI

இது மனிதனின் அபிவிருத்தி மட்டத்தை அளவிடும் சார்பளவுச் சுட்டியாகும். ஒரு நாடு அடைந்துள்ள முன்னேற்றத்தைச் சமூக, பொருளாதார துறைகள் இரண்டின் ஊடாக இச்சுட்டியின் மூலம் கணிப்பிடலாம். அதற்கமைய மிக உயர்ந்த, மத்திய தர மற்றும் கீழ்மட்ட மானிட அபிவிருத்தி இயல்பை வெளிப்படுத்தலாம்.

இச்சுட்டியின் மூலம் மனித அபிவிருத்தியின் அடிப்படை அம்சங்களான சுகாதாரமான வாழ்க்கை, அறிவு மட்டம் மற்றும் வாழ்க்கைத் தரம் ஆகிய மூன்றையும் அளவிட முடியும்.

- பிறப்பின் போதான ஆயுள் எதிர்பார்ப்பு
- கல்வி
- கொள்வனவு சக்தியை அடிப்படையாகக் கொண்டு தனி நபர் மொத்த தேசிய உற்பத்தி போன்ற கூறுகள் பயன்படுத்தப்படும்.

மேற்படி சுட்டியை அடிப்படையாகக் கொண்டு நாடுகளை மிக உயர்வான, மத்திய தர, கீழ்மட்ட மனித அபிவிருத்தியைக் கொண்ட நாடுகள் என வகைப்படுத்த முடியும்.

தெரிவு செய்யப்பட்ட நாடுகள் சிலவற்றின் (HD) சுட்டிகள்

| நாடுகள் | (HD) சுட்டி | | உரித்தாகும் இடம் | |
|---|---|---|---|---|
| | 2010 | 2012 | 2010 | 2012 |
| இலங்கை | 0.658 | 0.715 | 91 | 92 |
| இந்தியா | 0.519 | 0.554 | 119 | 136 |
| பாகிஸ்தான் | 0.490 | 0.515 | 125 | 146 |
| மலேசியா | 0.744 | 0.769 | 57 | 64 |
| சிங்கப்பூர் | 0.846 | 0.895 | 27 | 18 |
| அமெரிக்கா | 0.902 | 0.937 | 4 | 3 |
| ஐஸ்லாந்து | 0.869 | 0.906 | 17 | 13 |
| சியாராலியோன் | 0.317 | 0.359 | 158 | 177 |

மூலம் : மனித அபிவிருத்தி அறிக்கை, 2010 மற்றும் 2013

### அபிவிருத்தியின் அடிப்படையில் நாடுகளை வகைப்படுத்தல்

அபிவிருத்தியை அளவிடுவதற்காகப் பயன்படுத்தப்படும் சம்பிரதாய பூர்வமான அளவீடுகள் மற்றும் நவீன அளவீடுகளைப் பயன்படுத்தி அபிவிருத்தி மட்டத்திற்கேற்ப நாடுகளை வகைப்படுத்த முடியும். அவையாவன,

- ♦ அபிவிருத்தியடைந்து வரும் நாடுகள்
- ♦ அபிவிருத்தியடைந்த நாடுகள்




### அபிவிருத்தி செயன் முறையின்போது எதிர் கொள்ளப்படும் பிரச்சினைகள்

- மூலதனப் பற்றாக்குறை
- முதனிலைப் பொருட்களின் விலைத் தளம்பல்
- இறக்குமதி செய்யும் பொருட்களுக்காக அதிக விலையைச் செலுத்துதல்
- பாதகமான சென்மதி நிலுவை
- சர்வதேச வியாபாரத்தில் அபிவிருத்தி அடைந்த நாடுகள் பின்பற்றும் பாதுகாப்பு வழிமுறைகள்

  உதாரணம் : தீர்வைகள், பங்கீட்டு முறை
- வலுச்சக்தி நெருக்கடி
- மூளைசாலிகளின் வெளியேற்றம்

அபிவிருத்தியடைந்து வரும் நாடுகளில் காணப்படும் வறுமை நிலை தொடர்வதற்குக் காரணமாக அமையும் நச்சு வட்டத்தைப் பின்வருமாறு காட்டலாம்.




**அபிவிருத்திச் செயன்முறையின்போது எதிர்கொள்ளப்படும் பிரச்சினைகளுக்கான தீர்வுகள்**

- உள்நாட்டுச் சேமிப்பை மேம்படுத்துதல்
- ஏற்றுமதியைப் பன்முகப்படுத்துதல்
- புதிய சந்தைகளைத் தேடுதல்
- இறக்குமதிப் பதிலீட்டுக் கொள்கைகளைப் பின்பற்றுதல்
- மாற்று வலுச்சக்திகளை அறிமுகம் செய்தலும் பயன்படுத்தலும்.
- வலய அமைப்புகளை உருவாக்குதல்
- அபிவிருத்தியடைந்த நாடுகளுடன் வர்த்தக உடன்படிக்கைகளை ஏற்படுத்திக் கொள்ளல்
- வெளிநாட்டு உதவிகளைப் பெற்றுக்கொள்ளல்




## அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகள்

***உதாரணங்கள்:-***

- *சியாராலியோன்*
- *எதியோப்பியா*
- *சோமாலியா*
- *இந்தியா*
- *பங்களாதேஷ்*

## அபிவிருத்தி அடைந்து வரும் நாடான இலங்கையின் சிறப்பியல்புகள்

- அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளின் சார்பில் இலங்கை உயர்வான எழுத்தறிவு மட்டத்தைக் கொண்டுள்ளது.
- சிசு மரணமும் பிரசவத்தாய் மரண வீதமும் குறைந்த மட்டத்தில் காணப்படுகிறது.
- ஆயுள் எதிர்பார்ப்பு உயர்வாகக் காணப்படுகிறது.

## இலங்கையின் அபிவிருத்திக்கான சவாலை வெற்றி கொள்வதற்காக மேற் கொள்ளப்பட்டுள்ள நடவடிக்கைகள்

- சுற்றுலாத்துறையை மேம்படுத்தல்
- உள்நாட்டு வெளிநாட்டு முதலீட்டாளர்களை ஊக்குவித்தல்
- தொழில்நுட்ப அறிவையும், திறன்களையும் விரிவுபடுத்தல்
- அரசியல் உறுதிப்பாட்டைக் கட்டியெழுப்புதல்
- உள்நாட்டுச் சேமிப்பை ஊக்குவித்தல்
- ஏற்றுமதியைப் பன்முகப்படுத்தல்
- உட்கட்டமைப்பு வசதிகளை விருத்தி செய்தல்
- ஏற்றுமதியை நோக்காகக் கொண்ட கைத்தொழில்களை ஊக்குவித்தல்
- கடல்சார், கல்விசார், தொழில்னுட்பம்சார் கேந்திர நிலையமாக இலங்கையை உருவாக்குதல்




## அபிவிருத்தி அடைந்த நாடுகள் எதிர்நோக்கும் பிரச்சினைகள்

- சூழல் மாசடைதல்
- பயங்கரவாதம்
- மூலப் பொருட்களைப் பெற்றுக் கொள்வதில் உள்ள சிரமம்
- வலுச்சக்தி நெருக்கடி
- சந்தைப் போட்டி
- சமூகப் பிரச்சினைகள் உக்கிரமடைதல் ( இணையத்தளத்தின் மூலம்)
- புதிதாகக் கைத்தொழில் மயமான நாடுகளினது சந்தைப் போட்டி

### அபிவிருத்தி அடைந்த நாடுகளுக்கான உதாரணங்கள்

- நோர்வே
- சுவீடன்
- ஜப்பான்
- ஐக்கிய அமெரிக்க நாடுகள்
- கனடா
- ஜேர்மன்
- பிரான்ஸ்
- பெல்ஜியம்

## பேண்தகு அபிவிருத்தி பற்றிய எண்ணக்கரு

அபிவிருத்தி எனும் எண்ணக்கருவில் அதிகரித்து வரும் சனத்தொகையுடன் விரிவடைந்து வரும் மனிதத் தேவைகளைப் பூர்த்தி செய்தல் என்பது சவால் மிக்க ஒரு செயற்பாடாக உள்ளது. அதிகரித்து வரும் சனத் தொகையின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு அதிகளவு வளங்களைப் பயன்படுத்த வேண்டியுள்ளது. உற்பத்தி மற்றும் பயன்பாடுகள் அதிகரிக்கின்றமை சூழலுக்கான பாதிப்பையும் அதிகரிக்கச் செய்துள்ளது. அபிவிருத்திச் செயற்பாட்டின்போது மனிதன் சூழலை மறந்து தனது தேவைகள் மீதே அதிக கவனம் செலுத்துவது, இயற்கைச் சூழலுக்குப் பாரிய அச்சுறுத்தலை ஏற்படுத்தியுள்ளது.

அபரிமிதமாக வளங்களை அகழ்தல், வளப்பற்றாக்குறையினால் மாற்று வளங்கள் மீது கவனம் செலுத்துதல், சூழலில் விடுவிக்கப்படும் கழிவுப் பொருட்களின் அளவு அதிகரித்தல், பாரியளவில் சூழல் மாசடைதல் போன்றவற்றால் உயிர்ப் பல்லினத்தன்மைக்கு தீங்கு ஏற்படுகின்றது. இதனால் இயற்கைச் செயற்பாட்டிற்கு தடை ஏற்படல், இயற்கை அனர்த்தங்கள் அதிகரித்தல், புவி வெப்பமடைதல் போன்ற பாதகமான நிலைமைகளை இன்று நாம் எதிர்கொள்ள நேரிடுகிறது.

அபிவிருத்தி எனும் எண்ணக்கருவின் மூலம் மனித வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்குப் பொருளாதார அபிவிருத்தி ஏதுவாக அமைந்தாலும், பொதுவாக அதன் மூலம் உலக மக்களுக்கு நீதி கிடைப்பதில்லை என்பது தெரிய வந்துள்ளது. உலக சனத்தொகையில் அதிகளவானோர் வறுமையின் பிடியில் வாடுவதுடன், மண், வளி, காடுகள், கனிய வளங்கள் போன்ற இயற்கை வளங்கள் அழிவுக்கும் தரம் குன்றுதலுக்கும் உள்ளாகியுள்ளன. இதன் விளைவாக மக்கள் தொகையில் அதிகமானோர் சுகாதாரம் தொடர்பான பிரச்சினைகளுக்கு உட்பட்டுள்ளனர். தற்கால மனிதனது அபிவிருத்திச்

செயற்பாடானது, பௌதீகச் சூழற் தொகுதியில் பாரிய மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளன. மனிதனுக்கும் சூழலுக்கும் இடையிலான இடைத் தொடர்பினைப் புறக்கணிக்க முடியாது. ஆனால், சூழலில் உள்ள வளங்கள் அழிவதற்கும் இடமளித்தலாகாது. அரிய மற்றும் தேய்வுறக் கூடிய வளங்களை அவற்றின் அழிவில் இருந்து பாதுகாப்பதுடன் சிறந்த முகாமைத்துவத்தின் மூலம் அவ்வளங்களை கையாள்வது தொடர்பாகவும் கவனம் செலுத்துதல் இன்றியமையாதது. இதற்கிணங்க மனிதனது நவீன அபிவி ருத்தி முயற்சிகள் எதிர்கால மனிதனுக்கு பாதிப்புகளை ஏற்படுத்தாத வண்ணம் புவிக் கோளத்தின் எதிர்கால இருப்பைப் பாதுகாப்பதற்கான செயற்பாடுகளை முன்னெடுத்தல் வேண்டும். இம்முயற்சியே நிலையான அபிவிருத்தி எனப் பொருள் கொள்ளப்படுகின்றது. பேண்தகு அபிவிருத்தி என்பது நிலையான அபிவிருத்தி என்பதைக் குறிக்கின்றது.

பேண்தகு அபிவிருத்தி என்பது எதிர்கால சந்ததியினரின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான வாய்ப்புகளை இல்லாதொழிப்பதை தவிர்த்து, நிகழ்கால அபிவிருத்தி செயன்முறைகளை முன்னெடுப்பதாகும்.

## பேண்தகு அபிவிருத்தி எண்ணக்கருவின் தோற்றம்

பேண்தகு அபிவிருத்தி எண்ணக்கருவின் முன்னோடியாக விளங்கியவர் நோர்வே நாட்டின் முன்னாள் பிரதமர் கிறகார்லம் புரூண்ட்லண்ட் ஆவார். இவரது தலைமையில் 1983 ஆம் ஆண்டு உலகச்சூழல் ஆணைக்குழு நிறுவப்பட்டது. இவ்வாணைக்குழுவினால் வெளியிடப்பட்ட அறிக்கையானது எமது பொதுவான எதிர்காலம் என்பதன் மூலம் வாதிடப்படுவது யாதெனில் சூழலையும் அபிவிருத்தியையும் ஒன்றிணைத்தல் என்பதாகும். இதற்கிணங்க பேண்தகு அபிவிருத்தி பின்வருமாறு வரைவிலக்கணம் செய்யப்பட்டுள்ளது. ''எதிர்காலச் சந்ததிக்கான தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையிலான அபிவிருத்தி செயற்பாடுகளையும் அதற்கான வழிவகைகளையும் உலகளாவிய மற்றும் தேசிய மட்டங்களில் முன்னெடுத்தலாகும்''. மேற்படி எண்ணக் கருவை முறையான வகையில் முழு உலகமும் ஏற்றுக் கொண்டதுடன் 1992 ஜூன் மாதம் ரியோடிஜெனிரோவில் நடைபெற்ற சூழலும் அபிவிருத்தியும் பற்றிய சர் வதேச மாநாட்டில் சூழற் பிரச்சினைகள் தொடர்பில் தீவிர கவனம் செலுத்தப்பட்டது. இம்மாநாட்டில் 21 ஆம் நூற்றாண்டுக்கான நிகழ்ச்சி நிரலும் உலகளாவிய ரீதியில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. பேண்தகு அபிவிருத்திக்கான ஏற்றுக் கொள்ளப்பட்ட வழிமுறைகளை அனைத்து நாடுகளும் தத்தமது பங்களிப்பினூடாக மேற்கொள்ள வேண்டும் என இதன் மூலம் எதிர்பார்க்கப்படுகின்றது.

2000 ஆம் ஆண்டில் ஐக்கிய நாடுகள் சபையினால் நடாத்தப்படும் புத்தாயிரம் ஆண்டுக்கான மாநாட்டில் இதற்கான குறிக்கோள்களும் கட்டியெழுப்பப்பட்டுள்ளதுடன்

பேண்தகு அபிவிருத்திக்கு முன்னுரிமை வழங்கப்பட்டுள்ளது. 2005 ஆம் ஆண்டில் உலகின் புத்தாயிரமாம் ஆண்டு குறிக்கோள்களும் அதன் அபிவிருத்தி இலக்குகளை அடைந்து கொள்வதற்கான முன்னேற்ற அறிக்கையில் கூறப்பட்டுள்ளன. 20 ஆண்டுகள் கழித்து அதாவது 2012 இல் ரியோடிஜெனிரோவில் மீண்டும் ஒரு சர்வ தேச மாநாடு நடாத்தப்பட்டது. இம்மாநாட்டில் நிலையான அபிவிருத்திக்கான எமது அர்ப்பணிப்புக்களைப் புதுப்பிப்பதற்கான நிகழ்கால மற்றும் எதிர்கால சந்ததிக்கான பொருளாதாரம் மற்றும் சமூகச் சூழல் என்பவற்றை ஏற்படுத்துவதற்கு உறுதி பூணப்பட்டது. இதற்கிணங்க சூழலும் அபிவிருத்தியும் தொடர்பான ஐக்கிய நாடுகளின் மாநாட்டின் முடிவுகளில் எமக்குள்ள கடப்பாட்டை மீறாதிருத்தல் அவசியமாகும்.

மேற்படி நிலையான அபிவிருத்தியை அதன் அனைத்து கோணங்களிலும் அடைந்து கொள்ளும் வகையில் பொருளாதார, சமூக மற்றும் சூழல் ஆகிய துறைகள் ஒன்றிணைந்து அவற்றுக்கிடையிலான இடைத் தொடர்புகளை ஏற்றுக் கொண்டு பேண்தகு அபிவிருத்தியை அனைத்து மட்டங்களிலும் மென்மேலும் முன்னேற்றுவது அவசியம் என (ரியோ + 20) ஐக்கிய நாடுகளினால் முடிவு செய்யப்பட்டது. இதற்கமைவாக மேற்படி எண்ணக்கருவின் மீது உலகில் வசிக்கும் மக்களும் கொள்கை ரீதியானதும் அடிப்படையிலானதுமான முனைப்பைக் கொண்டிருத்தல் வரவேற்கத்தக்கது.

### பேண்தகு அபிவிருத்தியை ஏற்படுத்துவதற்காக வெற்றி கொள்ள வேண்டிய சவால்கள்



## நிலையான அபிவிருத்திக்கான தேவைகள்

பேண்தகு அபிவிருத்தியின் போது மனிதத் தேவைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்ற முனைகையில் பொருளாதாரத் தேவைகளை மட்டும் கருத்திற் கொள்ளாது, சமூக மற்றும் சூழல் அபிவிருத்தியின் மீது கவனம் செலுத்துதல் அவசியம்.

அபிவிருத்திச் செயற்பாட்டில் சூழல் சார்ந்த அம்சங்கள் குறித்து அதிக கவனம் செலுத்துதல் வேண்டும். மனிதனது அபிவிருத்தி நடவடிக்கைகளின் போது இயற்கை வள அழிவுகளையும் சூழலுக்கும் ஏற்படும் தீய விளைவுகளையும் கணக்கிடுவதன் மூலம் அதனால் ஏற்படும் சூழல் பாதிப்புகளை மதிப்பிடுதல் வேண்டும். மனிதனது தனிப்பட்ட இலாப நோக்கை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார செயற்பாடுகளின் போது அதனால் ஏற்படும் தீமைகளை முழு உலக மக்களும் எதிர்நோக்க வேண்டியுள்ளமையால் அவற்றைக் கட்டுப்படுத்துதல் வேண்டும். இலாப நோக்கை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்படும் உற்பத்திகளை கட்டுப்படுத்துதல் அவசியம். பாரியளவில் சூழலுக்கு தீமை பயக்கும் நிர்மாண நடவடிக்கைகள், கைத்தொழில்கள், விவசாய நடவடிக்கைகள் தொடர்பில் சுற்றாடல் மதிப்பீட்டை மேற்கொள்வதன் மூலம் பொருளாதார, சமூக மற்றும் சூழல் அபிவிருத்தியை சமநிலைப்படுத்துதல் வேண்டும். இதன் மூலம் எதிர்காலச் சந்ததியினர் வாழத் தகுந்த உலகம் ஒன்றைப் பேணும் பொருட்டு நிகழ்காலச் சூழல் வளங்களைச் சுரண்டலுக்கு உட்படுத்தாது (கொள்ளை இடாது) கையாளுதல் வேண்டும். பிரபல இந்தியக் கவிஞரான காளிதாசரின் **'இளவரசனின் தோற்றம்'** எனும் படைப்பின் மூலம் கூறப்படுவது யாதெனில், உலகில் உள்ள வளங்களைப் பயன்படுத்துகையில் பசுவில் பால் கறப்பதைப் போல பக்குவமாக நடந்து கொள்ள வேண்டும். அதாவது பசுவின் தேக ஆரோக்கியத்திற்குப் பாதிப்பின்றியும் அதன் கன்றுக்கும் பருக இடமளிக்கும் விதமாகவும் கறத்தல் வேண்டும். மாறாக, முழுமையான சுரண்டல் ஆகாது எனும் கருத்து இதன் மூலம் தெளிவுபடுத்தப்படுகிறது. இது, பேண்தகு அபிவிருத்தி என்றால் என்ன என்பதற்கும் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

## பேண்தகு அபிவிருத்திக்காக மேற்கொள்ளக் வேண்டிய நடவடிக்கைகள்

சமகால உலகில் அனேகமான நாடுகள் பேண்தகு அபிவிருத்தி எனும் எண்ணக்கருவின் முக்கியத்துவத்தை உணர்ந்துள்ளன. இதற்கமைய நாம் வாழும் கிரகத்தினதும் எதிர்கால சந்ததியினதும் நலனை கருத்திற் கொண்டு பொருளாதார, சமூக மற்றும் சுற்றாடல் சார்ந்து நிலையான எதிர்காலமொன்றை உருவாக்கிக் கொள்வதற்கு உறுதி பூணப்பட்டுள்ளது. அதனால் சுற்றாடலும் அபிவிருத்தியும் தொடர்பான புத்தாயிரம் ஆண்டின் முடிவுகளின் மீது கவனம் செலுத்தப்படல் முக்கியமாகும்.

அபிவிருத்தி தொடர்பில் செல்வாக்குச் செலுத்தும் பிரதான காரணி வளம் ஆகும். வளங்களின் வினைத்திறனை மேம்படுத்துவதன் மூலம் நிலையான அபிவிருத்தியை அடைய முடியும். இதன் பொருட்டு பயன்படுத்தப்படும் பிரதான முறைமையாக 3 R என்ற எண்ணக்கரு விளங்குகிறது.

- Reduse - குறைத்தல்
- Reuse - மீளப் பயன்படுத்தல்
- Recycle - மீள் சுழற்சிக்கு உட்படுத்தல்

**வளங்களின் வினைத்திறனை மேம்படுத்துவதற்காக உலகில் கைக் கொள்ளப்படும் வழிமுறைகள்**

5 S - வினைத்திறன் எண்ணக்கருப் பயன்பாடு

CP - தூய்மையான உற்பத்தி ( Cleaner Production)

GP - பசுமை உற்பத்திகள் ( Green Productvity )

TQM - முழுமைத் தர முகாமைத்துவம் ( Total Quality Management)

Poka Yoke - தவறுகளைப் பூச்சியமாக்கல் ( Mistaken Proofing)

PPP - கழிவகற்றும் பொறுப்பை உற்பத்தியாளர் ஏற்றுக் கொள்ளல் (Producer Paid Principle)

செயற்பாடு 4 - 6



- சூழல் நேய நடவடிக்கைகளை மேற்கொள்வதற்காக உமது இல்லத்தில் மேற்கொள்ளக்கூடிய வழி முறைகளை முன்வைக்குக.
- உமது பாடசாலையில் நடைமுறைப்படுத்தக்கூடிய சுற்றாடல் வேலைத் திட்டம் ஒன்றை உமது வகுப்பை முதன்மையாகக் கொண்டு நடைமுறைப் படுத்துக. மேற்படிச் செயற்பாட்டிற்கான பின் தொடர் நிகழ்ச்சி நிரலொன்றையும் பின்பற்றுக.

- இலங்கையில் நடைமுறைப்படுத்தப்பட்ட மற்றும் நடைமுறைப் படுத்தப்பட்டு வரும் பேண்தகு அபிவிருத்திச் செயற்திட்டங்கள் தொடர்பில் சூழல் மதிப்பீடு அறிக்கை, அவை தொடர்பான பத்திரிகை அறிக்கைகள், நீதிமன்ற நடவடிக்கைகள் போன்றவற்றை அறிந்து அவற்றின் விளைவுகளைக் கலந்துரையாடுக.
- இலங்கையின் நீர்வள நாகரிகத்தில் காணக்கூடிய பேண்தகு அபிவிருத்திச் செயற்பாடுகளை உதாரணங்களுடன் கலந்துரையாடுக.




### பேண்தகு அபிவிருத்தி தொடர்பான பல்வேறு நிறுவனங்களினதும் அமைப்புக் களினதும் கடமைகளும் பொறுப்புகளும்

ஒரு நாட்டினது முழுப் பொருளாதாரச் செயற்பாடும் அரச மற்றும் தனியார் துறைகள் மூலம் கொண்டு நடாத்தப்படுகிறது. இவ் அனைத்து செயற்பாடுகளின் போதும் சூழல் கவனத்திற் கொள்ளப்படுவது அவசியம். குறிப்பாக, சூழலுக்கு ஏற்படும் தீங்குகள் தொடர்பில் உணர்வுடன் இருத்தல், அவை தொடர்பில் கண்காணிப்புடன் செயற்படுதல், சரியான தகவல்களைச் சேகரித்தல், முன்வைத்தல், என்பவற்றுடன் அவை தொடர்பாக உரிய நிறுவனங்களுக்கும் துறைகளுக்கும் அறிவூட்டுவதற்காக

உரிய நிறுவனங்களும் அமைப்புகளும் பொறுப்புடன் செயற்படுதல் வேண்டும். அனைத்து நடவடிக்கைகளின் போதும் நிலையான அபிவிருத்தியின் முக்கியத்துவம் தொடர்பில் ஊடகங்கள் மூலம் அறிவூட்டுதல் வேண்டும். குறிப்பாக கல்விச் செயற்பாடுகளின்போது சூழல் நேய மனப்பாங்கு விருத்தி, எளிமையான வாழ்க்கை முறை தொடர்பான பழக்கவழக்கங்கள் மற்றும் நடவடிக்கைகளை சமூகமயப் படுத்துவதற்கு முன்வர வேண்டும்.

## பேண்தகு அபிவிருத்தி தொடர்பாக அரசின் கடமைகளும் பொறுப்புகளும்

அரச கொள்கைகள் மற்றும் எதிர்கால இலக்குகளில் பேண்தகு அபிவிருத்தி எனும் எண்ணக்கருவை ஏற்படுத்திக் கொள்வதற்காக தேவையான வழிகாட்டல்களையும், அர்ப்பணிப்புகளையும் கொண்டிருப்பது ஆட்சியாளர்களின் பொறுப்பாகும். இதன் போது தேசிய சுற்றாடல் கொள்கையைப் பின்பற்றுதல் முக்கியமானது. இதன் மூலம் அரச நிறுவனங்களை வலுப்படுத்தல், அறிவூட்டுதல், வழிகாட்டல் போன்ற பொறுப்புகள் அரசு சார்ந்தனவாகவே காணப்படும். அரச அதிகாரிகள் மூலமும் நிறுவனங்கள் மூலமும் அனைத்து அறிவூட்டல் நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படல் வேண்டும். தேசிய சுற்றாடல் சட்ட திட்டங்களை உரிய நிறுவனங்கள் நடைமுறைப்படுத்துவதன் மூலம் சட்டம் முறையாக அமுல்படுத்தப்படுதல் வேண்டும். காலத்திற்குக் காலம் சூழலின் தேவைகளைக் கருத்திற் கொண்டு தேசிய மற்றும் பிரதேச ரீதியில் முக்கியமான தீர்மானங்களை எடுத்தல் வேண்டும்.

சூழலின் அழிவுக்குப் பிரதான காரணியாக வறுமை விளங்குகிறது. இதனால் சூழலின் வளங்கள் முறையற்ற விதத்திலும் சட்ட பூர்வமற்ற வகையிலும் சுரண்டலுக்குட்படுத்தப்படுகின்றன. இதனால் வறுமையை ஒழிப்பதற்கான நடவடிக் கைகளைப் பின்பற்றுவதுடன் ஒரு நாட்டினது உற்பத்தி, விநியோகம் நுகர்வு தொடர்பில் காணப்படும் சமமின்மையைக் குறைப்பதற்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படல் வேண்டும். மேலும், சூழலுக்கு நன்மை பயக்கும் உற்பத்திகள், சேவைகள் குறித்து உற்பத்தியாளர்களை விழிப்படையச் செய்யவும் வேண்டும்.

இவ்வகையில் பேண்தகு அபிவிருத்தியைப் பேணிச் செல்வதற்காக அரசி னால் நிறைவேற்றப்பட வேண்டிய சில கடமைகளும் பொறுப்புகளும் கீழே காட்டப்பட்டுள்ளன,

- சூழல் பாதுகாப்பு வேலைத்திட்டங்களைத் தயார்ப்படுத்தலும் நடைமுறைப் படுத்தலும்
- சூழல் நேயப் பொருட்களையும் சேவைகளையும் வழங்குவோரை ஊக்குவித்தல்
- சூழல் நேய உற்பத்திகள் மற்றும் சேவைகளை நுகர்வதன் முக்கியத்துவம்

தொடர்பில் பொதுமக்களை அறிவூட்டல்

- சூழலுக்குரிய சட்டதிட்டங்களையும் அதிகாரங்களையும் நடைமுறைப்படுத்தல் உதாரணம்: 1980 தேசிய சுற்றாடல் சட்டம்
- சூழல் பாதுகாப்பு மதிப்பிடல் (EIA)
- சூழற் பாதுகாப்பு அனுமதிப் பத்திரம் (EPA)
- சுற்றாடல் தராதரங்களை அறிமுகம் செய்தல்
- சூழல் பாதுகாப்பிற்குட்பட்ட பிரதேசங்களைப் பிரகடனப்படுத்துதல்
- பச்சைவீட்டு வாயு வெளியேற்றத்தைக் கட்டுப்படுத்துதல்
- அபரிமிதமான நுகர்வை கட்டுப்படுத்துகின்ற சூழல் நேய வாழ்க்கை முறைக்கு மக்களை வழிப்படுத்துதல்

# 5 சர்வதேச உறவுகள்

**அறிமுகம்**

பண்டைய காலத்தில் உலகின் பெரும்பாலான நாடுகளில் சுயதேவைப் பூர்த்திப் பொருளாதார முறை நிலவி வந்துள்ளது. தமக்குத் தேவையான பொருள்களைத் தாமே உற்பத்தி செய்து அவற்றை நுகர்வது சுயதேவைப் பூர்த்திப் பொருளாதார முறையின் பண்பாகும். காலப்போக்கில் சனத்தொகை வளர்ச்சி வேகத்திற்கேற்ப மனிதத் தேவைகளும் பல்கிப்பெருகியதால் பண்டங்களுக்கான கேள்வியும் அதிகரித்தது.

ஒரு நாட்டின் புவியியல் அமைவிடம், காலநிலை, வானிலையின் செல்வாக்கு, இயற்கை வளங்களின் பரம்பல் போன்ற காரணிகளின் அடிப்படையில் அந்நாட்டினது உற்பத்தி தீர்மானிக்கப்படுகின்றது. ஆயினும், வளங்களின் பல்வகைமை காரணமாக எந்தவொரு நாடும் தமக்குத் தேவையான அனைத்துப் பண்டங்களையும் தமது நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்ள முடிவதில்லை. எனவே, எல்லா நாடுகளும் தமது நாட்டில் இலகுவாக உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களை மாத்திரம் உற்பத்தி செய்து கொண்டு, தமக்குத் தேவையான ஏனைய பொருள்களை வேறு நாடுகளிலிருந்து இறக்குமதி செய்கின்றன.

மத்தியகால ஐரோப்பாவில் ஏற்பட்ட புதிய கண்டுபிடிப்புகள், நாடுகாண் பயணங்கள் என்பவற்றின் வளர்ச்சி காரணமாக நாடுகளுக்கிடையிலான கொடுக்கல் வாங்கல்களும் தொடர்புகளும் வளர்ச்சியடைந்தன. இதன் விளைவாக ஐரோப்பிய நாடுகளுக்கும் கீழைத்தேய நாடுகளுக்குமிடையிலான தொடர்புகள் வலுப்பெற்றன.

கைத்தொழில் புரட்சியைத் தொடர்ந்து ஐரோப்பாவில் பண்டங்களின் உற்பத்தியானது வேகமாக வளர்ச்சி கண்டதுடன், அவற்றுக்கான மூலப் பொருளைப் பெற்றுக்கொள்ள வேண்டிய தேவையும் ஏற்பட்டது. அது மட்டுமல்லாமல், உற்பத்திப் பொருள்களை விற்பனை செய்வதற்குத் தேவையான சந்தை வாய்ப்புகளும் தேவைப்பட்டன. ஆசிய, ஆபிரிக்க, இலத்தின் அமெரிக்கப் பிரதேசங்களை இலக்காக் கொண்டே மேற்படிச் செயற்பாடுகள் மேற்கொள்ளப் பட்டதுடன், அதற்காக ஐரோப்பா மூலம் குடியேற்றவாதக் கொள்கைகள் கடைப்பிடிக்கப்பட்டன.

குடியேற்ற நாடுகளைக் கொண்டிருந்த நாடுகள் ஐரோப்பாவில் அபிவிருத்தியடைந்த நாடுகளாக வளர்ச்சி கண்டன. அந்நாடுகளது மூலதனமும் தொழில்நுட்ப அறிவும் உயர் மட்டத்தில் காணப்பட்டன. குடியேற்ற நாடு களாகப் பல நூற்றாண்டுகளாக அடிமைப்பட்டிருந்த நாடுகள் பொருளாதாரம், மூலதனம், தொழில்நுட்பம் என்பவற்றில் கீழ் மட்டத்தில் காணப்பட்டதுடன், அவை அபிவிருத்தியடைந்த நாடுகளைச் சார்ந்திருக்கவேண்டிய நிலைக்கும் தள்ளப்பட்டன. அதன் விளைவாகச் சர்வதேசத் தொடர்புகள் வளர்ச்சி கண்டன.

நாடுகளுக்கிடையிலான உதவிகள், ஒத்தாசைகள் என்பன மனித அபிவிருத்திக்கு அவசியமாகின்றன. சனத்தொகையின் வேகமான வளர்ச்சி, மனிதனது தேவைகளின் பெருக்கம், வளங்களின் வரையறுக்கப்பட்ட தன்மை போன்றன காரணமாக அனைத்து நாடுகளும் ஒன்றிலொன்று தங்கியிருக்க வேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளன.

நாடுகள் ஒன்றுக்கொன்று உதவி, ஒத்துழைப்புகளை வழங்குவதன் மூலமே அபிவிருத்தி என்ற இலக்கை அடைய முடியும். உலகின் அதிகமான நாடுகள் பொருளாதார, சமூக மற்றும் கலாசார ரீதியில் வளர்ச்சியடைந்திருப்பதற்கான காரணம் நாடுகளுக்கிடையிலான பரஸ்பர ஒத்துழைப்பாகும். இதனாலேயே, சர்வதேச உறவுகள் தவிர்க்க முடியாத ஓர் எண்ணக்கருவாக மாறியுள்ளது.

சர்வதேச உறவுகள் என்றால் என்ன என்பதை வரைவிலக்கணங்கள் மூலம் விளங்கிக் கொள்வோம்.

I. ‘‘ சர்வதேச உறவுகள் என்பது, நாடுகளுக்கிடையே இடம்பெறும் அனைத்து விதமான உறவுகள் ஆகும்’’

II. அரசினது அதிகாரம் மிக்க அல்லது அதிகார பூர்வமான அதிகாரிகள் மூலம் மேற்கொள்ளப்படும் அரச மட்டத்திலான தொடர்புகளாகும்.

இவ்வகையில், சர்வதேச உறவுகள் என்பது, இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட நாடுகளுக்கிடையில் அல்லது ஓர் அரசுக்கும் சர்வதேச நிறுவனங்களுக்குமிடையில் அல்லது அரசுக்கும் நபர்களுக்குமிடையில் ஏற்படக்கூடிய தொடர்பாகவும் அமையலாம்.

**சர்வதேச உறவுகளின் முக்கியத்துவம்**




உரு 5.1

***சர்வதேச உறவுகளின் நோக்கங்கள் பின்வருமாறு,***

1. தமது அரசுக்கு தனியே பூர்த்திசெய்து கொள்ள முடியாதவற்றைப் பூர்த்தி செய்து கொள்ளல்

*மனிதத் தேவைகள் சிக்கலடைந்ததன் காரணமாக, அரசுக்கு அதனது தேவைகளை நிறைவு செய்து கொள்வதற்கு முடியாமல் போனது. நாடுகளுக்கிடையிலான வளங் களின் தன்மை வேறுபட்டதன் காரணமாக ஒவ்வொரு நாட்டினதும் உற்பத்திகளும் வேறுபட்டன. அதன் காரணமாக தமது நாட்டு உற்பத்திப் பொருட்களை மற்றைய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கும், தம்மிடமில்லாத உற்பத்திப் பொருள்களை இறக்குமதி செய்வதற்கும் தகுந்த வழியாக நாடுகளுக்கிடையிலான தொடர்புகள் விளங்குகின்றன.இதனை உணர்ந்து கொண்ட உலக மக்கள் சர்வதேச உறவுகளை ஏற்படுத்திக்கொள்ள முனைந்தனர். எனவே ஒரு நாடு தன்னால் நிறைவேற்றிக் கொள்ள முடியாத தேவைகளை நிறைவேற்றிக்கொள்வது சர்வதேச உறவுகளின் முக்கிய நோக்காக உள்ளது.*

2. அரசியல், பொருளாதார, கலாசார, சமூகத்துறைகளினூடே தொடர்புகளை விரிவு படுத்திக் கொள்ளல்

*உலகின் பெரும்பாலான நாடுகளது அரசியல், பொருளாதாரம், சமூகம், கலாசாரம் என்பன ஒன்றிற்கொன்று வேறுபட்டன. இவ்வாறு வேறுபாடுகள் காணப்படுவதில் நன்மையும் உண்டு தீமையும் உண்டு. ஆனால், நன்மையான விடயங்களை மேலும் விருத்தியடையச் செய்வதற்கு சர்வதேசத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வது*

அவசியமாகிறது.

எடுத்துக்காட்டாக, புத்த தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட கலாசார உறவுகள் இந்திய நாட்டுக்கும் இலங்கைக்கும் இடையே இற்றைக்கு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வளர்ச்சி கண்டமை குறிப்பிடத்தக்கது.

மேற்குறிப்பிட்ட அடிப்படையில் உலகின் பெரும்பாலான நாடுகள் அரசியல், பொருளாதார, சமூகம், கலாசாரம் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு சர்வதேச உறவுகளை ஏற்படுத்திக் கொண்டுள்ளன. இவ்வாறு பண்டைய காலம் தொட்டு ஏற்படுத்திக் கொண்ட உறவுகள் படிப்படியாக வளர்ச்சி காண்பதுடன், அத்தன்மை இரு நாடுகளுக்கிடையேயான நட்புறவும் ஒத்துழைப்பும் ஏற்படுவதற்கும் வழிகோலும்.

### 3. பிரதான நாடுகளின் அதிகார பிரயோகத்திலிருந்து தம்மைப் பாதுகாத்துக்கொள்ளல்

இன்று உலகின் சில நாடுகள் பொருளாதாரம் மற்றும் ஆயுதபலம் என்பவற்றின் அடிப்படையில் பலமான நிலையை அடைந்துள்ளன. இத்தகைய நாடுகள் பலமற்ற நாடுகள் மீது தமது ஆதிக்கத்தைச் செலுத்த முனைகின்றன. இந்நிலைமை குடியேற்ற நாடுகளுக்கு சுதந்திரம் கிடைக்கப்பெற்றமையைத் தொடர்ந்து இடம்பெறத் தொடங்கியது. அரசியல் ரீதியாக அதிகாரம் செலுத்துதல், கடன், மற்றும் நன்கொடை வழங்குதல், உள்நாட்டு யுத்தத்திற்காக ஆயுதங்கள் மற்றும் அதற்கான நன்கொடை களை வழங்குதல் போன்றவற்றின் மூலம் பலம் வாய்ந்த அரசுகள் ஆக்கிரமிப்பு நடவடி க்கைகளை மேற்கொள்கின்றன. இவ்வாறான நிலைமைகளில் இருந்து ஓரளவாவது தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்கு சர்வதேச உறவுகள் உதவுகின்றன. இல்லையேல், பலம் குன்றிய நாடுகள் பலம் வாய்ந்த நாடுகளது அடிமைகளாக மாற நேரிடும்.

### 4. பாதுகாப்புக் கொள்கைகள் மூலம் ஏற்படும் பாதகமான விளைவுகளைத் தடுத்தல்

உலகின் பெரும்பாலான நாடுகள் தமது பொருளாதாரத் தொடர்புகளைச் சிறப்பாக மேற்கொள்வதற்குப் பாதுகாப்புக் கொள்கைகளைப் பின்பற்றுகின்றன. எடுத்துக்காட் டாக, ஆடைகளுக்கான பங்குகளை வாங்குதல், உடன்படிக்கைகளை ஏற்படுத்திக் கொள்ளல் ஆகியவற்றின் மூலம் பொருள்களுக்கான ஒரு நிலையான விலையை ஏற்படுத்திக் கொள்ளல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**செயற்பாடு** 5 - 1



- சர்வதேச உறவுகள் என்றால் என்ன என்பதைச் சுருக்கமாக விளக்கி அதன் முக்கியத்துவத்தைத் தெளிவுபடுத்துக.

## சர்வதேச உறவுகள் மேற்கொள்ளப்படும் பிரதான முறைகள்

சர்வதேச உறவுகள் என்றால் என்ன என்பது குறித்தும் அதன் முக்கியத்துவம் குறித்தும் இப்பொழுது நீங்கள் விளங்கிக் கொண்டிருப்பீர்கள்.

அடுத்து நாம் சர்வதேச உறவுகள் மேற்கொள்ளப்படும் பிரதான முறைகள் தொடர்பாகக் கவனம் செலுத்துவோம். அதாவது, சர்வதேச உறவுகள் எவ்வாறு மேற்கொள்ளப் படுகின்றன எனும் அம்சமே இதன் மூலம் எதிர்பார்க்கப்படுகிறது. சர்வதேச உறவுகள் இரு முறைகளில் இடம் பெறுகின்றன. அவையாவன,

1. இராஜதந்திர உறவுகள்
2. விரதியல் உறவுகள்

## இராஜதந்திர உறவுகள்

நாடுகளுக்கிடையில் இடம்பெறும் சுமுகமான சமாதான உறவுகள் இராஜதந்திர உறவுகள் எனப்படும். அதாவது, தூதுவர்கள், ஆணையாளர்கள் மூலம் அரச மட்டத் தில் நபர்களுக்கிடையே மேற்கொள்ளப்படும் அரசியல் தொடர்புகளை இராஜதந்திர உறவுகள் எனக் குறிப்பிடலாம். ஒரு நாட்டினது வெளிநாட்டுக் கொள்கையே இந்த உறவுகளை ஏற்படுத்திக்கொள்ள வழிவகுக்கிறது. ஒரு நாடு எத்தகைய நாடுகளுடன் இராஜதந்திர உறவுகளைக் கட்டியெழுப்ப வேண்டும், அது எந்த முறையில் இடம்பெற வேண்டும் என்பன வெளிநாட்டுக் கொள்கை மூலம் சுட்டிக்காட்டப்படும். குறிப்பாக, சர்வதேச மாநாடுகள், வலய மட்ட அமைப்புகள், இருதரப்பிலான அரச தலைவர்களின் சந்திப்புகள், விசேட தூதுவர்களுடனான கருத்துப்பரிமாற்றம் மற்றும் வெளிநாட்டு அமைச்சர்களினூடாக இராஜதந்திரத் தொடர்புகள் பலப்படுத்தப்படுகின்றன.

## இராணுவ ரீதியான உறவுகள்

இராணுவ ரீதியாக நாடுகளுக்கிடையில் இடம்பெறும் உறவுகள் இராணுவரீதியிலான உறவுகள் எனப்படும். யுத்தங்கள் ஏற்படும் சந்தர்ப்பங்களில் தமது பாதுகாப்பினை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக நாடுகள் இந்த யுத்த உபாய தொடர்பு முறைகளைக் கடைப்பிடிக்கின்றன. உதாரணமாக, முதலாம் இரண்டாம் உலக யுத்தங்களின்போது பல நாடுகள் இந்த உபாய முறையைப் பின்பற்றியமை குறிப்பிடத்தக்கது.

இராணுவ உபாய உறவுகள் மூலம் யுத்தப் பயிற்சி அளித்தல், அதற்குத் தேவையான விசேட வசதிகளை அளித்தல், யுத்த உபகரணங்களைப் பெற்றுக் கொடுத்தல், இராணுவ உதவி, வேறு மனிதாபிமான உதவிகள் (மருந்து வகை) போன்றன வழங்கப்படும். குறிப்பாக, உலக நாடுகளில் அதிகார சமநிலையை ஏற்படுத்துவதற்காக இந்த யுத்த உபாய உறவு முறைகள் அவசியமாகின்றன. இதன் மூலம் ஒரு நாடு, அல்லது சில நாடுகள் தமது யுத்த சக்தியை வலுப்படுத்துவதன் மூலம் ஏனைய நாடுகளின் அச்சு றுத்தல்களில் இருந்து தப்பிக்கலாம்.

## சர்வதேச உறவுகள் விருத்தியடைந்துள்ள பல்வேறு துறைகள்

பண்டைய காலம் தொட்டு சர்வதேச உறவுகள் வளர்ச்சி கண்ட போதிலும் அநேகமாக, அவை ஒரு சில துறைகளுக்குள் மாத்திரமே எல்லைப்படுத்தப்பட்டிருந்தன. உதாரணமாக; இந்தியா, இலங்கை ஆகிய நாடுகளுக்கிடையே இடம் பெற்ற கலாசாரத் தொடர்புகளையும் இலங்கை மற்றும் அரேபிய நாடுகளுக்கிடையிலான வர்த்தகத் தொடர்புகளையும் பிரதானமாகக் குறிப்பிடலாம். எனினும், இன்று சர்வதேச உறவுகள் பல்வேறு துறைகளுள் பரவியுள்ளதை அவதானிக்கலாம். எடுத்துக் காட்டாக, இராஜதந்திர உறவுகள், தொழில்நுட்ப உறவுகள், கல்விசார் உறவுகள் என்பவற்றைக் குறிப்பிடலாம்.

விஞ்ஞான மற்றும் தொழில்நுட்ப வளர்ச்சி காரணமாக தொலைத்தொடர்பு மற்றும் போக்குவரத்துத் துறையில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி உலகினை ஒரு பூகோளக் கிராமமாக மாற்றியுள்ளது. விசேடமாக அதிவேக விமானங்கள், ஜெட் விமானங்கள் மற்றும் தரைப் போக்குவரத்துத் துறையின் வளர்ச்சி போன்றன இதில் பாரிய தாக்கத்தைச் செலுத்தியுள்ளன. மேலும், இணையத்தளத்தினூடே நூல்கள் வாசித்தல் மற்றும் மின் நூலக (E - Library) வசதிகள் மூலம் சர்வதேச உறவுகள் மேலும் வளர்ச்சி காண்கின்றன. இதன் விளைவாக பூகோளக் கிராமமாக மாற்றம் கண்டுள்ள உலகம் இன்னும் சுருங்கிச் செல்லும் தன்மை இன்று ஏற்பட்டுள்ளது.



உரு 5.1 அதிவேக விமானம்




உரு 5.2 அதிவேக புகையிரதம்

## சர்வதேச உறவுகள் வளர்ச்சியடைவதில் தாக்கம் செலுத்திய காரணங்கள்

சர்வதேச உறவுகள் வளர்ச்சி கண்டுள்ள துறைகள் என்ன என்பது குறித்து நீங்கள் நன்கு விளங்கிக் கொண்டிருப்பீர்கள். அது போல், சர்வதேச உறவுகள் வளர்ச்சி காண்பதில் செல்வாக்குச் செலுத்திய அம்சங்கள் என்ன என்பது குறித்து கவனம் செலுத்துவோம்.

- ***சமமற்ற தன்மை:* ஒவ்வொரு நாட்டிலும் காணப்படும் வளங்களின் வேறுபாடு**

  *உ+ம் :* கனிய எண்ணெய் மத்திய தரைக்கடல் நாடுகளில் அதிகமாகக் காணப் படுவதும் ஏனைய நாடுகளில் அவை இன்மையும்.

- **அனைத்துத் தேவைகளையும் தமது நாட்டினுள்ளே உற்பத்தி செய்து கொள்ள முடியாமை**

உ+ம் :- இலங்கை கோதுமை, சீனி என்பவற்றை இறக்குமதி செய்தல்.

தமது நாட்டுக்குத் தேவையான அனைத்துப் பொருள்களையும் சேவைகளையும் அந்த நாட்டுக்குள் உற்பத்தி செய்ய முடியாத நிலை இன்று ஒவ்வொரு நாடும் எதிர்நோக்கும் பாரிய பிரச்சினையாக உள்ளது. இதனால் இன்னுமொரு நாட்டின் மீது தங்கி வாழ்வதற்கான சூழ்நிலை ஏற்பட்டுள்ளதன் காரணமாகச் சர்வதேச உறவுகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டியுள்ளது.

- **மேலதிக உற்பத்திகளை விற்பனை செய்து கொள்ளல்**

ஒரு நாடு தமது நாட்டின் வளங்களைக் கொண்டு பொருள்களையும் சேவைகளையும் உற்பத்தி செய்யும் போது அவை தமது நாட்டின் தேவையை விட அதிகமாகக் காணப்படலாம். அவ்வாறு மேலதிகமாகக் காணப்படும் பொருட்களை உற்பத்திப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ள நாடுகளுக்கு விற்பனை செய்ய அவை முனைகின்றன. இவ்வாறு பொருள்கள், சேவைகள் விற்பனை செய்தல் மூலம் சர்வதேச உறவுகள் மேலும் வளர்ச்சி காண்கின்றன.

- **போக்குவரத்து மற்றும் தொடர்பாடலின் விருத்தி**

இன்று தீவிர வளர்ச்சி கண்டுள்ள இரு துறைகளாகப் போக்குவரத்து மற்றும் தொடர்பாடலைக் குறிப்பிடலாம். அதன் விளைவாக முழு உலகமும் இன்று ஒரு கிராமமாக மாறியுள்ளதுடன் சர்வதேச உறவுகளும் வலுப்பெற்றுள்ளன. விரைவாகவும் இலகுவாகவும் போக்குவரத்து வசதிகளை பெற்றுக்கொள்ளல், விரைவான தகவல் பரிமாற்றங்கள் என்பன சர்வதேச உறவுகள் வேகமாக வளர்ச்சியடையக் காரணமாயின.

- **நவீன தொழில்நுட்பத்தினைப் பெற்றுக்கொள்வதன் அவசியம்**

விஞ்ஞானம் மற்றும் தொழில்நுட்பத்தின் துரித வளர்ச்சியின் பலனைப் பல நாடுகளும் தன்வயப்படுத்திக் கொண்டுள்ளன. எனினும் சில நாடுகளில் மந்தமான முறையிலேயே இவற்றின் வளர்ச்சி வேகம் ஏற்பட்டது. இதன் விளைவாக, அபிவிருத்தி அடைந்த மற்றும் அபிவிருத்தி குறைந்த நாடுகள் என நாடுகளுக்கிடையே இடைவெளியும் உண்டானது. அபிவிருத்தி குறைந்த நாடுகளது தொழில்நுட்ப வளர்ச்சி அபிவிருத்தி அடைந்த நாடுகளை விட மிகவும் மந்த நிலையிலேயே காணப்பட்டது. இதனால், இந்நாடுகளில் தொழில்நுட்ப முறைகளில் பற்றாக் குறையும் ஏற்பட்டது. இதனால், அபிவிருத்தியடைந்த நாடுகளது நவீன தொழில்நுட்ப கண்டு பிடிப்புகள், உபகரணங்கள், இயந்திர சாதனங்கள், தொழில்நுட்பவியல் உதவிகள் மற்றும் அறிவு என்பவற்றைப் பெற்றுக்கொள்வதற்கான தேவை குறை அபிவிருத்தி கொண்ட நாடுகளுக்கு ஏற்பட்டது.

- **அனர்த்தங்கள் மற்றும் இடர்களின்போது நிவாரணம் பெற்றுக் கொள்ளல்**

திடீர் அனர்த்தங்கள் அல்லது ஏனைய இடர்களின் போது அவற்றிற்கான நிவாரணங்களைப் பெற்றுக்கொள்ள வேண்டிய தேவை அனைத்து நாடுகளுக்கும் ஏற்படுகின்றன.

உ+ம் :- வெள்ளப்பெருக்கு, பூமியதிர்ச்சி, எரிமலை வெடித்தல், வரட்சி, மண்சரிவு, வறுமை, பட்டினி, சுனாமி, சூறாவளி போன்றன.

இத்தகைய அனர்த்தங்களின்போது சர்வதேச உறவுகள் கட்டியெழுப்பப்பட்டிருந்தால் மாத்திரமே அவசர மானிட நேய உதவிகளை வழங்குவதற்கு அரசுகள் முன்வரும்.

- **அரசியல், பொருளாதார, சமூக, கலாசாரத் தொடர்புகளை விருத்தி செய்து கொள்ளல்**

அரசாங்கங்கள் தாம் பின்பற்றும் அரசியல் கருத்துகள், பொருளாதாரக் கொள்கைகள் மற்றும் சமூக, கலாசார உறவுகள் போன்றவற்றை மேம்படுத்திக் கொள்ளவும் சர்வ தேச உறவுகள் முக்கியமாகின்றன. இதன் மூலம் நாடுகளுக்கிடையிலான நட்புறவுகள் வளர்ச்சி காண்பதுடன், வெளிநாட்டு நிதியுதவிகள், கடன்கள் போன்ற உதவிகளை வழங்குவதற்கும் சமூக வளர்ச்சிக்காக பல்வேறு வகையான உதவிகளைப் புரிவதற்கும் இச்சர்வதேச உறவுகளால் கூடுமானதாக இருக்கிறது. அதேவேளை, அரசியல் ரீதியாகச் சிறந்த நிலையினை அடைதல், அரசியல் ரீதியான தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளல், அரசியல் உரிமைகள் மற்றும் அது தொடர்பான கருத்துகள் தொடர்பான சிறந்த வழிகாட்டலுக்கும் இந்த சர்வதேச உறவுகள் முக்கியமாகின்றன. மேலும் அரசியல் உரிமைகள், கருத்துகள் போன்றவற்றைப் பாதுகாத்தல் செயற்பாடுகளும் சர்வதேச உறவுகள் மூலம் மேற்கொள்ளப்படுகின்றன.

### சர்வதேச உறவுகளின் இன்றைய நிலை

புராதன காலத்தில் சர்வதேச உறவுகள் வரையறுக்கப்பட்ட நோக்கங்களை அடைந்து கொள்வதற்காக மட்டுமே பேணப்பட்டன. ஆயினும் இன்று பல்வேறு நோக்கங்களை இலக்காகக் கொண்டே இச்சர்வதேச உறவுகள் பேணப்படுகின்றன.

சர்வதேச உறவுகளின் இன்றைய நிலையை அவதானிக்கும்போது, பலம் வாய்ந்த நாடுகள் பலவீனமான நாடுகள் மீது பல்வேறு வகையிலும் தாக்கம் செலுத்துவதைக் காணலாம். பொருளாதார, அரசியல், யுத்தவலு மற்றும் தொழில்நுட்ப அறிவு என்பவற்றின் மூலம் செல்வாக்குச் செலுத்துவது குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் உலக மகா யுத்தத்தின் பின்னர் அதிகார முகாம்களின் ஆதிக்கம் இல்லாமற் போனதால் எல்லா நாடுகளும் தமது வெளிநாட்டுக் கொள்கையில் நடுநிலை வகித்துச் செயற்படக்கூடிய சூழல் உருவாக்கப்பட்டிருந்தது. எனினும், பல்வேறு துறைகளில் பலம் வாய்ந்த நாடுகள் பலவீனமான நாடுகள் மீது

இன்றும் செல்வாக்குச் செலுத்துவதை அவதானிக்க முடிகின்றது. அவ்வாறு செல்வாக்குச் செலுத்தும் துறைகள் சில பின்வருமாறு,

- சர்வதேச வர்த்தகம்
- கடன் மற்றும் நிவாரணம் வழங்கல்
- பொருளாதார அபிவிருத்தி
- பாதுகாப்புத் துறை
- வேலைவாய்ப்பு வழங்கல்

இத்துறைகளினூடாக சர்வதேச சமூகம் இலங்கை மீது பல்வேறு வகையில் செல்வாக்குச் செலுத்துவதை அவதானிக்கலாம்.

### சர்வதேச உறவுகள் இலங்கையின் மீது செல்வாக்குச் செலுத்தும் விதம்

சர்வதேச உறவுகளது இன்றைய நிலையை அவதானிக்கையில், பிரதான அரசுகள் பலம் குன்றிய அரசுகள் மீது அழுத்தங் கொடுக்கும் நிலையை அவதானிக்க முடிகின்றது. அவை பொருளாதார, அரசியல், இராணுவ ரீதியிலான காரணிகளினூடாக இடம் பெறுகின்றன.

விசேடமாக, இலங்கை மீது மேற்கொள்ளப்படும் அழுத்தங்கள் பல்வகைத்தன்மை கொண்டனவாக உள்ளன. அதிகாரத்தில் இருக்கும் அரசாங்கத்தின் தன்மைக்கு ஏற்ப சர்வதேசத்தின் மூலம் செலுத்தப்படும் அழுத்தங்களும் வேறுபடுகின்றன. இலங்கையின் மீதான சர்வதேச அழுத்தங்கள் பின்வருமாறு காட்டப்பட்டுள்ளன.

### சர்வதேச வர்த்தகம்

இலங்கையின் பிரதான உற்பத்திப் பொருட்களுக்கு சர்வதேசச் சந்தையில் குறைந்த விலை நிர்ணயிக்கப்படுவதால், ஏற்றுமதியின் மூலம் குறைந்த வருமானமே கிடைக்கப் பெறுகிறது. ஒரு சில அபிவிருத்தியடைந்த நாடுகள் இலங்கையின் உற்பத்திகளைக் கொள்வனவு செய்து அவற்றை மீள் இறக்குமதி செய்வதால் நமது நாட்டிற்குக் கிடைக்க வேண்டிய பாரிய அந்நிய செலாவணி கிடைக்காமல் போகிறது.

இதனால் சர்வதேச அங்கத்தவர் என்ற வகையில் பல்வேறு வியாபார ஒப்பந்தங் களையும் நிலையான விலையினை பெற்றுக்கொள்வதற்கான நடவடிக்கைகளையும் இலங்கை மேற்கொண்டுள்ளது. எடுத்துக்காட்டாக, ஆடை ஏற்றுமதியின் போது அவற்றை அமெரிக்கா கொள்வனவாளர்களிடம் வழங்குவதற்கான உடன்படிக்கைகளில் இலங்கை கைச்சாத்திட்டுள்ளது.

எனினும், கடந்த காலங்களில் சில வியாபார ஒப்பந்தங்கள் நீக்கப்பட்டதன் காரணமாக இலங்கை சர்வதேச வர்த்தகத்தின் தாக்கத்திற்கு உள்ளாகியுள்ளது.
உதாரணம் (**GSP** வரிச் சலுகையை இரத்துச் செய்தமை).

## கடன் மற்றும் உதவிகளைப் பெற்றுக் கொள்ளல்

*கடன் மற்றும் உதவிகளைப் பெறுவதன் மூலமும் இலங்கை அரசு சர்வதேசத் தாக்கத்திற்கு உள்ளாகியுள்ளது. எடுத்துக்காட்டாக, கடன் மற்றும் உதவிகளைப் பெற்றுக் கொள்ளும் போது பல்வேறு நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ள வேண்டிய சூழல் ஏற்படுகிறது. இத்தகைய நிபந்தனைகளைப் பிரதான அரசுகள் மட்டும் விதிப்பதில்லை. மாறாக, கடன் மற்றும் உதவிகளை வழங்கும் பல்வேறு அமைப்புகளும் கூட நிபந்தனைகளை விதிக்கின்றன.*

*உ+ம் :- உலக வங்கி, சர்வதேச நாணய நிதியம்*

*நிபந்தனைகளுக்கு சில எடுத்துகாட்டுகள்*

- *பெயர் குறிப்பிடப்படும் செயற்பாடுகளுக்கு மட்டுமே கடன் அல்லது உதவியைப் பயன்படுத்த வேண்டும்.*
- *கடன் மற்றும் வட்டியைத் திருப்பிச் செலுத்தும் தவணைகள் தொடர்பாகக்குறுகிய காலப்பகுதியை வழங்குதல்.*
- *கடன் மற்றும் உதவி வழங்கும் நாட்டினது பௌதீக மற்றும் மனித வளங்களை உரிய திட்டங்களுக்காகப் பயன்படுத்தல் வேண்டும் என்பது*

### பொருளாதாரத் துறை

*பொருளாதார நடவடிக்கைகளின் போது இலங்கையானது ஒரு சில காலப்பகுதிகளுள் சிக்கல்களை எதிர்கொண்டுள்ளது. குறிப்பாக, ஆடைகளுக்கான **''கோட்டா''** முறை இரத்தாதல், கனிய எண்ணெய் விலை அதிகரிப்பு போன்ற பிரச்சினைகளை இலங்கை எதிர்கொண்டுள்ளது. இவ்வாறான நிலையின் கீழ் இலங்கையின் பொருளாதாரத்தை நிலைபெறச் செய்வதற்குப் பெரும் முயற்சி மேற்கொள்ள வேண்டி உள்ளது. அதனால், கடன் மற்றும் உதவிகளை அதிகளவில் பெற்றுக்கொள்ளல், திறைசேரி உண்டியல்களை விநியோகித்தல், வங்கி வட்டி வீதத்தை உயர்த்துதல் போன்ற செயற்பாடுகள் மூலம் பொருளாதாரத்தை ஸ்தீரப்படுத்துவதற்காக இலங்கை மத்திய வங்கி மற்றும் திறைசேரி போன்ற நிறுவனங்கள் பணிகளை முன்னெடுக்கின்றன.*

### தேசியப் பாதுகாப்பு

*தனது பாதுகாப்பினை உறுதிப்படுத்திக் கொள்வதற்கு ஒரு நாடு பெரும் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டியுள்ளது. குறிப்பாக, சென்ற காலப்பகுதியில் இலங்கையில் இடம்பெற்ற யுத்தம் காரணமாக தேசிய பாதுகாப்பினை உறுதிப்படுத்தும் பொருட்டு இலங்கை அரசு பெரும் முயற்சிகளை மேற்கொண்டது. இவ்வாறான நிலைமைகளின் போது நாடுகளிடமிருந்து உதவிகளைப் பெற வேண்டிய தேவை ஏற்படுகின்றது. ஆயுதங்களை வழங்குதல் அவற்றை அதிக விலைக்கு விற்பனை*

செய்தல், யுத்த உபாய அறிவுகளை வழங்காமை ஆகியன காரணமாக இலங்கையின் பாதிப்பினை உறுதிப்படுத்தும் செயற்பாடானது பெரும் சவாலாக இருந்தது. தேசியப் பாதுகாப்பினை முன்னெடுத்தல் உலக ரீதியாகவும் வெளிவாரியாகவும் மேற்கொள்ள வேண்டி இருப்பதால், அதற்காக முப்படைகளையும் பொலிஸ் படையையும் தயார் நிலையில் வைத்தல் அவசியமாகிறது.

### தொழில் வழங்குதல்

இலங்கைக்கான தொழிற் சந்தையினை நிர்மாணித்துக் கொடுப்பதில் மத்திய கிழக்கு நாடுகளும் தென் கொரியாவும் முக்கிய இடம் பெற்று விளங்குகின்றன. இதன் மூலம் இலங்கைக்குப் பெருமளவிலான அந்நியச் செலாவணி கிடைக்கப்பெறுவதுடன், பொருளாதாரத்திற்கும் பங்களிப்பு ஏற்படுகின்றது.

எனினும், தொழிற் சந்தைக்குத் தேவையான தொழில்களைப் பெற்றுக்கொள்ளும் போது தொழில் எண்ணிக்கையை எல்லைப்படுத்தல், வேலைவாய்ப்புக்கான தகு திகளை நிர்ணயித்தல், இலங்கைக்கு அனுப்பும் பணத்திற்காக வரையறைகளை வகுத்தல், தொழிலாளர்களைச் சித்திர வதைகளுக்கு உட்படுத்தல் மூலம் சில நாடுகள் இலங்கையில் பாரிய தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. எனினும், சில நாடுகள் மிகவும் நட்புறவுடன் தொழிற் சந்தைகளை இலங்கைக்கு உருவாக்கிக் கொடுத்துள்ளன.

### பிராந்திய அமைப்புகள்

சர்வதேச அமைப்புகள் தொடர்பாகக் கலந்துரையாடும் போது பிரதேச மட்டத் தில் செயற்படும் சர்வதேச அமைப்புகள் தொடர்பாக விசேட கவனம் செலுத்த வேண்டிய தேவை ஏற்படுகிறது. இப்பிராந்திய அமைப்புகள் புவியியல் வலயங்களை அடிப்படையாகக் கொண்டே ஏற்படுத்தப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பூகோள வலயத்தினுள்ளும் மேலும் பல உப வலயங்கள் உள்ளன. எடுத்துக்காட்டாக, ஆசியாக் கண்டத்தின் தென் ஆசிய உப வலயத்தைக் குறிப்பிட லாம். அந்த உப வலயத்தினுள் பிரதேச அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவை பிராந்திய அமைப்புகள் எனும் பொதுப் பெயரிலும் அழைக்கப்படுகின்றன.

பிராந்திய அமைப்புகள் தோற்றம் பெற்ற விதத்தை அவதானிக்கையில், அவை இரண்டு பிரதான நோக்கங்களின் அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டுள்ளன என்பது தெரிகிறது. அவையாவன,

- பாதுகாப்புநோக்கங்களை இலக்காகக் கொண்டு
- ஒத்துழைப்பினை இலக்காகக் கொண்டு

பாதுகாப்பு நோக்கங்களை இலக்காகக் கொண்டு ஏற்படுத்தப்பட்டுள்ள பிராந்திய அமைப்புகள் தொடர்பாக இப்பொழுது கலந்துரையாடுவோம்.

இரண்டாம் உலக யுத்தத்தின் பின் உலக அரசுகள் பலவும் பிரதான இரண்டு சக்திகளின் கீழ் அணி திரண்டன. அவை, ஐக்கிய அமெரிக்க தலைமையில் மேற்கு ஐரோப்பிய அணியாகவும் சோவியத் ரஷ்யா தலைமையில் கிழக்கு ஐரோப்பிய அணியாகவும் காணப்பட்டன. இந்த இரண்டு அணிகளும் பாதுகாப்பு இலக்குகளை அடிப்படையாகக் கொண்டு பிராந்திய அமைப்புகள் பலவற்றைத் தோற்றுவித்தன. அந்த வகையில் முதல் அமைப்பாக வடக்கு அத்திலாந்திக் உடன்படிக்கை அமைப்பு (North Atlantic Treaty Organization - NATO) என அழைக்கப்படும் நேட்டோ விளங்குகிறது.

நேட்டோ அமைப்பு ஆரம்பிக்கப்பட்டதற்கான பிரதான காரணம் மேற்கு ஐரோப்பிய நாடுகளின் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதற்காகும்.

இதைத் தொடர்ந்து கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் பாதுகாப்பின் பொருட்டு சோவியத் ரஷ்யா தலைமையிலான அணி வோர்ஸோ உடன்படிக்கை அமைப்பை (Warsaw Treaty Oragnization) உருவாக்கிக் கொண்டது. வோர்ஸோ அமைப்பு தோற்றம் பெற்றதன் பிரதான காரணம் நேட்டோ அமைப்பின் மூலம் மேற்கொள்ளப்படும் ஆக்கிரமிப்புகளுக்குப் பதிலடி கொடுப்பதற்காகும். இருப்பினும், சோவியத் ரஷ்யாவின் வீழ்ச்சியைத் தொடர்ந்து கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் பலம் குன்றியது. இதனால், வோர்ஸோ அமைப்பும் இல்லாமல் போனது. இன்று நேட்டோ அமைப்பு மட்டுமே செயற்பட்டு வருகின்றது.

பொருளாதார நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு பிராந்திய அமைப்புகள் தோற்றம் பெறுவதை இன்றைய அரசியலில் காணக்கூடியதாக உள்ளது. விசேடமாக இந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு அரச அமைப்புகள் மேற்கு ஐரோப்பாவில் முதன் முதலாக ஆரம்பம் கண்டன. 1957இல் தோற்றம் பெற்ற ஐரோப்பிய பொருளாதாரக் கட்டமைப்பு (European Economic Community) பிராந்திய அமைப்பினுள் தோற்றம் கண்ட முதலாவது பொருளாதார அமைப்பாக விளங்குகிறது. இதனை அடுத்து ஐரோப்பா சங்கம், லத்தீன் அமெரிக்க சுதந்திர வர்த்தக அமைப்பு என்பன தோற்றம் கண்டன.

ஆசிய வலயத்தினுள் ''ஆசியான்'' (Association of South East Asian Nations) அமைப்பு 1967 இல் தோற்றம் பெற்றது. 1987 இல் ஆசியா மற்றும் பசுபிக் பிராந்திய பொருளாதார ஒத்துழைப்புச் சங்கம் (Asian Pacific Economic Co-operation Forum) தோற்றம் பெற்றது. பொருளாதாரம் மற்றும் சமூக அபிவிருத்தியின் பொருட்டு தென்னாசிய நாடுகள் 1985 ஆம் ஆண்டு சார்க் அமைப்பைத் (South Asian Association for Regional Co-operation) தோற்றுவித்தன.

## சார்க் அமைப்பு (SAARC)

தென் ஆசிய வலய நாடுகள் இணைந்து தோற்றுவித்த அமைப்பே 'சார்க்' (South Asian Association for Regional Co-operation) ஆகும். இந்நாடுகள் தமது பிராந்திய ஒற்றுமைக்காகவே ''சார்க்'' அமைப்பைத் தோற்றுவித்தன.

சார்க் அமைப்பில் எட்டு நாடுகள் அங்கத்துவம் வகிக்கின்றன. அவையாவன,

- இந்தியா
- இலங்கை
- பாகிஸ்தான்
- பங்களாதேஷ்
- நேபாளம்
- பூட்டான்
- மாலைதீவு
- ஆப்கானிஸ்தான்




உரு 5.3

ஆப்கானிஸ்தானைத் தவிர ஏனைய 7 நாடுகளும் சார்க் அமைப்பு ஏற்படுத்தப்பட்ட போதே அங்கத்துவத்தைப் பெற்றுக்கொண்டன. அண்மையிலேயே ஆப்கானிஸ்தான் புதிதாக அங்கத்துவம் பெற்றுக் கொண்டது.

1985 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 08 ஆம் திகதி பங்களாதேசின் தலைநகர் டாக்காவில் அங்கத்துவம் பெற்ற நாடுகளது அரச தலைவர்கள் ஒன்று கூடி வரலாற்று சிறப்பு மிக்க சார்க் சாசனத்தில் கையொப்பம் இட்டனர். சார்க் அமைப்பு சாசனத்தில் அதன் தலைவர்கள் கையொப்பம் இடுவதற்கான காரணம், அவ்வமைப்பு ஏற்படுத்தப்பட்டமைக்கான அடிப்படைக் காரணங்களை நிறைவேற்றுவதற்காகவும் மற்றும் முன்னாள் பங்களாதேசின் பிரதமரான சியா உர் - ரஹ்மான் அவர்களை நினைவு கூறும் வகையிலுமாகும்.

சார்க் அமைப்பின் இலச்சினை மூலம் அங்கத்துவ நாடுகளது ஒற்றுமை வெளிப்படுத்தப்படுகிறது.




உரு 5.4

சார்க் நாடுகளது தேசியக் கொடிகள்




உரு 5.5

## சார்க் அமைப்பின் நோக்கங்கள்

- தென்னாசிய வலயத்திற்கு உட்பட்ட மக்களது சுகாதாரம் மற்றும் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்தல்
- சார்க் வலய நாடுகளது பொருளாதார, சமூக, கலாசார அபிவிருத்தியைத் துரிதப் படுத்துதல்
- சகல பிரசைகளும் கௌரவமாக வாழ்வதற்கான இடத்தினைப் பெற்றுக்கொடுத்தல்
- தெற்காசிய வலய மக்களின் ஒன்றிணைந்த தன்னம்பிக்கையை மேம்படுத்துதல்

- அங்கத்துவ நாடுகளது பிரச்சினைகளை விளங்கிக் கொள்ளல் மற்றும் அவற்றைக் கவனத்திற் கொண்டு அந்நியோன்யமாகச் செயற்படல்
- சமூக, பொருளாதார, கலாசார விஞ்ஞானத் துறைகளை மேம்படுத்தலும் அவற்றுக்கான நிதியுதவிகளை வழங்குதலும்
- ஏனைய நாடுகளுடனான உறவை மேம்படுத்தல்
- பொதுவானதும் முக்கியமானதுமான விடயங்கள் தொடர்பாக இடம்பெறும் சர்வதேச மாநாடுகளின்போது ஒற்றுமையுடன் செயற்படுதல்
- ஒத்த நோக்கங்கள் மற்றும் தேவைகளை அடிப்படையாகக் கொண்டு செயற்படும் வலய மற்றும் சர்வதேச அமைப்புகளுடன் ஒத்துழைப்புடன் செயற்படுதல்

## சார்க் அமைப்பின் செயற்பாடு

சார்க் அமைப்பின் அரச தலைவர்கள் மூலம் வருடத்துக்கு ஒருமுறையேனும் அல்லது அங்கத்துவ நாடுகள் அவசியமென தீர்மானங்கள் மேற்கொள்ளும் வேளைகளில் பலமுறையேனும் கலந்துரையாடல்கள் மேற்கொள்ளப்படல் வேண்டும் என அதன் சாசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அரச தலைவர்களின் மாநாடு இவ்வமைப்பின் பிரதான குழுவாகக் கருதப்படுகிறது. இதனைத் தவிர, அங்கத்துவ நாடுகளது வெளிநாட்டு அமைச்சர்களது குழுவும் வெளிநாட்டு செயலாளர்களது குழுவும் இதில் அடங்குகின்றன. இவ்வமைப்பின் சகல செயற்பாடுகளும் நேபாளத்தின் கத்மண்டு நகரில் அமைந்துள்ள செயலாளர் அலுவலகத்திலேயே இடம்பெறும்.




பிரதான சார்க் செயலகம்



சார்க் அரச தலைவர்களது மாநாடு

### சார்க் அமைப்பின் தற்போதைய நிலை

வேறு சர்வதேச மற்றும் வலய அமைப்புகளுடன் சார்க் அமைப்பை ஒப்பிட்டுப் பார்க்கையில், அங்கத்துவ நாடுகளுக்கிடையேயான உறவுகள் நெருக்கமானதாகத் தெரியவில்லை. சாாக் நாடுகளது விவசாய வளர்ச்சி, ஏற்றுமதி, கலாசார வளர்ச்சி, விளையாட்டு, சுகாதாரம், நலன்புரிச் சேவைகள் போன்ற துறைகள் அபிவிருத்தி செய்யப்படுதல் அவசியமாகும். அதற்குப் பிரதான காரணம் அனைத்து அங்கத்துவ நாடுகளும் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளாக காணப்படுகின்றமை ஆகும். உள்நாட்டு அரசியல் பிரச்சினைகள் மற்றும் யுத்த நிலைமைகள் என்பன பெரும்பாலான அங்கத்துவ நாடுகளது பிரச்சினைகளாக உள்ளன. போதைப் பொருள் ஒழிப்பு, தீவிரவாத ஒழிப்பு போன்றவற்றிற்காக அங்கத்துவ நாடுகள் அதிக கவனம் செலுத்த வேண்டியதாக உள்ளது. இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையேயான விரிசல் நிலை சார்க் அமைப்பின் எதிர்கால நடவடிக்கைகளுக்கு பெரும் சவாலாக அமைந்துள்ளது.

வலயத்தின் அங்கத்துவ நாடுகளுக்கிடையே சுதந்திர வியாபாரச் சந்தை ஒன்றினை ஏற்படுத்திக் கொள்ளல், தொழில்நுட்ப அறிவு பரிமாற்றத்தினூடாக நவீன உலகத்தோடு உறவினை ஏற்படுத்திக் கொள்ளல், சுற்றுலாத் துறையை விருத்தி செய்தல், சூழல் பாதுகாப்பிற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளல் ஆகியன குறித்து செயற்பட வேண்டியுள்ளது. அதேவேளை, இயற்கை அனர்த்தங்களைக் குறைப்பதற்கான வேலைத் திட்டங்களை முன்னெடுத்தல், அபிவிருத்திக்கான நோக்கங்களைப் பூர்த்தி செய்து கொள்வதும் அவசியமாகின்றது. மேலும், ஐரோப்பிய நாடுகளின் பல்வேறு தாக்கங்களிலிலும் இருந்து பாதுகாப்புப் பெறும் பொருட்டு தமக்கே உரித்தான பொருளாதாரக் கொள்கை ஒன்றை ஏற்படுத்திக் கொள்வது குறித்துக் கவனம் செலுத்துவதும் முக்கியமாகின்றது.

## சார்க் நாடுகளுக்கிடையே ஏற்படுத்திக் கொண்டுள்ள ஒப்பந்தங்கள்

1. SAPTA தென்னாசிய நாடுகளது முன்னுரிமை வர்த்தக ஒப்பந்தம் - South Asian Preferential Trade Agreement
2. SAFTA தென்னாசிய நாடுகளது சுதந்திர வர்த்தக ஒப்பந்தம் - South Asian Free Trade Agreement

**தென்னாசிய நாடுகளது வர்த்தக ஒப்பந்தம்** SAPTA

**ஆரம்பம்** - 7. 12. 1995

**நோக்கம்**

- வலய நாடுகளின் வர்த்தகத்தை மேம்படுத்தல்.
- வளங்களைச் செயற்றிறன் மிக்கதாகப் பயன்படுத்தல்.
- தென்னாசிய நாடுகளுக்கு மட்டுப்படுத்தப்பட்ட கவர்ச்சிகரமான வியாபாரக் கொள்கை.
- வரிச் சலுகையைப் பெற்றுக் கொடுத்தல்

**தென்னாசிய நாடுகளது சுதந்திர வர்த்தக ஒப்பந்தம்** (SAFTA)

**ஆரம்பம்** - 1. 1. 2006

**நோக்கம்**

- வலய நாடுகளுக்கிடையே சுதந்திர வர்த்தக வலயத்தை உருவாக்கல்
- வலய நாடுகளது பொருளாதார ஒத்துழைப்பை உறுதிப்படுத்தல்
- ஒவ்வொரு நாட்டினதும் தேசிய பொருளாதார வளர்ச்சியினைத் துரிதப்படுத்தல்
- வலய நாடுகளது உற்பத்திச் செயற்பாட்டை மேம்படுத்தல்
- ஊழியச் சந்தை வாய்ப்புகளை விரிவாக்கல்
- போட்டி முறையின் மூலம் உயர் தரத்திலான பொருட்களை உற்பத்தி செய்தல்

## சார்க் அமைப்பு வேறு சர்வதேச அமைப்புகள் மற்றும் வலய அமைப்புகளுடன் ஏற்படுத்திக் கொண்டுள்ள தொடர்புகள்

சார்க் அமைப்பானது உலகிலுள்ள பல்வேறு வலய மற்றும் சர்வதேச அமைப்புகளுடன் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டுள்ளது. இத்தகைய தொடர்புகள் மூலம் வலய மற்றும் சர்வதேச ஒத்துழைப்பினைப் பெறும் வாய்ப்பு உருவாகிறது. அத்தகைய அமைப்புகள் பல கீழே காட்டப்பட்டுள்ளன.

சார்க் - உங்டாட் (UNCTAD)

சார்க் - யுனிசெப் (UNICEF)

சார்க் - ஐக்கிய நாடுகள் சபையின் அபிவிருத்தித் செயற்றிட்டம் (UNDP)

சார்க் - கொழும்புத் திட்டம் (COLOMBO PLAN)

## ஆசியான் அமைப்பு (ASEAN)

ஆரம்பம் - 1967

தலைமையகம் - இந்தோனேசியாவின் ஜகர்த்தா நகர்

அங்கத்துவ நாடுகள் - இந்தோனேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, பிலிபைன்ஸ், மலேசியா, வியட்னாம், புரூனை, மியன்மார், லாவோஸ், கம்போடியா.

**நோக்கம்**

- ஒத்துழைப்புடனான ஒன்றுபட்ட பொருளாதார முறையை அங்கத்துவ நாடுகளில் செயற்படுத்தல்
- பரஸ்பர உதவியுடனும் ஒத்துழைப்புடனும் ஆராய்ச்சி துறைகளை மேம்படுத்தல்
- விவசாய கைத்தொழில் துறைகளினது வளர்ச்சிக்காக ஒன்றுபடுதல்
- அங்கத்துவ நாடுகளது வர்த்தக நடவடிக்கைகளை மேம்படுத்துவதுடன், சர்வதேச வர்த்தக நடவடிக்கைகளின்போது ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான வழிகளை மேம்படுத்தல்
- அங்கத்துவ நாடுகளது மனித வாழ்க்கையை மேம்படுத்தும் வகையில் தொடர்பாடல் துறையை வளர்ச்சி காணச் செய்தல்

## கொழும்புத் திட்டம் (Colombo plan)

தென் மற்றும் தென்மேல் ஆசிய நாடுகளது பொருளாதார மற்றும் சமூக அபிவிருத்தியின் பொருட்டு ஏற்படுத்தப்பட்ட திட்டமே கொழும்புத் திட்டம் எனப்படுகிறது. 1950 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பொதுநலவாய வெளிநாட்டு அலுவல்கள் அமைச்சர்களின் மாநாட்டில் இடம்பெற்ற கலந்துரையாடலுக்கு அமைவாக கொழும்புத் திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. அப்போது இலங்கையின் நிதி அமைச்சராக இருந்த J.R. ஜயவர்தன அவர்கள் மற்றும் அவுஸ்ரேலியப் பிரதிநிதியான சேர். பர்சி ஸ்பென்டர் அவர்களது தலைமையில் இவ்வமைப்பு ஆரம்பிக்கப்பட்டது. அவ்வமைப்பின் இலச்சினை கீழே காட்டப்பட்டுள்ளது.




பொதுநலவாய அமைப்பு உரித்தாகும் நாடுகளது அங்கத்தவர்களது ஒத்துழைப்பின் கீழ் இந்த அமைப்பு ஆரம்பிக்கப்பட்டது. பின்னர் அங்கத்துவ நாடுகளின் எண்ணிக்கை 27 ஆக உயர்ந்தது.

## கொழும்புத் திட்டத்தின் அங்கத்துவ நாடுகள்

- இலங்கை
- ஜப்பான்
- புரூனை
- அவுஸ்திரேலியா
- நியூசிலாந்து
- மியன்மார்
- மொங்கோலியா
- மலேசியா
- மாலைதீவு
- பீஜித்தீவு
- கொரியா
- லாஓஸ்
- பாகிஸ்தான்
- ஐக்கிய அமெரிக்கா
- நேபாளம்
- பிலிப்பைன்ஸ்
- சிங்கப்பூர்
- ஈரான்
- பபுவா நியுகினி
- ஆப்கானிஸ்தான்
- இந்தியா
- சவுதி அரேபியா
- வியட்னாம்
- இந்தோனேசியா
- தாய்லாந்து
- பூட்டான்
- பங்களாதேஷ்

இந்த அமைப்பின் அங்கத்துவ நாடுகள் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளின் தேசிய வேலைத்திட்டங்களுக்கான நன்கொடைகளை வழங்குகின்றன. விவசாயம், கல்வி, சுகாதார சேவைகள், தொடர்பாடல் போன்ற அம்சங்களுக்குச் சேவைகள் வழங்குதல், பயிற்சிக்காகப் புலமை பரிசில்கள் வழங்குதல், ஆய்வு உபகரணங்களை வழங்குதல் என்பன இதன் மூலம் இடம் பெறுகின்றன.

இலங்கையின் பொருளாதார மற்றும் சமூக வளர்ச்சிக்காக இயந்திரங்கள், வாகனங்கள், விவசாய உபகரணங்கள், மீன்பிடி உபகரணங்கள், தொழில்நுட்ப அறிவு, துறைசார் பயிற்சிகள் வழங்குதல், புலமைப் பரிசில்கள் வழங்குதல், கல்விக்கான உபகரணங்களை வழங்குதல் போன்றனவும் இடம் பெறுகின்றன.

### பிம்ஸ்டெக் (BIMSTEC)

பல்நோக்கு தொழினுட்ப மற்றும் பொருளாதார ஒத்துழைப்புக்கான வங்காள விரி குடா முயற்சி

ஆரம்பம் - 1988

மத்திய நிலையம் - பங்களாதேஷின் டாக்கா

அங்கத்துவ நாடுகள் ஏழு ஆகும். இதில் தென்னாசிய நாடுகளிலிருந்து பங்களாதேஷ், பூட்டான், இந்தியா, நேபாளம், இலங்கை ஆகிய ஐந்து நாடுகளும் தென்கிழக் காசிய நாடுகளிலிருந்து மியன்மார், தாய்லாந்து ஆகிய இரண்டு நாடுகளும் அடங்கும். (நேபாளம், பூட்டான் ஆகிய நாடுகள் 2005 இல் இணைந்து கொண்டன.)

**நோக்கம்**

- அங்கத்துவ நாடுகள் ஒன்றிணைந்து பொருளாதார ஒத்துழைப்பு மற்றும் தொழில்னுட்ப அறிவைப் பகிர்ந்து கொள்ளல்.

### சர்வதேச அமைப்புகள்

சமூகத்தில் வாழும் எமக்கு அன்றாடச் செயற்பாடுகளை மேற்கொள்வதற்கு ஏனையோரின் உதவியும் ஒத்துழைப்பும் அவசியமாகின்றன. அதேபோன்று நாடுகள் தமது செயற்பாடுகளை மேற்கொள்வதற்கும் அதன் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்கும் ஏனைய நாடுகளது ஒத்துழைப்பும் உதவியும் அவசியமாகின்றன. அவ்வகையில் பல நாடுகள் ஒன்றிணைந்து தமது பொதுத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக உடன்படிக்கை மூலம் இணக்கப்பாடுகள் கட்டியெழுப்பப்பட்டமை சர்வதேச அமைப்புகளின் தோற்றத்திற்கு வழிவகுத்தது.

உலகில் பல சர்வதேச அமைப்புகள் தோற்றம் கண்டுள்ளன. இவற்றின் மூலம் அனைத்து நாடுகளுக்கும் தேவையான உதவிகள் வழங்கப்படுகின்றன. குறிப்பாக ஐக்கிய நாடுகள் சபை மூலம் சகல அங்கத்துவ நாடுகளுக்கும் மிகப் பாரியளவில் சேவை ஆற்றப்படுகின்றது. ஐக்கிய நாடுகள் சபை, அதன் இணை ஸ்தாபனங்கள், வலய அமைப்புகளின் செயற்பாடுகள் தொடர்பாக அடுத்து அறிந்து கொள்வோம்.

### ஐக்கிய நாடுகள் சபை (UN)

இரண்டாம் உலகப் போர் முடிவடைந்ததைத் தொடர்ந்து அவ்வாறான ஒரு யுத்தம் மீண்டும் ஏற்படுவதைத் தவிர்க்கும் வகையிலேயே ஐக்கிய நாடுகள்

சபை தாபிக்கப்பட்டது. இரண்டாம் உலகப் போரின்போது இலட்சக்கணக்கானோர் கொல்லப்பட்டனர். பலர் ஊனமுற்றவர்களாக ஆக்கப்பட்டனர். விலைமதிக்க முடியாத சொத்துகள் அழிவடைந்தன. இதனால் எதிர்காலத்தில் இத்தகைய நிலைமைகளின்பால் நாடுகள் ஈடுபடக் கூடாது என்பதில் உலகத் தலைவர்களின் கவனம் திரும்பியது. அக்காலத்தில் பிரதான நாடுகளாகவிருந்த ஐக்கியஅமெரிக்கா, சோவியத் ஒன்றியம், பெரிய பிரித்தானியா ஆகிய நாடுகளது தலைவர்கள் இதில் முன்னின்று செயற்பட்டனர். இதன் விளைவாக 1945 இல் 50 நாடுகள் ஒனிறணைந்து ஐக்கிய நாடுகள் சபையைத் தோற்றுவிப்பதற்கான மாநாடு ஐக்கிய அமெரிக்காவின் சான்பிரன்சிஸ்கோ நகரில் இடம்பெற்றது. 1945 ஜுன் 26 ஆம் திகதி இந்நாடுகள் கைச்சாத்திட்டதன் பின்னர் ஐக்கிய நாடுகள் சபையின் உடன்படிக்கைகள் பிரகடனப்படுத்தப்பட்டன. இதன்படி ஐக்கிய நாடுகள் சபை 1945. 10. 24 ஆந் திகதியன்று தாபிக்கப்பட்டது.

### ஐக்கிய நாடுகள் சபையின் நோக்கங்கள்

- உலக சமாதானத்தையும் பாதுகாப்பையும் முன்னெடுத்தல்
- சேதங்களுக்கிடையேயான நட்புறவை வளர்த்தல்
- பொருளாதார, சமூக, கலாசார மற்றும் மானிடப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு உதவுதல்
- மனித உரிமைகளைப் பாதுகாத்து உறுதிப்படுத்தல்
- இந்நோக்கங்களை அடைந்துகொள்ளும் பொருட்டு உலகின் மத்திய நிலையமாகச் செயற்படுதல்

### ஐக்கிய நாடுகள் சபையின் கட்டமைப்பு



### பொதுச் சபை

- ஐக்கிய நாடுகள் சபையின் அனைத்து நாடுகளையும் பிரதிநிதித்துவப்படுத்தும் அமைப்பே பொதுச் சபையாகும்.
- ஒவ்வொரு அங்கத்துவ நாட்டிற்கும் ஒரு வாக்கு உரித்துடையது.
- வருடத்திற்கு ஒரு முறை கூடும். அதிகமான அங்கத்தவர்களது வேண்டுகோளின்படி விசேட கூட்டங்கள் நடாத்துவதற்கு அனுமதியுண்டு.

### அதிகாரங்களும் பணிகளும்

- ஐக்கிய நாடுகள் சபையின் கொள்கைகளுக்கு அமைவாக முன்வைக்கப்படும் எந்தவொரு விடயம் குறித்தும் கலந்துரையாடல் மேற்கொள்ளப்பட்டு தீர்மானம் எடுத்தல்.
- ஆயுதப் பரிகரணம், ஆயுதக் கட்டுப்பாடு தொடர்பான கொள்கைகள், சர்வதேச சமாதானம் மற்றும் பாதுகாப்பு குறித்து உரிய கொள்கைகளை அவதானத்திற் கொள்ளல்.
- பாதுகாப்புச் சபை மற்றும் ஏனைய நிறுவனங்களிலிருந்து கிடைக்கும் அறிக்கை களை மீளாய்வு செய்தல்.
- ஐக்கிய நாடுகள் சபையின் வரவு செலவுத்திட்ட அறிக்கையை நிறைவேற்றல்.
- பாதுகாப்புச் சபைக்கு நிரந்தரமற்ற உறுப்பினர்களைத் தெரிவு செய்தல், பொருளாதார மற்றும் சமூக அலுவல்கள் சபைக்கு அங்கத்தவர்களைத் தெரிவு செய்தல், பாதுகாப்புச் சபையின் ஆலோசனைக்கமைவாக செயலாளர் நாயகத்தைத் தெரிவுசெய்தல்.

### பாதுகாப்புச் சபை

- 15 நாடுகள் அங்கத்துவம் பெறும் இச்சபையில் 5 நாடுகள் நிரந்தர உறுப்பு நாடு களாக விளங்குகின்றன. அவையாவன,

1. சீனா
2. பிரான்ஸ்
3. ரஷ்யா (சோவியத் யூனியன்)
4. பெரிய பிரித்தானியா
5. ஐக்கிய அமெரிக்கா

- இரண்டு வருட காலப்பகுதிக்காக நிரந்தரமற்ற 10 நாடுகள் பொதுச் சபையினால் தெரிவு செய்யப்படும்.

- நடைமுறை தொடர்பான தீர்மானங்கள் 9 வாக்குகளால் நிறைவேற்றப்படல் வேண்டும். இதனுள் 5 நிரந்தர உறுப்பினர்களது வாக்குகளும் உள்ளடக்கப்படல் வேண்டும்.
- தீர்மானங்கள் மேற்கொள்கையில் இரத்து அதிகாரமானது நிரந்தர உறுப்பு நாடு களுக்கு மட்டுமே உரித்துடையதாக இருக்கும்.

**அதிகாரங்களும் பணிகளும்**

- சர்வதேச சமாதானத்தையும் ஒற்றுமையையும் பேணல்
- சர்வதேசப் பிரச்சினைகளுக்கு ஏதுவாக அமையும் சகல காரணிகளையும் ஆராய்தல்
- அவ்வாறான பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்வதற்கான உடன்படிக்கைகளையும் கருத்துகளையும் முன்வைத்தல்
- ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதிராக நடவடிக்கை மேற்கொள்ளல்
- ஆயுதப் பாவனைகளைக் கட்டுப்படுத்தும் பொருட்டு திட்டங்களை மேற்கொள்ளல்

**பொருளாதார மற்றும் சமூக சபை**

- அங்கத்துவ நாடுகள் 54 ஆகும். ஒரு நாட்டினது பதவிக்காலம் 3 வருடங்களாகும். ஒவ்வொரு மூன்று வருடத்திற்கும் ஒரு முறை 18 அங்கத்தவர்கள் பதவி விலக அதற்காக புதிய 18 அங்கத்தவர்கள் தெரிவு செய்யப்படுவர்.

**அதிகாரங்களும் பணிகளும்**

- மனித உரிமைகளைப் பாதுகாப்பதற்காகச் செயற்படுதல்
- சர்வதேச ரீதியாக இடம்பெறும் பிரதான பொருளாதார மற்றும் சமூக ரீதியான விடயங்கள் சம்பந்தமாகப் பேச்சுவார்த்தை நடாத்துதல்
- சர்வதேச மாநாடுகளை நடாத்துதல்
- ஐக்கிய நாடுகளின் விசேட தாபனங்களுடன் உடன்படிக்கைகளை ஒழுங்குபடுத்தல்
- சபைக்குரிய நடவடிக்கைகள் தொடர்பாக அரச சார்பற்ற அமைப்புகளிடம் ஆலோச னைகளைப் பெற்றுச் செயற்படல்.

**நம்பிக்கைப் பொறுப்புச் சபை**

நம்பிக்கைப் பொறுப்புச் சபை பின்வரும் ஐக்கிய நாடுகள் உறுப்பினர்களைக் கொண்டமைந்ததாகும்.

- நம்பிக்கை ஆள்புலன்களை நிர்வகிக்கின்ற உறுப்பினர்கள்.

- நம்பிக்கை ஆள்புலன்களை நிர்வகிக்காத நிரந்தர உறுப்புடைய பாதுகாப்புச் சபை உறுப்பாண்மை
- பொறுப்பாண்மைச் சபையினால் 3 வருட காலப்பகுதிக்கென தெரிவு செய்யப்படும் உறுப்பினர்கள்.

**அதிகாரங்களும் பணிகளும்**

- நிருவகிக்கின்ற நம்பிக்கை பொறுப்பு பிரதேசத்தினால் சமர்ப்பிக்கப்படும் தீர்மானங்களை கருத்திற் கொள்ளல்
- மனுக்களை ஏற்று நிருவகிக்கின்ற நம்பிக்கைப் பிரதேசத்தினால் கலந்தாலோச னையுடன் பரீட்சித்தல்.
- அந்த ஆள்புலங்களுக்குச் செல்லுதல்
- நம்பிக்கைப் பொறுப்பாண்மை உடன்பாட்டு நியதிகளுக்கமைய நடவடிக்கை எடுத்தல்

**சர்வதேச நீதிமன்றம்**

- ஐக்கிய நாடுகள் தாபனத்தின் பிரதான நீதித்துறை நிறுவனமாகச் சர்வதேச நீதிமன்றம் விளங்குகின்றது.
- அங்கத்துவ நாடுகளது முறைப்பாடுகளைச் சர்வதேச நீதிமன்றத்திற்குச் சமர்ப்பிக்கலாம்.
- அங்கத்துவ நாடுகள் இதன் தீர்ப்புக்கு இனங்கியிருக்கத் தவறினால் இதனைப் பாதுகாப்புச் சபையின் கவனத்திற்குக் கொண்டுவரலாம் என்பதுடன் பாதுகாப்புச் சபை தீர்ப்பை அமுல்செய்ய சிபாரிசுகளைச் செய்யலாம்.
- பொதுச் சபை மற்றும் பாதுகாப்புச் சபை மூலம் 9 வருடத்திற்கென தெரிவு செய்யப்படும் 15 நீதிபதிகளைக் கொண்டது.
- முன்பு இலங்கை சார்பில் வீரமந்திரி சர்வதேச நீதிமன்ற நீதிபதியாக இருந்தார்.

**அதிகாரங்களும் பணிகளும்**

- ஐக்கிய நாடுகள் சபை மற்றும் அதன் ஏனைய நிறுவனங்களுக்கு நீதி ஆலோசனை களை வழங்குதல்.
- அங்கத்துவ நாடுகள் மூலம் முன்வைக்கப்படும் குற்றச்சாட்டுகளை விசாரணை செய்தல்.

- அங்கத்துவ நாடுகள் முன் வைக்கும் முறைப்பாடுகளுக்குரிய விசாரணைகளில் பங்குபற்றுவதாயின் சர்வதேச நீதிமன்றம் வழங்கும் தீர்ப்பை ஏற்றல்.

## செயலகம்

- ஐக்கிய நாடுகள் தாபனத்தின் பிரதான நிர்வாக காரியாலயமாகும்.
- செயலாளர் நாயகம் பிரதான நிர்வாகியாவார். அவர் 05 வருட பதவிக் காலத்திற்கென பொதுச் சபையினால் நியமிக்கப்படுவார். ஒருவர் இரண்டு தடவைகள் மாத்திரமே பதவியில் இருக்கலாம்.
- சர்வதேசப் பாதுகாப்பிற்கும் சமாதானத்திற்கும் அச்சுறுத்துலாக விளங்கும் எந்த வொரு விடயத்தையும் பாதுகாப்புச் சபைக்குச் சமர்ப்பிப்பதற்கான அதிகாரம் செயலகத்துக்கு உண்டு.
- செயலகமானது தமக்காக அன்றி ஐக்கிய நாடுகள் அமைப்புக்காகவே செயற்படல் வேண்டும்.
- வெளிநாட்டுத் தூதுவர் சேவைக்குரிய சகல சலுகைகளும் செயலக அலுவலர்களுக்கு உண்டு.

## அதிகாரங்களும் பணிகளும்

- அமைப்பின் ஆண்டறிக்கையைத் தயாரித்து முன்வைத்தல்
- ஐக்கிய நாடுகள் சபையின் அமைதிப் படையை நிர்வகித்தல்
- பிரச்சினைத் தீர்வின் போது சமாதானத் தூதுவனாகத் தலையிடுதல்
- ஐக்கிய நாடுகளின் விடயங்களுக்கேற்ற வகையிலான சர்வதேச மாநாடுகளைக் கூட் டுதல்
- குடியேற்ற சேவைகளைக் கொண்டு நடாத்துதல்

## ஐக்கிய நாடுகள் தாபனத்தின் இணை அமைப்புகள்

ஐக்கிய நாடுகள் தாபனத்தின் பொருளாதார சமூக சபையுடன் இணைந்த நாடுகளது பொருளாதார, சமூக அபிவிருத்தி என்பவற்றோடு மனித உரிமைகளைப் பாதுகாப்பதை நோக்காகக் கொண்டு செயற்படும் பல்வேறு நிறுவனங்கள் காணப்படுகின்றன. அவையாவன,

- உணவு மற்றும் விவசாய அமைப்பு (FAO)
- சர்வதேசத் தொழிலாளர் அமைப்பு (ILO)
- ஐக்கிய நாடுகளின் அபிவிருத்தி வேலைத் திட்டம் (UNDP)
- ஐக்கிய நாடுகள் தாபனத்தின் சர்வதேச சிறுவர் நிதியம் (UNICEF)
- ஐக்கிய நாடுகளது கல்வி, விஞ்ஞான மற்றும் கலாசார தாபனம் (UNESCO)
- புனரமைப்பு மற்றும் அபிவிருத்திக்கான சர்வதேச வங்கி (IBRD)
- சர்வதேச நாணய நிதியம் (IMF)
- ஐக்கிய நாடுகள் சனத்தொகை நிதியம் (UNFPA)
- உலக உணவு வேலைத் திட்டம் (WFP)
- உலக சுகாதார அமைப்பு (WHO)
- ஐக்கிய நாடுகளின் அகதிகளுக்கான ஆணையாளர் அமைப்பு (UNHCR)

## தெரிவு செய்யப்பட்ட சில அமைப்புகள்

| கூட்டிணைந்த அமைப்பு | நோக்கம் | இலச்சினை |
|---|---|---|
| UNESCO<br>ஆரம்பம் - 1945 | • அங்கத்துவ நாடுகளின் கல்வி நிலை, தொழில்நுட்பம், தொலைத் தொடர்பு பிரிவுகளின் அபிவிருத்தி<br>• சர்வதேச அறிவு விருத்தி மூலம் சமாதானத்தை ஏற்படுத்தல். |  |
| UNICEF<br>ஆரம்பம் - 1946 டிசம்பர் 11 | • சிறுவர் உரிமைகளை மேம்படுத்தல் மற்றும் உறுதிப்படுத்தல்<br>• பூரண சிறுவர் அபிவிருத்தியை மேம்படுத்தல்<br>• சிறுவர் அபிவிருத்திக்காக குறித்த நாடு, ஐக்கிய நாடுகள் வேறு நிறுவனங்கள் மற்றும் அரச சார்பற்ற அமைப்பு களுடன் இணைந்து செயற்படுதல். |  |

| | | |
|---|---|---|
| UNDP<br><br>ஆரம்பம் - 1965 | • அபிவிருத்தி அடையும் நாடுகளின் பொருளாதார, சமூக விருத்தியினைத் துரிதப்படுத்துவதற்காக உதவுதல்.<br>• அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளின் தேசிய அபிவிருத்தித் திட்டங்களுக்கு தொழில்நுட்ப உதவிகளை வழங்கல்.<br>• சக்தி வலு விருத்தி மற்றும்புவியியல் ரீதியான அபிவிருத்தியை ஏற்படுத்தல். | |
| UNHCR<br><br>ஆரம்பம் - 1950 டிசம்பர் 14 | • அகதிகளுக்கான சர்வதேச பாதுகாப்பினை வழங்குதல்<br>• அகதிகளின் பிரச்சினைகளைத் தீர்த்தல்<br>• அகதிகளை மனிதாபிமான முறையில் நடாத்துதல்.<br>• அகதிகள் தமது சமூகத்துடன் இணைந்து வாழ்வதற்கான ஆரம்பச் செயற்பாடுகளை மேற்கொள்ளல். | |
| UNFPA<br><br>ஆரம்பம் - 1969 | • அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளது சனத்தொகைப் பிரச்சினைகளுக்கு உதவுதல்<br>• அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளது சனத்தொகைக் கட்டுப்பாடு தொடர்பான வேலைத்திட்டத்திற்கு நிதி வழங்குதல்<br>• அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளின் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காகச் செயற்படுதல் | |
| WFP<br><br>ஆரம்பம் - 1961 | • வறுமையையும் பட்டினியையும் இல்லாதொழித்தல்<br>• பொருளாதார மற்றும் சமூக அபிவிருத்தியை உறுதிப்படுத்தல்<br>• அனர்த்தங்களில் சிக்கியோருக்கு உதவுதல் | |

| | | |
|---|---|---|
| ILO<br><br>ஆரம்பம் - 1919<br><br>(*1946* இல் ஐக்கிய நாடுகளின் இணை நிறுவனமானது) | • தொழிலாளர்களது சமூக அபிவிருத்தி<br>• தொழிலாளர்களது சேவைகள், மற்றும் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு சர்வதேசக் கொள்கைகள் மற்றும் செயற்றிட்டங்களை வகுத்தல் | |
| FAO<br><br>ஆரம்பம் - 1945 | • கிராமிய மக்களின் போசாக்கு மற்றும் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல்<br><br>• விவசாய மேம்பாட்டுக்காகச் செயற்படுதல் | |
| WHO<br><br>ஆரம்பம் - 1948 | • சகலருக்கும் உயர் சுகாதாரச் சேவை வழங்குவதற்குச் செயற்படுதல்.<br><br>• நோய்களற்ற சிறந்த தேகாரோக்கியமும் மனநிலையும் உடைய சுகாதார நிலையை உறுதிப்படுத்தல். | |
| IBRD<br><br>ஆரம்பம் - 1944 | • அங்கத்துவ நாடுகளது மக்கள் சிறந்த வாழ்க்கைத் தரத்தைக் கொண்டு விளங்குவதற்குப் பொருளாதார மற்றும் சமூக அபிவிருத்திக்கு உதவுதல். | |
| IMF<br><br>ஆரம்பம் - 1944 | • சர்வதேச ரீதியாக நிதி ஸ்திரத் தன்மையையும் முறையான நாணய பெறுமதி முறையையும் மேற்கொள்ளல்.<br>• நாடுகளிடையே பல தரப்பினரிடையேயும் கொடுப்பனவு முறையை ஆரம்பித்தல்<br>• சர்வதேச வர்த்தகத்தை விரிவுபடுத்துவதற்கான வசதிகளை செய்தல். | |

## பொதுநலவாய அமைப்பு (Common Wealth)

இரண்டாம் உலக யுத்தம் நிறைவடைந்ததன் பின்னர் பிரித்தானிய காலனித்துவத்தின் கீழ் இருந்த நாடுகளுக்கு சுதந்திரம் வழங்கப்பட்டது. அவ்வாறு சுதந்திரம் பெற்ற நாடு களுடன் கொண்டிருந்த தொடர்புகளை மேலும் வளர்த்துக் கொள்ளும் பொருட்டு 'பிரித்தானிய பொதுநலவாய அமைப்பு' எனும் அமைப்பு தோற்றுவிக்கப்பட்டது. ஆரம்பத்தில் ஆசியா, ஆபிரிக்கா நாடுகள் இதில் அங்கத்துவத்தைப் பெற்றுக் கொண்டதன் காரணமாக அதன் பெயர் 'பொதுநலவாய அமைப்பு' என மாற்றப்பட்டது. 1911 இல் பெரிய பிரித்தானியா மூலம் அதன் காலனித்துவத்தின் கீழ் இருந்த நாடுகள் பொதுப் பிரச்சினைகளைக் கலந்துரையாடுவதற்கு 'அரசுகளின் சம்மேளனம்' எனும் பெயரில் ஒரு மாநாடு இடம் பெற்றமை குறிப்பிடத்தக்கது. பின்னர் காலனித்துவ நாடுகளின் உறுப்பினர்களைக் கொண்டு 1944 ஆம் ஆண்டு பொதுநலவாய அமைப்பு தாபிக்கப்பட்டது.

பொதுநலவாய அமைப்பின் தோற்றத்திற்கு 1839 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட 'டர்ஹம் கொமிசன் அறிக்கை' காரணமாகியது. பிரித்தானிய காலனித்துவத்திலிருந்து சுதந்திரம் பெற்றுக் கொண்ட அனைத்து நாடுகளும் இதில் அங்கத்துவம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பது கட்டாயமல்ல. பொதுநலவாய அமைப்பின் தலைவர் பிரித்தானிய முடி ஆவார்.

**நோக்கங்கள் :**

- மனித இனத்தின் பாதுகாப்பு மற்றும் வளர்ச்சிக்குக் காரணமாகும் சர்வதேச ரீதியிலான சமாதானம் மற்றும் நட்புறவை மேம்படுத்துவதற்காகச் செயற்படுதல்
- சாதி, வர்க்கம், சமயம் போன்ற வேறுபாடுகளின்றி அனைவரினதும் உரிமைகளையும் சுதந்திரத்தையும் மேம்படுத்தும் பொருட்டுச் செயற்படுதல்
- தாம் வாழுகின்ற சமூகத்தை ஏற்படுத்திக் கொள்வதற்காக ஜனநாயக ஆட்சி முறைச் செயற்பாடுகளில் ஈடுபடுதலின் பொருட்டு அனைவரினதும் உரிமையை பெற்றுக் கொடுத்தலும் அபிவிருத்தி செய்தலும்
- வறுமை, அறியாமை, நோய் போன்றவற்றை ஒழித்தலும் மக்களின் வாழ்வா தாரத்தினை விருத்தி அடையச் செய்தலும்.
- யுத்தச் செயற்பாடுகளுக்குக் காரணமாகும் நிலைமைகளை அகற்றுவதற்காகச் சர்வதேச ஒத்துழைப்பை மேம்படுத்தி அநீதியை ஒழித்து மக்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல்.

- இனவாதம் மற்றும் குடியேற்ற வாதத்தை எதிர்த்து மனிதாபிமானம் மற்றும் சமத்துவத்தை மேம்படுத்தல்

## சர்வதேச உறவுகள் ஏற்படும் வழிமுறைகள்

உலக நாடுகள் தம் உறவுகளைப் பல்வேறு வகையில் மேற்கொள்கின்றன. விசேடமாக, இராஜதந்திர உறவு, இராணுவ உறவு என்பவற்றின் ஊடாக இந்தச் சர்வதேச உறவுகள் ஏற்படுகின்றன.

இராஜதந்திர உறவுகளில் சர்வதேச ரீதியாக பிரசைகள் நன்மை அடைகின்றனர். அவ்வாறான சந்தர்ப்பங்களின் போது அந்நியோன்ய விசுவாசமும் ஒத்துழைப்பும் வளர்ச்சி அடைவதோடு பிரச்சினைகளும் குறைவடைகின்றன.

சர்வதேச உறவுகள் மேற்கொள்ளப்படும் இரு பிரதான வழிமுறைகளை நோக்குவோம்.

1. **தூதுவர் சேவை**

நாடுகளுக்கிடையே உறவுகளைச் சிறப்பாக நடாத்திச் செல்வதற்குப் பிரதான ஊடகமாக தூதுவர் சேவை விளங்குகிறது. சர்வதேச உறவை மேம்படுத்துவதற்காகத் தூதுவர் சேவை அளப்பரிய சேவைகளை மேற்கொள்கிறது.

ஒரு நாட்டினது வெளிநாட்டுக் கொள்கைகளை உறுதியுடன் கொண்டு செல்வதுடன், நாடுகளுக்கிடையிலான உறவுகளையும் பலப்படுத்துவதற்குச் செயலாற்றும்.

பொதுநலவாய அமைப்பிற்கு உட்பட்ட நாடுகளது தூதுவர்கள் 'ஆணையாளர் நாயகம்' என்ற விசேட பெயரில் அழைக்கப்படுகின்றனர். உதாரணமாக: இலங்கையின் இந்திய தூதுவர் 'இந்திய ஆணையாளர் நாயகம்' என்று அழைக்கப்படுகின்றார்.

## தூதுவர்களின் பொறுப்புகள்

- தமது நாட்டு வெளிநாட்டுக் கொள்கைகளை வெளிப்படுத்தல்
- தமது நாட்டு பிரசைகளின் அபிலாசைகளைப் பாதுகாத்தல்
- தமது நாட்டைப் பற்றிய பிரதான விடயங்களை ஏற்படுத்திக் கொள்ளல்
- தமது நாட்டின் கருத்துகள் தொடர்பாக விளக்கமளித்தல்
- தமது நாட்டைப் பிரதிநிதித்துவப்படுத்தல்
- நாடுகளுக்கிடையில் நட்புறவை மேம்படுத்தல்
- அரசியல், சமூக, பொருளாதார மற்றும் கல்வி தொடர்பான உறவுகளை மேம்படுத்தல்
- தனது நாட்டையும் தனது நாட்டின் தலைவரையும் பிரதிநிதித்துவப்படுத்தல்

### தூதுவர்களுக்கு இருக்க வேண்டிய பண்புகள்

- தமது தொழில் சுதந்திரம், சட்டதிட்டங்கள், உபாயங்கள், நியாயங்கள், ஒழுக்கம் தொடர்பாக அவதானமாகச் செயற்படுதல்
- தமது நாட்டைப்போல் தாம் சேவை செய்கின்ற நாட்டினதும், சர்வதேச அரசியல் தன்மையினதும் விடயங்கள் தொடர்பாக அவதானமாகச் செயற்படுதல்
- அரச உபாயங்களான மத்தியஸ்தம் வகித்தல் (Arbitration) சமரசப்படுத்தல் (Concilation) மற்றும் பேரம் பேசுதல் (Negotiation) போன்றவற்றை அறிந்திருத்தல்
- சர்வதேசச் சட்டதிட்டங்கள் மற்றும் சர்வதேச அரசியல் நிலைமைகளைத் தமது நாட்டின் வளர்ச்சிக்காகப் பயன்படுத்திக் கொள்ளல்

2. **சர்வதேச வர்த்தகம்**

உலகின் எந்தவொரு நாடும் தனக்குத் தேவையான அனைத்தையும் தானே உற்பத்தி செய்து கொள்ள முடியாது என்பது தொடர்பாக நாம் ஏற்கனவே கலந்துரையாடினோம். இதனாலேயே ஏற்றுமதி இறக்குமதி செயற்பாடுகள் நாடுகளுக்கிடையே இடம் பெறுகின்றன.

உதாரணமாக, இலங்கை தேயிலையை ஏற்றுமதி செய்வதோடு, கோதுமையை ஐக்கிய அமெரிக்காவிடமிருந்து இறக்குமதி செய்கின்றது.

சர்வதேச வர்த்தகத்தை இரு வகையாகப் பிரிக்கலாம் அவை,

1. இரு பக்க வியாபாரம்
2. பல் பக்க வியாபாரம்

இரு நாடுகளுக்கிடையில் இடம்பெறும் வர்த்தகம் இரு பக்க வியாபாரம் எனப்படும். உதாரணமாக, இலங்கை, சீனாவிற்கு இறப்பரை ஏற்றுமதி செய்தலையும் சீனாவிலிருந்து அரிசியை இறக்குமதி செய்வதையும் குறிப்பிடலாம். இரு பக்க வியாபாரமானது தமக்கிடையே மேற்கொள்ளப்படும் ஒப்பந்தங்களின் அடிப்படையிலேயே இடம் பெறும்.

### பல் பக்க வியாபாரம்

இரண்டுக்கு மேற்பட்ட நாடுகள் இணைந்து மேற்கொள்ளும் வியாபாரம் பல்பக்க வியாபாரம் எனப்படும். இதன் முக்கியமான பண்பு என்னவெனில், ஒரு நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பொருள்களின் பெறுமதி வேறு ஒரு நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களது பெறுமதியினால் செலுத்துவதற்கு முடியுமானதாக இருக்கும்.




மேலே குறிப்பிட்ட வியாபாரப் பரிமாற்றத்திற்கு உதாரணமாக பின்வரும் செயற்பாட்டைக் குறிப்பிடலாம். இலங்கை நியூசிலாந்தின் பால்மாவை இறக்குமதி செய்வதற்காகச் செலுத்த வேண்டிய தொகையை, அமெரிக்காவிற்கு ஆடை ஏற்றுமதியின் ஊடாக கிடைக்கின்ற வருமானத்தின் மூலம் நியூசிலாந்திற்கு செலுத்துமாறு கூறலாம். இச்சந்தர்ப்பத்தில் நியூசிலாந்து அந்தப் பெறுமதிக்கு ஈடாக வேறு பொருளொன்றையோ அல்லது சேவையொன்றையோ ஐக்கிய அமெரிக்கா மூலம் பெற்றுக் கொள்ள முடியும்.

சர்வதேச வியாபாரத்தில் பயன்படுத்தப்படும் நாணயங்கள்

- அமெரிக்க டொலர்
- ஸ்ரேலிங் பவுன்
- யூரோ
- ஜப்பான் யென்

***சர்வதேச வியாபாரத்துடன் தொடர்புகொண்ட சர்வதேச அமைப்புகள்***

- ஐரோப்பியப் பொது வர்த்தக சங்கம்
- உங்டாட் (UNCTAD)
- கெட் (GATT)
- சர்வதேச வர்த்தக அமைப்பு

**செயற்பாடு 5 - 2**

- சர்வதேச வியாபாரத்திற்கான சர்வதேச அமைப்புகள் இரண்டினைத் தெரிவு செய்து அதன் அங்கத்துவ நாடுகளையும் அதன் நோக்கங்களையும் அட்டவணைப்படுத்துக.

## யுத்தம்

சர்வதேச உறவுகள் இடம்பெறுவதற்கு மற்றுமொரு காரணியாக யுத்தம் விளங்குகிறது. இது சமாதானத்திற்கான வழி முறை அல்ல. இரண்டு நாடுகள் அல்லது இரண்டுக்கு மேற்பட்ட நாடுகள் தமக்கிடையே ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்வதற்காக ஆயுதங்களைப் பயன்படுத்துமாயின் அதை யுத்தம் எனக் குறிப்பிடலாம். (10 ஆம் தரத்தில் குடியுரிமைக் கல்விப் பாடத்தில் 5 வது அத்தியாயத்தில் இதனைக் கற்றிருப்பீர்கள்) நாடுகளுக்கிடையே இடம் பெற்ற யுத்தத்திற்கு சிறந்த உதாரணமாக முதலாம் மற்றும் இரண்டாம் உலக மகா யுத்தங்களைக் குறிப்பிடலாம்.

யுத்தம் காரணமாக சர்வதேசத் தொடர்புகள் பெரும் சவாலை எதிர்கொண்டுள்ளன. அகதிகள் யுத்தத்தின் ஒரு விளைவாகும். அகதிகள் தமது நாட்டை விட்டு வேறு நாடுகளுக்கு இடம்பெயர வேண்டிய நிலை ஏற்படும் போது அவர்களைப் பராமரிக்க வேண்டிய தேவை அந்நாட்டிற்கு ஏற்படுவதனால் சர்வதேசத் தொடர்புகள் விருத்தியடையக் காரணமாக அமைகின்றது. அதனைப் போலவே சில நாடுகள் தமது நாட்டில் அகதிகளுக்கான அடைக்கலத்தினை வழங்கி அவர்களுக்கான தேவைகளைப் பூர்த்தி செய்வதனையும் காணலாம்.

மேலும், பாதிப்புற்ற கட்டடங்கள் மற்றும் ஏனையவற்றை மீண்டும் கட்டியெழுப்புவதற்கான உதவிகளையும் பெறலாம். இதனடிப்படையிலும் சர்வதேசத் தொடர்புகள் வளர்ச்சியடைகின்றன. இந்நிலைமை காணப்படாவிட்டால் யுத்தத்தின் பின்னர் மிகவும் மோசமான நிலையினை அரசுகள் எதிர்நோக்கும்.

தேசியப் பாதுகாப்பினை உறுதிப்படுத்திக் கொள்வதற்காகவும் தேவையான ஆயுதங்களைப் பெற்றுக் கொள்வதற்காகவும் சர்வதேச தொடர்புகள் மேலும் வலுப்பெற்று வருவதை நாம் காணலாம். தேசிய, சர்வதேச யுத்த நிலைமைகளின் மீது அவதானமாக இருக்கும் நாடுகளே தனது தேசியப் பாதுகாப்பினை உறுதிப்படுத்தக் கூடியதாக உள்ளது.

## உதவிகள்

வெளிநாட்டு உதவிகளைப் பெற்றுக் கொள்வதற்காக சர்வதேச உறவுகளை வலுப்படுத்த வேண்டியது அவசியமாகிறது. அபிவிருத்தி அடைந்த நாடுகள் அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளுக்கு இவ்வண்ணம் உதவிகளை வழங்குகின்றன.

உதாரணமாக, இந்தியா இலங்கையின் வடக்குப் பிராந்திய புகையிரதப் பாதையை விருத்தி செய்வதற்காக வெளிநாட்டு உதவியை வழங்கியமையைக் குறிப்பிடலாம்.




மகாவலித் திட்டம்



மொரகஹ கந்த நீர்த்தேக்கத் திட்டம்




வடக்கு புகையிரதப் பாதையும் பெருந்தெருவும்

கீழே உள்ள விளக்கப்படம் பல்வேறு வெளிநாட்டு உதவி முறைகளை காட்டுகின்றது.

**வெளிநாட்டு உதவி**



**வெளிநாட்டு உதவி வழங்கும் நாடுகள்**

- ஐக்கிய அமெரிக்கா
- இங்கிலாந்து
- ஜப்பான்
- இந்தியா

**வெளிநாட்டு உதவி வழங்கும் அமைப்புகள்**

- உலக வங்கி
- ஆசியா அபிவிருத்தி வங்கி
- சர்வதேச நாணய நிதியம்

**செயற்பாடு 5 - 3**

- சர்வதேச உதவி வழங்கும் நாடுகள் மூன்றையும் அமைப்புகள் மூன்றையும் தெரிவு செய்து அவற்றுடன் இலங்கைக்கு உள்ள தொடர்பினைத் தனித்தனியாக அட்டவணைப்படுத்துக.

**சமாதானம்**

நாட்டின் சமாதானமானது அனைவரினதும் மகிழ்ச்சிக்குக் காரணமாகிறது. மனித உரிமைகளைப் பாதுகாக்க வேண்டுமாயின் அரசியல், பொருளாதாரம், சமூக, கலாசாரம் போன்ற அனைத்து அம்சங்களிலும் சமாதானம் கட்டியெழுப்பப்படல் வேண்டும். நாட்டிற்குச் சமாதானத்தைப் பெற்றுக் கொள்வது அனைத்து பிரசைகளினதும் பொறுப்பாகும். இனம், மதம் என்ற வேறுபாடின்றிச் செயற்படும் போது சமாதானம் கட்டியெழுப்பப்படும். உலக சமாதானத்திற்காக ஐக்கிய நாடுகள் அமையம் மிகப் பெரிய பொறுப்பினை நிறைவேற்றி வருகின்றது.

## அபிவிருத்தி

நாட்டில் சமாதானம் கட்டியெழுப்பப்படும் போது அபிவிருத்தி அடையக் கூடிய நிலை தோன்றும். சமாதானம் அற்ற நாட்டிலே இராணுவ நிர்வாகம், ஆயுதக் கொள்வனவு, அங்கவீனர்கள் மற்றும் ஊனமுற்றோரைப் பராமரித்தல், பாதிக்கப்பட்ட குடியிருப்புகளை மீண்டும் கட்டியெழுப்புதல் போன்ற பல்வேறு விடயங்களுக்கு பாரிய நிதியை செலவழிக்க வேண்டிய நிலை ஏற்படும். நாடு தான் பெற்றுக்கொள்ளும் வருமானத்தை யுத்தத்திற்கு செலவழிக்கையில் அபிவிருத்திக்கான ஒதுக்கீடு குறைவடையும். அதனால் நாட்டின் அபிவிருத்தி மிக மோசமான நிலைக்குத் தள்ளப்படும். இவ்வாறான நிலைமை காணப்படாதவிடத்து ஒரு நாட்டினது அபிவிருத்தி வேலைத்திட்டங்களை முறையாக முன்னெடுக்க முடியும்.

இதனாலேயே, ஒரு நாட்டின் அபிவிருத்திக்கு யுத்தமற்ற சமாதானமானச் சூழல் அவசியமாகின்றது. இதன் மூலம், பொருளாதாரம் மற்றும் சமூக வளர்ச்சியானது மேம்படும்; வேலை வாய்ப்புகள் அதிகரிக்கும்; வாழ்க்கைத் தரம் உயர்வடையும்; சேமிப்பு அதிகரிக்கும்; நாட்டின் பொருளாதாரம் உறுதியடையும்.

## சர்வதேச உறவுகளின் விளைவுகள்

சர்வதேச உறவுகள் பின்வரும் விளைவுகளை ஏற்படுத்துகின்றன.

- சர்வதேச உறவுகள் விருத்தியடைதலும் அதன் மூலம் நட்புறவுகள் வளர்ச்சி காணலும்
- புதிய தொழில் வாய்ப்புகள் உருவாதல்
- அவசர நிலைமைகளின் போது நன்கொடை, மற்றும் உதவி பெறப்படல்
- புதிய தொழில்நுட்ப அறிவுப் பரிமாற்றம்
- அபிவிருத்தி செயற்றிட்டத்திற்காக தேவையான உதவிகள் கிடைக்கப் பெறுதல்